# பெரியபுராணச் சிறப்புப் பெயரகராதி

## ஊர்ப்பெயர்கள்

டாக்டர் தா.வே. வீராசாமி,
தொகுப்பியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்

தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 65

திருவள்ளுவர் ஆண்டு 2017 புரட்டாசி, செப்டம்பர் 1986

நூல் : பெரியபுராணச் சிறப்புப் பெயரகராதி
ஊர்ப்பெயர்கள்

ஆசிரியர் : தா. வே. வீராசாமி

பதிப்பு : முதற் பதிப்பு

விலை : உரூ. 75–00

அச்சு : சிவகாமி அச்சகம்,
அண்ணாமலைநகர்.

# முன்னுரை

**சிறப்பகராதிகள்:**

1. 1. அகராதிகள் சொற்பொருளை விளக்குவன. கலைக்களஞ்சியங்கள் என்பவை பல்வேறு உலகப் பொருள்கள், பெருமக்கள் நிலை, வாழ்வுத் துறைகள், கருத்தோட்ட வளர்ச்சி நிலை ஆகியவை பற்றி விரிந்த நிலையில் விளக்கி நிற்கும். இவை இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் கலைக்களஞ்சிய அகராதி நிலையில் சில நூல்கள் தொகுக்கப்பெறும். அவை சொற்பொருள் கூறும் சுருங்கிய நிலையில் அமையாமல், கலைக்களஞ்சியங்கள் போல விரிந்த அளவிலும் பொருளை விரித்துக் கூறாமல் இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் பொருள்களை வேண்டுமளவு விளக்கி நல்லறிவு பெறுதற்குத் துணைசெய்யும். மொழிக்குப் புறநிலையில் அமைந்த உலகியல் பொருள்களை அறிதற்கு இது உதவும். பரந்த நிலையில் இது நன்கு உருப்பெறும், எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்பச் சிறிய அளவிலும் அமையும்.

1. 2. கலைக்களஞ்சியப் பண்பு நலன்கள் பெரும்பாலும் எல்லா அகராதிகளிலும் கலந்து காணப் பெறும் என்பது உண்மையே. ஏனெனில் தொகுப்பாளர் தாம் தொகுக்கும் நூலில் அதன் ஒரு சில பண்புகள் அமையுமாறு பணி புரிவார். பெயர்களைத் தொகுக்கும் போது ஓரளவு களஞ்சிய விளக்கம் தருவதைத் தவிர்க்க இயலாது. பெயர் அகராதிகளில் பல, கலைக்களஞ்சியப் பண்பு நலன்கள் உடையன. இடப் பெயர்கள் பற்றிய கலைக்களஞ்சிய அகராதிகள் வெளிவந்துள்ளன. அவற்றை ஆங்கிலத்தில் 'கெசட்டீர்' (gazetteer)[1]

---

1. இன்று அரசின் ஒப்புதல் பெற்று மாவட்டங்கள் பற்றிய பல செய்திகளைக் கொண்ட கையேடாகவும் அரசின் ஆணைகளை வெளியிடும் இதழாகவும் இது விளங்குகின்றது.

என்றழைப்பர். இடப்பெயர்களிலும் மலை, ஆறு, நிலம் முதலிய பெயர்களை விலக்கி ஊர்ப் பெயர் என்ற அளவில் இத்தொகுப்பு வரையறை செய்து கொண்டுள்ளது. குறிப்பிட்ட காலத்தைச் சேர்ந்த குறிப்பிட்ட ஆசிரியர் நூலில் காணும் ஊர்ப் பெயர்கள் பற்றியும், அந்நூலில் அவ்வூர்ப்பெயர்கள் தொடர்பான செய்திகள் பற்றியும், அவ்வூரில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பற்றியும் இந்நூலில் காணலாம்.

**இடப்பெயர்த்தொகுப்பு:**

1. 3. 1. இடப் பெயர் பற்றிய செய்தி தமிழறிஞர்கட்குப் புதிதன்று. பண்டைக்காலச் சங்கப் புலவர்களின் பெயருடன் ஊர்ப் பெயர்கள் முன்னிணைப்பாக உள்ளன. 1 அரிசில்கிழார், 2 அள்ளூர் நன்முல்லையார், 3 ஆடுதுறை மாசாத்தனார், 4 ஆலங்குடி வங்கனார், 5 ஆலத்தூர்கிழார், 6 ஆவூர் கிழார், 7 உறையூர் இளம்பொன் வாணிகனார், 8 எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், 9 ஐயூர் முடவனார், 10 ஒக்கூர்மாசாத்தியார், 11 கூடலூர் கிழார் போன்ற சில புறநானூற்றுப் புலவர்களின் பெயர்களில் சோழநாடு (1,3,7,8,9), பாண்டிநாடு (2,10), சேரநாடு (11) ஆகிய நாடுகளைச் சேர்ந்த ஊர்கள் உள்ளன. ஆலங்குடி, ஆலத்தூர், ஆவூர் என்ற பெயருள்ள ஊர்கள் தமிழகத்தில் பல உள்ளன.

1. 3. 2. 1. சிலப்பதிகாரத்தில் 22 ஊர்ப் பெயர்கள் நூலினகத்தே காணப்படுகின்றன.[2] வானுலக ஊர்ப் பெயர்கள்

---

2. 1. ஆடகமாடம் 26,62 — 2. இடும்பில் 28.118
3. உறந்தை 8.3 — 4. கபிலபுரம் 23.141
5. காப்பியக்குடி 30.83 — 6. கொடும்பை 11.71
7. கொற்கை 14.80 — 8. சிங்கபுரம் 23.140
9. செந்தில் 24(8) — 10. தங்கால் 23.75
11. தலைச்செங்கானம் 15.11 — 12. (திரு)அரங்கம்11.6

2 உள (சேடி 6. 1** வாணன் பேரூர் (சேர) 6.54) புகார் நகரத்தின் இரு பகுதிகளின் பெயர்களும் கிடைக்கின்றன. 'குணவாயில்' என்ற பெயர் இக்காப்பியத்தில் 'பகல் செல் வாயில்' எனக் குறிக்கப் பெறும். இதன் பெயரை இலக்கிய நயம்பட இவ்வாறு நூல் கூறும் (30.179). அடியார்க்குநல்லார் உரை இதனை ஊர் என எடுத்துரைக்கும். இதனையும் ஊர் எனக் கொள்ளின் சிலம்பில் 23 ஊர்ப் பெயர்கள் வந்துள்ளன எனலாம். இவை தவிர, உரைப்பகுதியில் இலங்காபுரம், உஞ்சை போன்றவை உள்ளன.

1. 3. 2. 2. இந்நூலினகத்து, 'தலைச்செங்கானம்' என்றுள்ளதற்கு அடியார்க்குநல்லார் 'தலைச்செங்காடு என்னும் ஊர்' என உரை கூறியுள்ளார். இதனைத் 'தலைச்செங்காடு என்பது காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்மேற்கே நான்கு நாழிகை வழித் தூரத்திலுள்ள தேவாரம் பெற்ற சிவஸ்தலம்' என உ.வே. சாமிநாதையரின் அடிக்குறிப்புக் கூறும்.[3] தேவாரத்தில் 'தலைச்சங்கை' எனவே குறிக்கப் பெறும்.[4]

13. தொண்டி 14.107
14. நெடுங்குளம் 11.71
15. நேரிவாயில் 28.117 (பட்டினப்பாக்கம் 5.58)
16. பறையூர் 28.76
17. புகார் 20.56 (மருவூர்ப்பாக்கம் 5.39)
18. மதுரை 8.3
19. மாங்காடு 11.53
20. வஞ்சி 8.4
21. வயலூர் 23.119
22. வாரணம் 15.178

உ.வே. சாமிநாதையர் பதிப்பில், உரையில் காணும் ஊர்ப்பெயர்களும் சேர்த்து 36 பெயர்கள் காணப்படுகின்றன. - சிலப்பதிகாரம், உ.வே. சாமிநாதையர் பதிப்பு, 1978, ப. xxiii

** சிலப்பதிகாரக்காதை, வரி எண்களைக் குறிக்கும்.

---

3. சிலப்பதிகாரம், உ.வே. சாமிநாதையர், 9-ஆம் பதிப்பு, 1978, ப. 399.

4. மூவர் தேவாரம், திருப்பனந்தாள் பதிப்பு, 1968, பக். 653-655.

சேக்கிழாரின் பெரிய புராணத்தில் 'தலைசை' (2015)[5] என இவ்வூர் குறிப்பிடப் பெறுகிறது. இங்குள்ள கோயிலை 'அணிநற் சங்கத்தின் தருமுறை நெறியக் கோயில்' (2017)[6] எனச் சேக்கிழார் கூறுவது கோயிலமைப்பால் ஊர்ப்பெயர் வடிவையும் காண வழி செய்கிறது. இதனால் இவ்வூர்ப்பெயர் மாறிவருவதை அறிய முடிகிறது.

**பெரியபுராண ஊர்ப்பெயர் ஆய்வு:**

2. 1. 1. பெரியபுராணம் தோன்றுதற்கு முன்னரே அப்பரின் 'க்ஷேத்திரக் கோவை'த் திருத்தாண்டகமும் (மூவர் தேவாரம், திருப்பனந்தாள் பதிப்பு, 1968, பக். 1505–1511) ஐயடிகள் காடவர்கோனின் 'க்ஷேத்திரத் திருவெண்பாவும்' திருத்தலங்கள் பற்றி ஓரளவு அறிய வழி செய்வன ஆகும். இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் திரு. வ. த. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் எழுதிய 'சிவஸ்தல மஞ்சரி' என்ற நூல் 1905ஆம் ஆண்டு (170 சிவத்தலங்களுக்கு மேலாக அவர் நேரில் கண்டறிந்த பின்) வெளிவந்ததாகும். அவர்மறைந்தபின் தலவிசேடம், குறிப்புரை ஆகியவற்றுடன் 1912–இல் மேலும் விரிவாக இந்நூல் வெளி வந்தது. மூன்றாம் பதிப்பு 1931-இல் வெளிவந்தது. மேலும் இது 1958-இல் விரிவாக்கப் பெற்றது. அவர் மகன் சண்முகம் தாம் நேரில் கண்டு வணங்கிய தலங்களையும் சேர்த்து 257 தலங்கள் பற்றிய செய்திகளுடன் நான்காம் பதிப்பு வெளிவந்தது. சோழநாட்டில் காவிரிக்கு வடகரையிலுள்ள ஊர்கள், தென்கரையிலுள்ள ஊர்கள் மேலும் ஈழநாடு, தொண்டை நாடு, துளுவ நாடு, வட நாடு ஆகியவற்றில் உள்ள ஊர்கள் ஆகியவற்றைத் தனித்தனியே பகுத்தளிக்கிறது.

---

5. திருத்தொண்டர் புராணம் IV, சி.கே. சுப்பிரமணிய முதலியார். உரை, 1949. ப. 143. இப்பதிப்புத் தொகுதிகளில் காணும் எண் இந்நூல் முழுதும் பின்பற்றப்பெறும்.

6. திருத்தொண்டர் புராணம் IV ப. 144

தேவாரத்தில் மூவர் பாடலில் காணும் ஊர்களையும், இருவர் தேவாரங்களில் காணும் ஊர்களையும், ஒருவர் தேவாரத்தில் மட்டும் காணும் ஊர்களையும் தனியே வகுத்துக் காட்டிப் பின் அவ்வவ்வூர் பற்றிய குறிப் பிடத்தக்க செய்திகளை அகரவரிசைப் பட்டியலில் இந் நூல் தந்துள்ளது. பின் அகரவரிசையில் அவ்வவ்வூர்க்கு விரிந்த விளக்கங்கள் நல்கும். புராணக்கதை, கோயில் விளக்கம், அரிய பாடல்கள் ஆகியவை இதனுள் காணப்பெறுவது சிறப்பாகும்.

**வளர்ச்சி நிலை:**

2. 1. 2. கழகப் புலவர் குழுவினரால் தேவாரப் பாடல் பெற்ற 274 திருப்பதிகளுக்குச் செல்லும் வழி, அவை இருக்கும் இடம், அங்குள்ள சிறப்புக்கள் ஆகியவற்றைக் குறிக்கும் வகையில் 'சிவப்பதிகள் வரலாறு' என்ற நூல் 1977ஆம் ஆண்டு வெளிவந்தது. இது 'சிவஸ்தல மஞ்சரி' போலப் பொருளைப் பிரித்துக் காட்டியதுடன் முருகன் உறையும் பதிகள் பற்றிய தனிப்பகுதியையும் கொண்டுள்ளது. ஒவ்வொரு ஊரிலும் உள்ள கோயில் இறைவன் இறைவி பெயர்கள், தீர்த்தம், தலமரம், பதிகம், புராணச் செய்திகள், கோயில் அமைந்துள்ள நிலை ஆகியவற்றைப் பற்றி வேண்டுமளவு கூறியுள்ளது. ஊர்களுக்கு வழங்கும் பெயர்களை அடைப்புக் குறியினகத்து அளிப்பதுடன், பக்கத்தேயுள்ள சிறப்புக் குரிய ஊர்க்கும் மற்ற ஊர்க்குமுள்ள தூரத்தைச் சுட்டிக்காட்டி அதன் அமைப்பு நிலையை உணர்த்து வது சிறப்பாகும். பல்வேறு புகைப்படங்களை இணைத்திருப்பது இதன் தனிச் சிறப்புகளில் ஒன்று.

**சிவக்கவிமணி உரைத்துணை:**

2. 1. 3. சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் எழு திய திருத்தொண்டர் புராண உரையில் பெயர் விளக் கம் என்ற தலைப்பில் எல்லாப் பெயர்களையும் தொகுத்துள்ளார். அவற்றுள் ஊர்ப்பெயர்களும்

தொகுக்கப்பெற்றுள்ளன. அப்பெயர்களுக்கு அருகே பெரியபுராணப் பாட்டின் வரிசை எண் குறிக்கப் பெற்றுள்ளது. ஊர்களின் மிக இன்றியமையாத சிறப்பையும் அவற்றின் மரூஉப் பெயர்களையும் தந்து நூற்கண் அவை பற்றிய விளக்கப் பகுதிகளைப் பக்க எண்ணுடன் உரையாசிரியர் குறித்துள்ளார்.

2. 2. 1. சில சமயங்களில் சிவனடியார் புராணத்தின் தொடக்கத்தில் ஊர்ப்பெயர் கூறப் பெற்றிருப்பின் அது பற்றிய விரிவான குறிப்பை அடிக்குறிப்பில் தந்துள்ளார். இளையான்குடி மாறநாயனார் புராணத்தின் முதற் பாட்டில் (440) இவ்வூர்ப் பெயர் அமைந்துள்ளது. இதுபற்றிய அடிக்குறிப்பில் இது எங்கு அமைந்துள்ளது, இதனை அடைய எந்தப்புகைவண்டி நிலையத்திலிருந்து எவ்வளவு தூரம் செல்ல வேண்டும் என்ற குறிப்புகள் உள. மேலும் இப்பெயருள்ள மற்ற ஊர்கள் தமிழகத்தில் அமைந்துள்ள இடங்களையும் சுட்டியுள்ளார்.[7]

**ஓரூர் - பல பெயர்கள்:**

2. 2. 2. திருஞானசம்பந்த நாயனார் புராணத்தில் அவர் பிறந்த ஊர்க்குரிய பன்னிரு பெயர்களும் ஒரே பாடலில் (1912) அமைந்துள்ளன. அப்பெயர்கள் பற்றிய புராணக்கதைகளையும் மற்றுமுள்ள செய்திகளையும் அவ்விடத்திலேயே உரையாசிரியர் எழுதியுள்ளார்.[8]

**விளக்கநிலை:**

2. 2. 3. சிலசமயம் நாயன்மார்களின் புராணம் முடிந்தபின் இறுதியில் உரையாசிரியர் சிலவற்றைக் குறிப்பிடுவார். சத்திநாயனார் புராண இறுதியில் வரிஞ்சையூர் உள்ள இடம், செல்லும் வழி, கோயிலில் அமைந்துள்ள சிறப்புப் பற்றிய குறிப்புகள் உள்ளன.[9]

---

7. தி. தொ. புராணம் I சு. உரை, 1960, ப. 547
8. தி. தொ. புராணம் IV சு. உரை, 1949 பக். 22-24
9. தி. தொ. புராணம் VII சு. உரை 1954 ப. 343

சில புராணங்களின் சரிதச்சுருக்கம் எழுதித் தல விசேடம் விரிவாகவும், சுருக்கமாகவும் குறிக்கப்பெறும். ஏயர்கோன் கலிக்காமரின் ஊராம் திருப்பெருமங்கலம் பற்றிய செய்திகள் இந்நிலையில் அமைந்துள்ளன.[10]

**வழிநிலை:**

2. 2. 4. பெரியபுராணத்தில் காணும் பல ஊர்களுக்கு இவ்வுரையாசிரியர் நேரே சென்று அவ்வூர்கள் பற்றி வழங்கும் பல்வேறு புராணக்கதைகளைத் தொகுத்துள்ளார். அவ்வூரிற்கு எவ்வழியே நாயன்மார் வந்தனர், எவ்வழியில் அவ்வூரை நீங்கிச் சென்றனர் என்பன போன்ற செய்திகளை நன்கு குறித்துள்ளார். அந்தந்த ஊர்களின் அமைப்பு, அவ்வூர்க்கோயில் அமைப்பு, கோபுரங்கள், அவற்றிலுள்ள குறிப்பிடத்தக்க சிலைகள் போன்றவற்றை விளக்க ஏராளமான புகைப்படங்களையும், விளக்கப் படங்களையும் இணைத்துள்ளமை உரையாசிரியரின் ஈடிணையற்ற உழைப்பையும், பொருள் விளக்கத்தின்பாற் கொண்ட பேரார்வத்தையும் காட்டும்.

**வரலாற்றுப் பின்னணி:**

2. 3. 1. ஊர்களுக்குரிய வரலாற்றுச் செய்திகளைத் துடிசைக் கிழார் அ. சிதம்பரனார்[11], கோவை கிழார் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார்[12], மா. இராசமாணிக்கனார்[13] ஆகிய வல்லுநர்களைக் கொண்டு வேண்டிய குறிப்புகளைத் தனித்தனியே தம் உரையகத்துத் தந்துள்ளார். இவ்வாறு, பெரியபுராண ஊர்ப்பெயர்கள் பற்றி அறிவதற்கு வேண்டும் செய்திகள் புறநிலையில் விரிவாகக் கிடைக்கின்றன.

---

10. தி. தொ. புராணம் சு. உரை 1953, பக். 456 i, ii, ப. 457
11. தி. தொ. புராணம் I சு. உரை 1960, ப. 632
12. தி. தொ. புராணம் III சு. உரை 1943, பக். 767, 771, 773, 774
13. தி. தொ. புராணம் VII சு. உரை 1954, பக். 371-374

**பெரியபுராணம் – பொதுச் செய்திகள்:**

*3. 1. 1.* பெரியபுராணம் என்ற திருத்தொண்டர் புராணம் சேக்கிழார் பெருமானால் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றது. சைவர்களால் போற்றப்பெறும் பன்னிரு திருமுறைகளில் இது கடைசித் திருமுறையாகும் தொண்டை மண்டலத்தைச் சார்ந்த குன்றத்தூரில் பிறந்த அருண்மொழித் தேவ ராம் சேக்கிழார், அனபாயன் என்னும் சோழமன்னன் அவையில் அமைச்சராகப் பணியாற்றி வந்தார். சமண சமயத்தின்பால் ஈர்க்கப்பெற்ற அம்மன்னனைச் சைவ சமயத்திற்கு ஈர்க்கப் பெரியபுராணத்தைச் சேக்கிழார் இயற்றினார் என்பர்.[14] ஆயின் இந்நூலை முழுமை யாகப் படித்துப்பார்க்கும்போது அத்தகைய சமய மாற்றப் போக்கில் சேக்கிழார் இயற்றியதாகத் தெரியவில்லை.[15] இந்நூலில் இரண்டு காண்டங்கள் உள்ளன. இவற்றில் பதின்மூன்று சருக்கங்கள் உள்ளன. இந்நூலில், சி. கே. சுப்பிரமணிய முதலியார் உரை எழுதிப் பதிப்பித்தவண்ணம் மொத்தம் 4281 பாடல் கள் உள்ளன.

*3. 1. 2.* இவற்றில் அறுபத்தி மூன்று தனி அடியார்களும், ஒன பது தொகை அடியார்களும் பற்றிய வரலாறு காணப் பெறும். மூவரில் நம்பியாரூரராம் சுந்தரர் பாடிய 'திருத்தொண்டத்தொகை' யில் காணும் அமைப்பு முறையை ஒட்டியும், நம்பியாண்டார் நம்பிகளின் 'திருத்தொண்டர் திருவந்தாதி'யினைப் பின்பற்றியும் பெரியபுராணம் உருவாகியுள்ளது. மேலும் இந்நூலுக்கு அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் முதலிகள் அருளிய தேவாரமும் அடிநிலையாகும்.

*3. 1. 3.* இந்நூலின் செய்யுட்களில் சிறப்பாக அறுசீர்க்கழி

---

14. திருத்தொண்டர் புராண வரலாறு 21, உமாபதி சிவாசாரியார், தி. தொ. பு. I சு. உரை, 1960, ப. 58

15. பெரியபுராணம், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் உரை, முருகவேள் புத்தகசாலை, சென்னை, 1934, ப. vi.

நெடிலடி ஆசிரிய விருத்தமும், தரவு கொச்சகக் கலிப் பாவும் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன. அடுத்துக் கலித்துறை, கலிவிருத்தம், வஞ்சி விருத்தம் போன்ற வகைகளும் காணப்பெறுகின்றன.

**பதிப்புகள்:**

*3. 2. 1.* மழவை மகாலிங்கையர் இந்நூலை 1843- ஆம் ஆண்டு பதிப்பித்தார். அதைத் தொடர்ந்து பல பதிப்புகள் வெளிவந்தன. திரு. வி. கலியாண சுந்தரனாரின் குறிப் புரை இந்நூலுக்குப் பெரிதும் பயன்தரும் உரையாகும். கோயமுத்தூர் சி. கே. சுப்பிரமணிய முதலியாரின் 'பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணம்' எல்லா உரைகளையும் விஞ்சும் பேருரையோடும் 1937- இல் முதல் தொகுதியிலிருந்து 1954- இல் ஏழாம் தொகுதி வரை விரிந்த அளவிலும் சிறந்தபதிப்பாகப் பல்வேறு நலன்களமைந்த நூல்வடிவில் வெளிவந்தது.

**கன்னடம் - தெலுங்கில் பெரியபுராணக் கதைகள்:**

*3. 2. 2.* தமிழகத்தின் அண்டை மாநிலங்களையும் பெரியபுரா ணம் கவர்ந்துள்ளது. கன்னடக் கவிஞர் அரிகரர் பதின்மூன்றாம் நூற்றாண்டில் அறுபத்து மூவர் பற் றிப் (புராதனர ரகளே) பாடினார். சுந்தரர் பற்றிய பாடல்கள் 'நம்பியண்ணன ரகளே' என்ற பெயரில் புகழ் பெற்று விளங்குகிறது.

திரு. கெடிலையா பெரியபுராணத்தைக் கன்னடத்தில் மொழிபெயர்த்துள்ளார்.[16] தெலுங்கு மொழியில் 'அறுவத்து மூவரு நாயனார்லு' என்ற பத்தி இலக்கி யம் வெளிவந்துள்ளது. பால்குருகி சோமநாதர் இவ் வடியார்களின் வரலாற்றைத் தெலுங்கில் வடித்துத் தந்துள்ளார். அடியார் பெயர்களில் சில, பெரிய புரா ணத்தில் உள்ளவாறன்றித் தெலுங்கில் மாறுபட்டுள்

16. Prof. V. I. Subramoniam, 'Tamil Studies in India Otherthan Tamilnad' 1966, p. 7

ள ன.[17] பேராசிரியர் ஸ்ரீகண்டையா அவர்களுடன் உரையாடிய போது கன்னட இலக்கியம் வாயிலாகப் பெரியபுராணச் செல்வாக்கை அறிய இயலும் என இத்தொகுப்பாசிரியர் அறிந்தார்.

**பெரியபுராணத்தில் நானில ஊர்கள்:**

4. 1. 1. பெரியபுராண நூலாசிரியர் தொண்டை நாட்டைச் சார்ந்தவர். எனவே தாம் இயற்றிய இப்புராணத்தில் தொண்டை நாட்டுத் தலங்கள் பற்றித் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் விரித்துரைத்துள்ளார். அந் நாட்டில் நானில வருணனையைக் கூறும் போது அந்த அந்த நிலத்திற்குரிய சீறூர் (குறிஞ்சி), பாடி (முல்லை), ஊர் (மருதம்), வைப்பு (நெய்தல்) [18] என்பவற்றைப் பொதுவாக முதலில் சுட்டிய பின்னர் நானிலப் பகுதி யில் உள்ள ஊர்களைத் தனியே விரித்துச் செல்கிறார். அவையாவன:

| | | |
|---|---|---|
| குறிஞ்சி | 1. திருக்காளத்தி | (1089) [19] |
| | 2. திருவிடைச்சுரம் | (1090) |
| | 3. திருக்கழுக்குன்றம் | (1091) |
| முல்லை | 1. திருமுல்லைவாயில் | (1095) |
| | 2. கலிகைமாநகர் | (1096) [20] |
| மருதம் | 1. வல்லம் | (1107) |
| | 2. மாற்பேறு | (1108) |
| | 3. பாசூர் | (1109) |

---

17. Athilakshmi, 'Tamil Nayanars in Telugu Literature' 'Tamil Culture', Vol. VI. No:1., Jan., 1957, pp. 71-77.

18. நெய்தலுக்குரிய ஊர்கள் பட்டினம் - பாக்கம் என வழங்கப்பெறும். வைப்பு என்பது பொதுப்பெயர். திருத்தொண்டர் புராணம் 1086 சு. உரை, 1940 ப. 1409.

19. சி. கே. சுப்பிரமணிய முதலியாரின் பெரிய புராணப் பதிப்பில் காணும்செய்யுள் எண். இதுவே இந்நூல் முழுதும் பின்பற்றப்பட்டுள்ளது.

20. தக்கோலம் எனவும் திருவூறல் எனவும் வழங்கப்பெறும்.

நெய்தல் 1. திருவொற்றியூர் (1116)
2. திருமயிலாபுரி (1117)
3. திருவான்மியூர் (1117)

**காஞ்சிப் பெருமை:**

4. 1. 2. நானில மயக்கம் பொதுப்படக் கூறிய சேக்கிழார் தொண்டை நாட்டில் யாவரும் புகழ்கின்ற ஒழுக்கத் தில் விளங்கிய நிலையுடைய காஞ்சி மாநகரத்தை (1125) விரித்துக் கூறுகிறார். இவ்வூர், சிவபெருமானை நோக்கி உமை தவம் செய்ய வந்த சிறப்பிற்குரியது. அம்மையைச் சோதிக்க இறைவன் இவ்வூர்க் கம்பை யாற்றில் வெள்ளம் பெருகுமாறு செய்ததனால் இறை வனுருவை அம்மை தழுவிய புராணச் செய்தியை மிக விரிவாகப் பாடிச் செலகிறார். அம்மை நாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறம் செய்ததை அறிவது டன் இவ்வூரிலுள்ள திருக்காமக்கோட்டம் (1149) உலகாணித் தீர்த்தம் (1150), புண்ணிய தீர்த்தம் முதல் பல தீர்த்தங்கள் (1156), தாமரைத்தடம், உறங்காத, காயாத புளியமரம் (1156), பல கிணறுகள், பிலங்கள் (1157), விநாயகர் முதலிய தெய்வங்கள் (1158), காரி சென்டணை வெளி (1159), சிறப்புமிக்க பீடங்கள் (1160), உருத்திர சோலை (1161) ஆகிய நீர்நிலை, மரங்கள், தெய்வங்கள், சிறப்பிடங்கள் பற்றி அறியவும் வாய்ப்புளது.

4. 1. 3. கரிகாற் சோழன், வேடனொருவன் கூறியதால் இவ் விடத்தின் சிறப்பை உணர்ந்து மக்களைக் குடியேற்றிய சிறப்பையும், மதில், அகழி, வாயில், மாளிகை, தெருக் கள், ஒப்பனை நிலை, செல்வ நிலை ஆகிய சிறப்பை யும் விரிவாகப் பெரியபுராணம் காட்டும்.

4. 1. 4. நால்வகை வருணத்தார் வீதிகளில் மக்கள் புரியும் தொழில் வகைகள், வாழ்க்கை நிலை பற்றி அறியலாம் (1176-1179). காஞ்சி வீதிகளில் விழா அணிகள் நாளும் ஒழியாச் சிறப்பு முதலியவற்றைக் கூற 63 பாடல்கள்

பாடியுள்ளார் சேக்கிழார். இவ்வாறு பெருமைமிக்க காஞ்சிபுரம் பற்றி விரிவாகக் காட்டுவதால் அக்கால ஊரின் தோற்றம், வளர்ச்சி, அமைப்பு நிலை, மக்கள் வாழ்வு, பத்திநிலை ஆகியவற்றை நன்கறிய முடிகிறது. திருக்குறிப்புத்தொண்டர் பற்றிய வரலாறு இவ்விளக் கத்திற்குப்பின் 18 செய்யுட்களில் முடிகிறது. இதனால் சேக்கிழார் தம் தொண்டை நாட்டு ஊர்வளம் காட்டுவதில் கொண்ட பேரார்வம் நன்கு புலப்படும்.

**புராணச் செய்திகள்:**

*4. 2. 1.* சேக்கிழார் தம் காலத்தில் வழங்கிய புராணச் செய்தி களை வேண்டுமளவு தாம் எடுத்துக் கொண்ட பொரு ளின் சிறப்புக் குறையாமல் இருக்குமாறு கூறிச் செல் வதைக் கோச்செங்கட் சோழ நாயனார் புராணத்தில் திருவானைக்காவைப் பற்றிய வெள்ளானை - சிலந்திக் கதையை (4197-4202) எடுத்துரைப்பது கொண்டு அறிகிறோம். இத்தகைய சிறப்புரைக்கும் போக்கு, பிற்காலத்தில் பல நூற்றுக்கணக்கான தலபுராணங்கள் எழுவதற்கு வழி செய்தது. அவற்றின் வளர்ச்சிக்குப பிறப்பு நிலையாகப் பெரியபுராண ஊர்ப்பெயர்ச் செய்திகள் அமைந்துள்ளன.

**இடப்பெயராய்வு:**

*5. 1. 1.* இடப்பெயராய்வு மேலைநாடுகளில் 1840 - க்குப் பின்னரே வளர்ச்சி அடையக் காண்கிறோம்.மொழிநூல் வளர்ச்சி இதற்குத் துணையாக அமைந்தது. போயெ சுதர்மன் (Foestermann) ஐசக் டய்லெர் (Issac Taylor) போன்றவர்களின் முயற்சிகள் ஊர்ப்பெயராய்வு செழிக்க உரமூட்டின.

**ஊர்ப்பெயர்நிலை**

*5. 1. 2.* பொது மக்களிடம் இடப்பெயராய்வு பற்றிப் பல தவறான எண்ணங்கள் பரவியுள்ளன. ஊர்ப்பெயரில் அமைந்துள்ள சொற்களுக்கு மேலோட்டமாகக் காணும்

பொருள் நிலையால் பல தவறுகள் எழுந்தன. அவற்றைப் போக்க, உண்மை உழைப்பாளிகளின் முயற்சி துணை செய்தது. இக்காலப் பெயரும் பண்டைய வடிவமும் முற்றிலும் மாறியிருக்கவும் வாய்ப்புண்டு. இடைநிலையில் மாறுபட்டிருக்கவும் இயலும். இயல்பாகவும் இருக்க வாய்ப்புண்டு. இவற்றை யெல்லாம் முறையாக ஆராயின் எதிர்காலத்தில் உண்மை காண இயலும்.

**தலைச்சொல்:**

5. 2. 1. சேக்கிழார் தம் பெரியபுராணத்தில் வழங்கிய ஊர்ப் பெயர்கள், 'தலைச்சொல்'லாக ஏற்கப் பெற்றுள்ளன.

**மாற்றுவடிவங்கள்:**

5. 2. 1. 1. அவ்வூர்ப் பெயர்களின் மாற்று வடிவங்கள், மரூஉப் பெயர்களாய் வழங்கும் வடிவங்கள், பெரு வழக்கில் காணப்பெறும் அவ்வூர்க்குரிய வேறு பெயர்கள் ஆகியன சிறப்பு நலம் குறித்துத் தலைச்சொல்லின் இடமுகமாக (Lemma) அடைப்புக் குறிக்குள் அமைக்கப் பெற்றிருக்கும்.

5. 2. 1. 2. தலைச்சொல்லுக்குரிய எழுத்து வடிவம் நன்கு தெரியும் வகையில் தரப் பெறும். இது, ஒருமொழி அகராதி ஆகையால் ஊர்ப் பெயர்களுக்குரிய ஒலிப்பு முறை தனியே தரப்பெறவில்லை.

5. 2. 1. 3. ஊர்ப் பெயர்கள் அனைத்துமே பெயர்ச்சொற்களாக இருப்பதால் அவற்றிற்கெனப் பெயர் என்ற தனி இலக்கணக் குறிப்பும் தரவில்லை.

**திரு-முன்னடை:**

5. 2. 2. 1. இவ்வாறு பெரியபுராண ஊர்ப்பெயர்களின் இடமுகம் அமைவதையும் சமய மரபுக்கேற்ப மங்கலச் சொல்லாகத் 'திரு' என்ற அடைமொழி சேர்த்த வடிவையும் இப்பகுதியில் தனியே காணலாம். பொதுவாக வழக்காற்றில் ஊர்ப் பெயர்களுடன் 'திரு' சேர்த்து

வழங்குவது மரபு.அகர வரிசையில் இச் சிறப்புப் பெயர் அகராதி அமைந்துள்ளதால் முன்னடையாம் 'திரு' உய்த்துணர வாய்ப்புள்ளது கொண்டு, பெயர்கள் இயல்பாக அகர வரிசையில் தரப்பெற்றுள்ளன.

**நாடு:**

5. 2. 2. 2. தலைச்சொல் விளக்கமாக 'வலமுகம்' அமைந்துள்ளது. ஓர் ஊர், அக்காலத்தில் எந்த நாட்டில் உள்ளது எனப் பெரியபுராணம் கூறிய நெறியைப் பின்பற்றி, முதல் விளக்கம் அமையும். அந்நெறி, அவ்வூர் அமைந்தது சோழ நாடு, |பாண்டிய நாடு, |சேரநாடு,| நடு நாடு,| தொண்டை நாடு எனக் குறிக்கப் பெறும். எனினும் இவ்வாறு பிரித்துக் காட்டும் வழக்கு இன்றில்லை. இருப்பினும் பழைமையை நினைவூட்டும் வகையிலும், பெரியபுராணப் பின்னணியைப் புலப் படுத்தும் வகையிலும் இவ்வாறு குறிக்கப்பெறும்.

**இயற்கை அமைப்பு:**

5. 2. 3. 1. பெரியபுராணத்தில் ஓர் ஊரின் இயற்கை அமைப்பு கூறப் பெற்றிருப்பின் அது எளிய முறையில் எடுத்துக் கூறப் பெறும். ஆற்றங்கரையில் ஊரமைந்திருப்பின் அதுவும் குறிக்கப் பெறும்.

| ஊர் | ஆறு |
| --- | --- |
| அதிகை | கெடிலம் |
| அரத்துறை | நிவா |
| ஆவடுதுறை | காவிரி |
| இருக்குவேளூர் | வடவெள்ளாறு |
| மதுரை | வைகை |

**காவிரிக்கரை:**

5. 2. 3. 2. தமிழ் நாட்டில் பேராறாகப் பெருகிச் செல்லும் காவிரியை நடுவணதாகக் கொண்டு காவிரியின் வடகரையிலுள்ள ஊர், காவிரியின் தென்கரையிலுள்ள ஊர்

எனக் காட்டும் மரபுளது. அக்காலத்தில் சிவனடியார் களும் தம் புனிதப் பயணத்தைக் காவிரிக் கரையை ஒட் டியே மேற்கொண்டனர். அதுவும் அவ்வாறு வகுத்துக் கொள்ள வழிகாட்டியிருக்கும். அம்மரபை ஒட்டி, ஊர் இருப்பது காவிரிக்கு வடகரையா அல்லது தென்கரையா என்பது குறிக்கப்பெறும். இதனால் இவ்வூர்கள் அனைத் தும் காவிரிக் கரைமேல் அமைந்தவை எனக் கொள்ள இயலாது. காவிரிக்கு வடபக்கம் அல்லது தென்பக்கம் அவ்வூர் அமைந்திருப்பதை நாம் உய்த்து உணர்ந்து கொள்ள இயலும்.

**செய்திநிலை:**

5. 3. 1. 1. குறிப்பிட்ட ஊரில் ஒரு சிவனடியார் பிறந்து சிவப் பேறு பெற்றிருப்பின் அச்செய்தி மட்டும் சுருக்கமாகச் சுட்டப் பெறும் (அம்பர்).

5. 3. 1. 2. சில ஊர்களில் சிவனடியார் பலர் கூடிச் செல்வர் அத்தகைய இடங்களில் எந்தெந்த அடியார்களுடன் யார் யார் சென்றனர் என்பது விளக்கமாக அமைந் திருக்கும்.

| ஊர் | அடியார் |
|---|---|
| அகத்தியான் பள்ளி | சுந்தரர்-சேரமான்பெருமாள் |
| புகலூர் | திருநாவுக்கரசர் |
| | திருஞானசம்பந்தர் |
| | முருகநாயனார் |
| | சிறுத்தொண்ட நாயனார் |
| | திருத்தொண்டர் குழாம் |

5. 3. 1. 3. சில ஊர்களுக்குச் சிவனடியார்களில் யார் முன்னர்ச் சென்றார்; யார் அவர் பின் சென்றார்; எவ்வாறு சென்றார் என்ற செய்திகள் விளக்கமாக அறியும் வகையில் பெரியபுராணம் கூறும் நெறியில் கூறப் பெறும்.

| | | |
|---|---|---|
| ஆரூர் | முன்: | திருநாவுக்கரசர் |
| வாய்மூர் | பின்: | திருஞானசம்பந்தர் |

**அருஞ்செயல்கள்:**

*5. 3. 2. 1.* அடியவர் வருத்தம் கண்டு இறைவன் செய்த அருட் செயல்கள் பற்றிப் பெரிய புராணம் கூறும் நெறியில் விளக்கமாகச் செய்திகள் அவ்வத் தலைச்சொற்களின் கீழ் அமைந்திருக்கும். சான்றாக அஞ்சைக்களம், அதிகை, ஆரூர், ஐயாறு, ஒற்றியூர், கச்சி, காழி, காளத்தி, தில்லை, புகலூர், மதுரை, மறைக்காடு, முதுகுன்று, வீழிமிழலை ஆகிய ஊர்களின் பதிவுகள் உள.

**வருகை நிலை:**

*5. 3. 3. 1.* இவ்வாறு ஊர்ப் பெயரகத்துச் செய்திகளை அளிக்கும் போது பெரும்பாலான பதிவுகளில் திருநாவுக்கரசர் (அப்பர்) பற்றிய செய்திகள் முதலிடம் பெறும். அவர் தம் மூத்த நிலையும், மற்ற அடியார்களால் அவர் மதிக்கப் பெற்ற நிலையும் கருத்தில் கொள்ளப் பெற்றதால் இந்நிலை அமைகிறது. அடுத்துத் திருஞான சம்பந்தர் பற்றிய செய்திகள் இடம் பெறும். அடுத்துச் சுந்தரரும் (நம்பி ஆரூரர்) மற்ற அடியார்களும் இடம் பெறுவர். இதில் மூவர் முதலிகள் பற்றியவை முதலிலும் மற்றவர் செய்திகள் அடுத்தும் அமைந்துள்ளமை சைவ வரலாற்றுடன் வழக்காற்றிற்கேற்பவும் அமைந்துள்ளது எனலாம். காலத்தால் மூத்த அடியார் பிறந்த ஊராயின் அவ்வடியார் செயல் அப்பதிவில் முதலிடம் பெறும் (கடலூர்).

**தேவாரக் குறிப்பு:**

*5. 3. 4. 1.* மூவர் சென்ற ஊர்களில் உள்ள இறைவன் மீது அவர்கள் தேவாரம் பாடிய குறிப்பு, பெரியபுராணத்தில் இருப்பின் அது குறிக்கப் பெறும். சில சமயம் சேக்கிழார் பொதுவாக மூவர் முதலிகள் பாடிச் சென்ற செய்தியை மட்டும் குறிப்பிட்டுள்ளார். அங்குத் தேவாரம் பற்றிய குறிப்பு இல்லையாயினும் தேவார முதற்குறிப்புச் சுட்டப் பெறும். மூவர் அத்தலத்தில் பாடிய தேவாரப் பாடல்கள் கிடைக்காதிருந்தால்

அச்செய்தி அடைப்புக்குறிக்குள் அமையும். இந் நிலைக்குக் காரணம், நின்றியூரில் சுந்தரர் இறை வனைப் பாடித் துதித்த போது, அப்பர் 4900 பதிகம் பாடிய செய்தி தெரிகிறது. ஊர் பற்றிய இத்தகைய செய்திகளைப் பெறுவதால் தேவார வரலாறும், எத் தலப் பதிகங்கள் கிடைக்கவில்லை என்ற செய்தியும் கிடைக்க வாய்ப்புள்ளது.

**காழியின் பெயர்கள்:**

5. 3. 5. 1. திருஞானசம்பந்தர் பிறந்த (சீ)காழி எனும் ஊர்க் குப் பன்னிரு பெயர்கள் பெரியபுராணத்தில் உள்ளன (1912). அப் பெயர்கள் பற்றிய செய்திகள் பெரிய புராணத்தில் மிகுதியாக உள்ளன. அப் பெயர்கள் பற்றிய தொன்மைக் கதைகளும் பல உள்ளன. ஆதலால் அப் பெயர்களைத் தனித்தனியே கொடுப்பது சிறந்தது என எண்ணி அவ்வாறு அவ்வப் பெயர்களுக்குரிய செய்திகள் அளிக்கப் பெற்றுள்ளன. அப்பன்னிரு பெயர் களின் மொத்தச் செய்திகளையும் ஒன்றாகத் திரட்டி னால் காழி பற்றிய முழுமையான செய்திகளை அறிய முடியும்.

**உலகிலில்லா ஊர்கள்:**

5. 3. 2. 3. இவ்வுலகில் உண்மையில் இல்லாத ஊர்களின் பெயர் கள் பெரியபுராணத்தில் வழங்கப் பெற்றுள்ளன. அவ் வூர்ப் பெயர்கள் தேவர்களின் ஊர்ப் பெயர்களாம். அவையும் ஊர்ப் பெயர்களாக இருப்பினும் கற்பனை ஊர்கள் எனக் காட்டுவதற்கு அவற்றின் முன்னர் உடுக் குறி (*) அமைந்திருக்கும். அவ்வூர்ப் பெயர்கள் பெரிய புராணத்தில் எப்பயன் நோக்கி ஆளப் பெற்றுள்ளன என்பதும் குறிக்கப் பெறும்.

**இருப்பிடம்:**

5. 4. 1. பெரியபுராணத்தில் காணும் ஊரின் இருப்பிடத்தை

---

* அளகாபுரி (குபேரன் நகரம்) – உவமை (சிவனடியார்க்குப் பயன் படும் நிலை)

நாம் அறிய அதனருகில் அமைந்துள்ள எல்லோர்க்கும் நன்கு தெரிந்த புகைவண்டிச் சந்திப்புள்ள ஊர்ப் பெயர் அல்லது நிலையப் பெயர் முதலில் குறிக்கப் பெறும். பின்னர் அது அவ்விடத்திலிருந்து எத்திக்கிலுள்ளது (வடக்கு (வ)/ தெற்கு (தெ)/ மேற்கு (மே)/ கிழக்கு (கி)/ வடமேற்கு (வ. மே)/ வடகிழக்கு (வ. கி)/ தென்மேற்கு (தெ. மே)/ தென்கிழக்கு (தெ. கி)) என்பது அடுத்துக் குறிக்கப் பெறும். இதனால் பெரிய புராணத்தில் காணும் ஊர் இன்று அமைந்துள்ள இடத்தையும் அதனை அடைதற்குரிய வழியையும் புகைவண்டிக் கால அட்டவணை கொண்டு எளிதில் அறிய இயலும்.

**5. 4. 2.** ஓர் ஊரின் இருப்பிடத்தைக் குறிக்கச் சென்னை நகரைக் கொண்டு அறியும் நிலை ஏற்படின் சென்னைச் சந்திப்பு என்பது மைய நிலையத்தையும் (Central Station) சென்னை - எழும்பூர் என்பது அந்நகரத்தின் மற்றொரு பகுதியிலுள்ள நிலையத்தையும் குறிக்கும்.

காண்க: மல்லை
அச்சிறுபாக்கம்

**5. 4. 3.** பெரியபுராணத்தில் வழங்கும் பெயர்களிற் சில அக்காலத்தில் மட்டும் வழங்கப் பெற்று இன்று வேறு பெயர்களால் புகைவண்டிக் கால அட்டவணையில் சுட்டப் பெறும். ஊர்களின் இருப்பிடத்தைச் சுட்டும் போது பழைய பெயர்களைக் கூறாமல் இன்று வழங்கும் பெயர்கள் குறிக்கப் பெறும்.

| பழைய பெயர் | இன்றைய பெயர் |
|---|---|
| கச்சி | காஞ்சிபுரம் |
| காழி | சீர்காழி |
| குடந்தை | கும்பகோணம் |

| | |
|---|---|
| தவத்துறை | லால்குடி |
| தில்லை | சிதம்பரம் |
| முதுகுன்றம் | விருத்தாசலம் |

**வேறுபெயர் – தனிப்பதிவு:**

5. 5. 1 சில சமயம் பெரியபுராணத்தில் ஓர் ஊர்க்குரிய வேறு சில பெயர்களைச் சேக்கிழார் சிறப்புக் கருதிக் கூறிச் செல்வார். அப்பெயர்களையும் தனிப்பதிவாகத் தந்து அவற்றிற்குரிய முதல் விளக்கம் பெற்ற தலைச் சொல்லைத் தனியே காணுமாறு குறிக்கப் பெறும்.

(எ. டு) ஆதிபுரி - காண்க: ஒற்றியூர்

மேலும் அப்பெயரின் கீழ் அதற்கென அமைந்த சிறப்புச் செய்திகள் தனியே கூறுவதற்கு உரியவை எனின் அச் செய்திகள் கொடுக்கப் பெறுவதுடன் தலைப்பதிவையும் காணுமாறு குறிப்பிருக்கும்.

(எ – டு) புலியூர்

5. 5. 2. ஓர் ஊர்க்குரிய பெயர், பெரியபுராணத்தில் காணும் வகையில் வழங்கப் பெறாமல் இன்று வேறு பெயரால் வழங்கப் பெறும். அவ்வாறு ஒரே ஊர்க்குப் பல பெயர்கள் கூடச் சிலசமயம் வழங்கி வரும். இன்று அப் பெயர்களைப் பெரியபுராணத்தில் காண்பன வற்றுடன் ஒன்றுபடுத்தி அறிய அவை தனியே அளிக்கப் பெறும். பெரியபுராணத்தில் ஏமப்பேறூர் எனக் காணும் ஊர்ப்பெயர் இன்று திருமப்பற்று, நெய்ப்பேறு என வழங்கி வருவது இதற்குத் தக்க சான்றாம்.

5. 5. 3 நாட்டின் பல இடங்களில் ஒரு பெயருள்ள பல ஊர்கள் இருப்பது தவிர்க்க இயலாது. வடநாட்டில் 'அனேகதங் காவதம்' என்னும் ஊர் இருப்பது போலவே தமிழ கத்திலும் அப்பெயருள்ள ஊரைப் பெரியபுராணத்தில் காண முடிகிறது. முன்னதிலிருந்து இவ்வூரினை வேறு

படுத்திக் காட்ட வேண்டி இதற்கு அண்மையில் அமைந்துள்ள நாடறிந்த நகரின் பெயரை முன்னிணைப் பாகச் சேர்த்துக் 'கச்சி அனேகதங்காவதம்' எனச் சுட்டப் பெறும். இதனால் எந்த ஊர் என அறியும் வகையில், 'ஒருபெயர் வடிவ மயக்கம்' தவிர்க்கப் பெறுகிறது.

5. 5. 4. ஊர்ப் பெயரில் அமைந்த அடைமொழி பற்றிய விளக்கம் அவ்வூரின் இருப்பிடத்தை உணர ஒருவகையில் துணை செய்யும். மருத மரம் ஓர் ஊரின் பெயராக அமைவதுடன் அவ்வூர்ப் பெயரை இடைமருது என அழைக்கும் போது, 'இடை' என அடைமொழி அமைந்ததற்கு விளக்கம் தரப்பெறுகிறது. வடநாட்டில் உள்ள மல்லிகார்ச்சுனம், தெற்கே பாண்டி நாட்டில் உள்ள திருப்புடைமருதூர், இவ்விருவூர்களுக்கும் இடையே உள்ள இடைமருது ஆகிய மூன்றிற்கும் மருது தலமரம் ஆதலால் அவற்றினின்று இதனை வேறுபடுத்திக் காட்டும் வண்ணம் இது இடை மருது (1457) எனக் குறிக்கப் பெறும். இன்று இதனைத் திருவிடைமருதூர் என்பர்.

5. 5. 5. இவ்வூர்களுக்குச் சில சமயம் ஒரே பெயர் அமைந்திருக்கும். அப்போது அவ்விரு ஊர்களையும் வேறு படுத்திக் காட்டத் திசைப்பெயர்களை அடையாகத் தந்து அவற்றின் இருப்பிடம் கொண்டு அறியத் துணை செய்வர்.

(எ. டு) குரங்காடுதுறை (தென்)
வடகுரங்காடுதுறை
காட்டுப்பள்ளி (மேலை)
கீழை (த்திருக்) காட்டுப்பள்ளி

5. 5. 6. பெரியபுராண ஊர்ப் பெயர்கள் முன்னர் வழங்கி வந்திருக்கவும் இன்று அவ்வாறு வழங்கப்படாத அவ்வூர்கள் எங்கு இருந்தன என்பதை அறியும் வகையில் சில செய்திகள் குறிக்கப் பெறும். சான்றாகக்

கழிப்பாலை என்ற ஊர் கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்ற இடத்தில் இருந்தது எனக் குறிக்கப் பெறும்.

**மரூஉ நிலை:**

*6. 1. 1.* சில ஊர்களின் பெயர்கள் மருவி வழங்கப்படும் பெயர்களுடன் பெரிய புராணத்தில் காணப் பெறும். அவை தனிப் பதிவாக இடம் பெறும் போது அதற்குரிய இயற்பெயரை அறியும் வகையில் குறிப்புக் காணப் பெறும். இயற்பெயரினை ஒட்டிய அடைப்புக்குறியின் அகத்தும் மருவி வழங்கப்பெறும் பெயர்கள் இருக்கும்.

| எ. டு: ஊர்ப் பெயர் | | மரூஉப் பெயர் |
|---|---|---|
| இளையான்குடி | — | இளசை |
| கடம்பூர் | — | கடம்பை |
| சாத்தமங்கை | — | சாந்தை |
| தலைச்சங்காடு | — | தலைசை |
| நாகப்பட்டினம் | — | நாகை |

பெரியபுராணத்தில் மிகக் குறைந்த அளவில் இத்தகைய மரூஉப் பெயர்கள் காணப்படுகின்றன.

**கருத்து வேறுபாடு:**

*6. 2. 1.* இளையான்குடி என்றபெயருள்ள ஊர்கள் தமிழகத்தில் மூன்றுள்ளன. பெரியபுராணத்திலுள்ள இளையான்குடி மாறநாயனார் பிறந்த ஊர் எந்த இளையான்குடி என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. பாண்டி நாட்டைச் சேர்ந்த இளையான்குடியில் முளைவாரி அமுதளித்த விழா நடைபெற்று வருகிறது. இவ்வூரார் இளையான்குடி மாறநாயனாரின் செயலைப் போற்றும் விழா தம்மூரில் நடப்பதால் நாயனார் பிறந்தவூர் தம்மூர் என்பர்.

சோழ நாட்டில் திருநள்ளாற்றுக்கு மேற்கே உள்ள இளையான்குடியில் இப்புராணத்தில் காணும் முளை

வாரிக் குட்டை (நாற்றங்கால்) இருப்பதால் நாயனார் பிறந்த ஊர் இவ்வூர் என்பர்.

தொண்டை மண்டல சதகத்தைக் கொண்டு நாய னாரின் இளையான்குடி தொண்டை மண்டலத்தில் உள்ளது என்பர் சிலர். இவ்வூர் எது என அறியாத நிலையில், இவ்வாறு பல கருத்துக்கள் காணும் போது எது என முடிவு செய்ய முடியவில்லை என்ற கருத்து, குறிக்கப் பெறும்.

**தெரியாத நிலை:**

*6. 2. 2.* சில ஊர்ப் பெயர்கள் பெரியபுராணத்தில் காணப் பெறுகின்றன. ஆனால் அவை இன்றுள்ள இடம் தெரியவில்லை. அவை குறித்து வேறு நம்பகமான செய்திகளும் கிடைக்கவில்லை. நூலினகத்து, அத்தகைய ஊர்கள் பற்றிக் கிடைக்கும் செய்திகள் அவ்வாறே அந்த அந்த ஊர்களின் பதிவுகளின் கீழே கொடுக்கப் பெற்றுள்ளன.

(எ. டு) குறும்பொறையூர்
தலையூர்

**விளக்கக் குறிப்பு:**

*6. 3. 1.* சில ஊர்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இன்றியமையா தவையாக இருக்கும். ஆயின் அவை பெரியபுராணத்தில் விளக்கமாகக் குறிக்கப்படாமலிருந்தால் அவை தனியே அடிக்குறிப்பில் காட்டப் பெறும்.

(எ. டு) பழையனூர் — நீலிகதை
வைப்பூர் — வணிகன் கதை

**திருவாரூர்:**

*6. 3. 2.* பெரிய புராணத்தில் காணும் சில ஊர்ப் பெயர்கள் பற்றிய செய்திகள் மிக விளக்கமாக நூலினகத்து

அமைந்திருக்கும். எடுத்துக்காட்டாக ஆரூர் பற்றிய விளக்கங்களைக் காணலாம்.

நூலின் தொடக்கத்தில் திருநகரச் சிறப்புப் பகுதியில் திருவாரூர்த்திருநகர் எனக் கூறி இங்கு நிகழ்ந்ததாக மனுவின் கதையைச் சேக்கிழார் விரிவாகக் கூறியுள்ளார். சுந்தரர்க்குத் தோழமையால் பரவையிடம் இறைவன் தூது சென்ற நிகழ்ச்சி இவ்வூரில் நடை பெறுகிறது.

விறன்மிண்டர், நமிநந்தி அடிகள், தண்டி நாயனார் சோமாசிமாறர் போன்றவர்களின் வாழ்க்கை வரலாறுகள் இவ்வூரினை ஒட்டியே வளர்ந்துள்ளன. இவ்வூரில் நடை பெற்ற ஆதிரை நாளின் சிறப்பைத் திருநாவுக்கரசர் வாயிலாகக் கேட்டு அதைப் பார்க்கத் திருஞானசம்பந்தர் செல்லல், பங்குனி உத்திரவிழா இவ்வூரில் நடப்பதைக் காணச் சுந்தரர் ஒற்றியூரிலிருந்து பல துன்பங்களை அடைந்து இங்கு வருதல் போன்ற நிகழ்ச்சிகளால் இவ்வூரின்பால் அடியார் கொண்ட தொடர்பு நன்கு புலப்படும். பரவைக்காகச் சுந்தரர் நெல்லும் பொன்னும் பெறுதல், சேரமான் பெருமாள் சுந்தரரைக் காண இவ்வூர்க்கு வருதல், இவ்வூர்க் கோயிலில் இறைவனுக்குரிய மலரை நுகர்ந்ததற்காக தன் அரசியைக் கழற்சிங்க நாயனார் தண்டித்தல் போன்ற நிகழ்ச்சிகள் இவ்வூர் பற்றி அறிய விரிந்த களம் அமைத்துத் தருவதால் இது பற்றிய விளக்கம் மிக விரிவாகக் காணப்பெறும்.

**6. 3. 3.** மாறாகச் சங்கமங்கை, தலையாலங்காடு, நியமம் போன்ற ஊர்கள் பற்றி ஓரிரு தொடர்களே காணப்பெறும். நூலில் காணும் செய்திகள் பற்றி இப்பதிவுகள் அமைவதால் இது தவிர்க்க இயலாது.

**புராணச் செய்திகள்:**

**7. 1. 1.** இச்சிறப்பகராதியில் காணும் ஊர்ப் பெயர்களைப்

பற்றிய புராணச் செய்திகள் பதிவின் கீழே தரப் பெற்றுள்ளன. மொத்தம் 106 ஊர்களின் புராணச் செய்திகள் பல புத்தகங்களில் காணும் செய்திகளாகும். அவை அவ்விடத்திலேயே அடிக்குறிப்புடன் தரப் பெற்றுள்ளன. இத்தொகுப்பாளர் நேரில் சென்று தொகுத்த செய்திகளுக்கு அடிக்குறிப்புத் தராமல் விடப்பட்டிருக்கும்.

7. 2. 1. ஒவ்வொரு ஊர்ப்பெயர் பற்றியும் பழங்கதைகள் மக்களிடம் வழங்கி வருகின்றன. அவற்றைப் பற்றிப் பெரியபுராண நூலாசிரியர் குறிப்பிட்டிருந்தால் அவை பதிவின் அகத்தில் பெரியபுராணச் செய்யுள் எண்ணுடன் குறிக்கப் பெறும். அவ்வாறன்றிப் புற நிலையில் திரட்டிய செய்தி எனின் அது அடைப்புக் குறியுள் தரப் பெறும்.

7. 2. 2. ஓர் ஊர்க்கு ஒரு கதை வழங்கி வருவதே பெரும்பான்மை ஊர்கட்குப் பொருந்தும். ஓர் ஊர்க்கு இரு கதைகள் வழங்கி வருவதுமுண்டு. (அச்சிறுபாக்கம், கஞ்சனூர், குடவாயில், சிராப்பள்ளி, செங்காட்டங்குடி, நின்றியூர், பாசூர், பூந்தராய், மங்கலம், வக்கரை, வெங்குரு முதலிய ஊர்கள்)

7. 2. 3. இருவூர்களுக்கு ஒரே கதை வழங்குவதும் உண்டு. (ஓமாம்புலியூர்-வைகாவில், மயிலாடுதுறை-மயிலாப்பூர் முதலிய ஊர்கள்) ஊர்கள் பற்றிய புராணக் கதைகள் இம்மூவகையில் வழங்கி வருவதை மேலும் பார்க்கும் போது

இறைவனாம் சிவபெருமான்,
உமை,
விநாயகர், நந்தி,
திருமால், பிரமன்,
இந்திரன் முதலிய தேவர்கள்,
முனிவர்கள்,
அரசர், மக்கள்,
விலங்கு, பறவைகள்,

அரக்கர்கள்,
இதிகாச மாந்தர்,
ஊழி வெள்ளம்
ஆகிய தலைப்புகளில் வகுத்துக் காண முடிகிறது.

7. 2. 3. 1. சிவபெருமானின் வில்லேந்திய கோலம் (விற்கோலம்) மழு எடுத்தாடிய செயல் (மழுவாடி/மழபாடி)[21] பற்றியும், அடியார்க்கும் தேவர்கட்கும் அருள் புரிதல் (நெல்வேலி, பறியலூர்), தீயோரை அழித்தல் (விற்குடி) பற்றியும் ஊர்ப் பெயர்கள் விளக்கம் தருகின்றன. இதற்கு இறைவனின் வடிவமும், செயலும் அடிப்படையாய் அமைகின்றன.

எளிய மக்களுக்குதவும் வகையில் சிவன் அருள் புரிவதைத் திருமணம் புரி நிகழ்ச்சியிலும் (அவளிவணல்லூர், எதிர் கொள்பாடி, மணஞ்சேரி), கருவைக் காப்பாற்றுவதிலும் (கருகாவூர்) காட்டுவர். அறியா வேடனுக்குச் சிவனருள் செய்ததை ஓமாம்புலியூர், வைகாவில் பற்றிய ஒரே கதை சுட்டும்.

7. 2. 3. 2. உமையம்மை இறைவனைத் தழுவி முத்தமிட்டது (சத்தி முத்தம்/ சத்தி முற்றம்)[22] பந்தாடியது (பந்தணை நல்லூர்) பற்றிப் பெயர்க் காரணம் கூறப் பெறும்.

7. 2. 3. 3. விநாயகர் சிவனை வணங்கி (அனேகதங்காவதம்) மாம்பழம் பெற்ற நிகழ்ச்சி (கடிகுளம்) கயமுகனை அழித்த பழி நீங்குதல் (செங்காட்டங்குடி) ஆகிய வற்றைக் காட்டுவர். இவற்றில், காரணம் ஊர்ப் பெயரளவில் பொருந்தவில்லை.

7. 2. 3. 4. இது போன்றே காளி, அம்பனை அழித்து (அம்பர்), வக்கிரனைக் கொன்று பாவம் தீரச் சிவனை வணங்கிய கதை (வக்கரை) வழங்கும். காளியால் அழிக்கப் பெற்ற அரக்கர் பெயர்களை ஊர்ப் பெயராக்குவர்.

---

21. மழபாடியை மழுவாடி எனவும் அழைப்பர்.

22. சத்திமுற்றத்தைச் சத்திமுத்தம் எனவும் அழைப்பர்.

7. 2. 3. 5. திருமால் எடுத்த கூர்மம் (தண்டலை நீணெறி), வராகம் (அரதைப் பெரும்பாழி, சிவபுரம், பூந்தராய்) வாமனன் (மாணிகுழி) அவதாரங்களில் சிவனை அவ்வவ்வூர்களில் வணங்கியதாகக் கூறிச் சிவன் பெருமையை உயர்த்துவர். வராக அவதாரம் பற்றிய கதைகளே இதில் மிகுதியாகக் காணப்படுகின்றன. சிவனிடம் திருமால் வணங்கிச் சக்கரம் பெற்றதாகவும் (சக்கரப்பள்ளி) கூறுவர். (இது பற்றி வேறொரு கதையுமுண்டு.)

7. 2 3. 6. பிரமனைச் சிவன் எரித்து உயிர்ப்பித்தல் (கடவூர் மயானம்), பிரமன் உயிர்களைப் படைக்கச் சிவன் வர மளித்தல் (மயானம்) என்பவற்றால் பிரமனினும் சிவன் உயர்ந்தவர் எனக் காட்ட ஊர்ப் பெயர்க் கதைகள் உதவுகின்றன.

7. 2. 3. 7. தேவர்களில் இந்திரன் பற்றிய கதையே பல ஊர் களுடன் தொடர்பு படுத்திக் கூறப்பெறுகிறது. இந்திரன் சிவனை வணங்கிக் (இந்திர நீலப் பருப்பதம், மயேந்திரப்பள்ளி) குற்றம் நீங்குதல் (கருப்பறியலூர், மங்கலம்) மணலில் இலிங்கம் செய்தல் (கைச்சினம்), சிவனை எடுக்க முயன்று தோற்றல் (கடம்பை), வணங்கி வீடுபேறு பெறுதல் (நெறிக்காரைக்காடு) ஆகியவற்றால் தேவர் தலைவனின் குறையைச் சுட்டி அவனும் உய்யச் சிவனை வணங்க வேண்டும் எனக் காட்டுதற்கு ஊர்ப்பெயர்களில் காரணம் காணும் முயற்சி புலப்படும்.

7. 2. 4. 1. முனிவர்கள் சிவனைப் பூசிக்கப் பல ஊர்கட்குச் சென்றனர். அவை பின் வருமாறு:-

| | | |
|---|---|---|
| அகத்தியர் | — | அகத்தியான் பள்ளி |
| உரோமர் | — | கழுமலம்* |
| கபிலர் | — | சண்பை* |
| திருணபிந்து | — | குடவாயில் |
| தீர்க்கவாகு | — | குறுக்கை |

| | | |
|---|---|---|
| துவட்டா | — | மாதோட்டம் |
| பராசரர் | — | கொச்சைவயம்* |
| பிருகு | — | ஆடானை |
| பிருங்கி | — | வேணுபுரம்* |
| புலிக்காலர் | — | பெரும்புலியூர் |

(*சம்பந்தர் பிறந்த ஊர்க்குரிய பெயர்கள்)

**7. 2. 4. 2.** இப்பெயர்களுடன் முனிவர்களுக்கு எவ்விதத் தொடர்புமில்லை. எனினும் புராணக் கதையினைக் கூறி அவற்றை முனிவர்களுடன் தொடர்புண்டாக்கிச் சிவனருள் பெற வழி அமைப்பது இதன் நோக்கம் எனத் தெரிகிறது. அகத்தியர் பற்றிய கதைகளை ஊர்ப் பெயர்களுடன் மிகுதியாகத் தொடர்புபடுத்தியுள்ளனர். (அகத்தியான் பள்ளி, அழுந்தூர், குறும்பலா). இதில் நேரிடையாக ஓர் ஊர்க்கு மட்டும் பெயரளவில் தொடர் பிருக்கிறது. மற்ற இரண்டும் முறையே அகத்தியர் பெருமையையும், அவர் திருமாலுருவைச் சிவலிங்கமாக மாற்றிய வலிமையையும் காட்ட அமைந்துள்ளன.

**7. 2. 5. 1.** அரசர்கள் பெயருடன் ஊர்ப் பெயரை இணைக்கும் போது பாண்டியன் கொணர்ந்த மணல் வண்டி அச்சு முறிந்ததால் அச்சிறுபாக்கத்துடன் அச்செயலை இணைப்பர். மாறாக முப்புரம் எரித்த போது பூமித் தேர் அச்சு முறிந்த கதையாகவும் கூறுவர். சோழ அரசர்களோடு தொடர்புபடுத்திக் காட்டுவன பல ஊரின் பெயர்களாம். (காறாயில், நின்றியூர், பாசூர், புறவார்பனங்காட்டூர், மாகறல் முதலியவை.)

**7. 2. 5. 2.** விலங்குகளும் பறவைகளும் சிவனை வணங்கிப் பேறு பெற்றதாகக் கூறும் செயலுடன் தொடர்புடைய ஊர்ப் பெயர்கள் வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| **விலங்கு:** | கழுதை | — | கரவீரம் |
| | யானை | — | ஆனைக்கா |
| | சிலந்தி, பாம்பு, யானை | — | சீகாளத்தி |

| | | | |
|---|---|---|---|
| பறவை: | கரிக்குருவி | — | வலிவலம் |
| | கழுகு | — | கழுக்குன்று |
| | சக்கரவாகப்புள் | — | சக்கரப்பள்ளி |

**விலங்கு, பறவை:**

குரங்கு, அணில், காகம் - குரங்கணின்முட்டம் இவற்றைக் காணும் போது ஊர்ப் பெயர்களில் அமைந்த பொருட் பொருத்த அடிப்படையில் உரு வாக்க முனைந்த கதைகள் இவை எனலாம்.

7. 2. 6. 1. அரக்கர்களின் பெயர்களின் அடிப்படையில் சிராப் பள்ளி, வக்கரை என்ற ஊர்கள் முறையே திரிசிரன், வக்கரன் பெயர்களால் உருவாகியதாகக் கொள்வர்.

**இதிகாசச் செய்தி:**

7. 2. 7. 1. இதிகாசங்களாம் இராமாயணம், பாரதம் ஆகிய இரண்டில் இராமாயணக் கதை மாந்தர்களையே இங்கு மிகுதியாக ஊர்ப் பெயர்களோடு இணைத் துள்ளனர்.

**இராமாயணம்:**

| | | |
|---|---|---|
| இராமன் | — | இராமேச்சரம் |
| | | உசாத்தானம் |
| | | சேது |
| | | திலதைப்பதி முத்தம் |
| வாலி | — | குரங்காடுதுறை |
| இராவணன் | — | கோகரணம் |

**பாரதம்:**

| | | |
|---|---|---|
| தருமன் | — | தருமபுரம் |
| அருச்சுனன் | — | விசயமங்கை |
| பாண்டவர் | — | அறையணிநல்லூர் |

இரு இதிகாசங்களிலும் இராமாயணத்தில் தலைவன் சிவனை வணங்கியதாகக் காட்டும் நோக்கமே மிகுந்

துள்ளது. இதிகாச மாந்தர் கட்டியதாகச் சேதுவையும் அறையணிநல்லூரையும் கருதுவர். இது இதிகாச மாந்தர் மீது மக்கள் கொண்ட மதிப்பைக் காட்டும்.

**ஊழி வெள்ளம்:**

7. 2. 7. 2. இவை தவிர, ஊழி வெள்ளத்துடன் தொடர்புபடுத்தி ஊர்ப்பெயர்களைக் காட்டும் முயற்சி பெரிதும் காணப்படுகிறது.

| | | |
|---|---|---|
| கலயநல்லூர் | — | ஊழிக்கால வெள்ளத்தில் உயிர்கள் அடைத்த கலயம் தங்குதல் |
| குடமூக்கு | — | அக்கலயத்தின் மூக்கு இருந்த இடம் |
| தோணி | — | ஊழிக்காலத்தில் பிரணவ மாகிய தோணி, இறைவன் இறைவியுடன் இருக்க மிதத்தல் |
| நீடூர் | — | ஊழிக்காலத்தில் அழியா திருந்த ஊர் |
| புறம்பயம் | — | ஊழிவெள்ளம் இதனகத்து வாராமல் புறத்தே நிற்றல் |

ஊழியுடன் தம் ஊர்களை இணைத்து அவ்வெள்ளத்தில் அவை அழியா நிலை பெற்றன எனச் சுட்டும் விருப்பை இது சுட்டும். இத்துடன் சிவனின் அழியாப் பெருமை யையும் இணைக்கும்.

7.2.7.3. இயற்கையில் காணும் மலைச் சிகரங்களை, வாயு ஆதிசேடன் பலம் காணும் போட்டியில் சிதறி வீழ்ந்த மேருச் சிகரங்களாகக் கூறுவது மற்றொரு நிலை. (கோணமலை, சிராப்பள்ளி).

7.2.7.4. ஊர்ப் பெயர்களுடன் இவ்வாறு புராணக் கதையை இணைப்பதால் ஊர்ப் பெருமை மிகும் எனப் பெரிய புராண காலத்திற்குப் பின்னர் வந்த மக்கள் எண்ணி னர் என்பது இதனால் நன்கு புலப்படுகிறது. ஆயின் பெரியபுராணத்தில் அகச்சான்றாக இத்தகைய புரா ணக் கதைகள் பெரிதும் காணப் பெறவில்லை. ஊரு டன் தொடர்புடைய புராணக் கதை (ஆனைக்கா- யானை) அளவாகப் பயன்பட்டுள்ளது. அதன் ஆட் சியே பின்னர்ப் பலவாறாகப் பெருகித் தேவர், மக்கள், அசுரர், இதிகாச மாந்தர், ஊழி வெள்ளம் போன்ற கருத்துக்களுடன் இணைந்து, பிற்காலத்தில் திருவிளை யாடற் புராணம், பல தலபுராணங்கள் உருவாக வழி செய்தது.

**பண்பாடு நாகரிக வளர்ச்சி:**

8.1.1. இத்தகைய ஊர்ப் பெயர் அகராதி தமிழகத்தில் பன்னி ரண்டாம் நூற்றாண்டு வரை வளர்ந்து வந்த சமுதா யத்தின் பண்பாட்டு வளர்ச்சியைச் சைவ சமய நோக்கில் கண்டு அக்கால நாகரிக நிலையை ஆராயப் பயன்படும்.

8.1.2. எளிய மக்கள் இயற்கையில் காணும் பொருள்களின் அடிப்படையில் ஊர்ப் பெயர்களைச் சூட்டினர். அவற் றிற்கு மேனிலைச் சமய ஆற்றலூட்டி அவற்றை உயர் மதிப்புள்ள இடங்களாக ஆக்கிய பிற்கால வளர்ச் சியைப் பல வகையிலும் உணர்தற்கு உதவும்.

8.2.1. புரம், புரி, ஆச்சிரமம் போன்ற பின்னொட்டுகள் சேர்ந்து ஊர்ப்பெயர்கள் அமைவதால் வடமொழிச் செல்வாக்கு எங்ஙனம் தமிழகத்தில் இருந்தது என அறிய இயலும்.

8.2.2. சமய வரலாற்றை அறிவதற்குப் பள்ளி, பாழி, மங்கை என முடியும் ஊர்ப் பெயர்கள் உதவுகின்றன. சேக்கிழார் காலத்தில் பத்தி வெள்ளம் கரைபுரண்டு ஓடியதை ஊர்ப்பெயர்களுடன் சேர்ந்த திரு என்ற அடைமொழி கொண்டு உணரலாம்.

8.3.1. பல ஊர்களின் பெயர்கள் இயற்கை நிலை அமைப்பைப் பற்றி அறியத் துணை செய்கின்றன. அவ்வூர்களுக்கு அடியவர் வருகின்ற நிலையில் அவ்வமைப்பு நிலை உறுதி பெறுகின்றது. சில சமயம் அவற்றின் முன்னர் இருந்த நிலையை உய்த்துணர வழி செய்கின்றது.[23]

8.4.1. அக்கால மக்களிடையே சைவ அடியார் பெற்ற மதிப்பு, தமிழக அரசியலில் புறச் சமயச் செல்வாக்கு, தமிழக ஊர்களில் பரவி இருந்த நிலை, சமய மாற்றங்கள் ஊர் மக்களிடை உண்டாக்கிய எழுச்சி, கோயில்கள் அக்கால மக்களின் துன்பம் நீக்கும் மையமாக நின்ற நிலை ஆகியவை ஊர் பற்றி அறிவித்த செய்திகளாம். இவ்வாறு அமைந்த செய்திகள் சமூகவியல் விளக்கமாக உதவும்.

8.4.2. பெரியபுராணம் என்ற தனி நூலின் சொல்லடைவு, சேக்கிழாரின் சொல்வளத்தை உணர உதவியது போல் இச்சிறப்பகராதி அந்நூலின் துணை கொண்டு நகர், சிற்றூர், வாழ்வின் சமயப் பகுதியை நுணித்தறியத் துணை செய்யும். மேலும் இவ்வகராதி, இது போலப் பல துறைகளில் சிறப்பகராதிகள் வெளிவரத் தூண்டும் என்பதில் ஐயமில்லை.

8.5.1. பெரியபுராண நூலினகத்துக் காணும் ஊர்ப் பெயர்கள் வடிவம் மாறி வழங்கப் பெற்றுள்ளன. அவை செய்யுள் நோக்கியும் மக்கள் வழக்கினைக் கருதியும் மாற்றுரு அடைந்திருக்கலாம்.

மெய் வீழ்வு:

| | | | |
|---|---|---|---|
| க் | வேள்விக்குடி | — | வேள்விகுடி |
| ல் | நல்லூர் | — | நலூர் |
| ன் | நன்னிபள்ளி | — | நனிபள்ளி |

23. (கழிப்பாலை பற்றித் 'தமிழ் இடப்பெயராய்'வில் (ப. 58) கி. நாச்சிமுத்துவின் குறிப்பு இங்குக் கருதற்குரியது.)

**உயிர் திரிதல்:**

| | | | | |
|---|---|---|---|---|
| உ | > ஐ | பழையாறு | — | பழையாறை |
| உ | > ф + அம் | முதுகுன்று | — | முதுகுன்றம் |
| ஏ | > ஈ | இராமேச்சரம் | — | இராமீச்சரம் |

8. 5. 2. ஊர்ப்பெயர்கள் அமைவதற்கு ஊரிற்குரிய பல வேறு பெயர்கள் இணைக்கப்பெறுகின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| கஞ்சாறு | + | ஊர் | = | கஞ்சாறூர் |
| நாவல் | + | ஊர் | = | நாவலூர் |
| நாவல் | + | நகர் | = | நாவல்நகர் |
| மதுரை | + | புரி | = | மதுராபுரி |
| மயில் | + | புரி | = | மயிலாபுரி |
| காஞ்சி | + | புரம் | = | காஞ்சிபுரம் |

8. 5. 3. பெரியபுராண ஊர்ப் பெயர்களின் இன்றைய வடிவங்களைப் பார்ப்பின் அவை ஊர்ப்பெயர் ஆய்வுக்குப் பல வழிகளில் உதவும்.

8. 6. 1. பெரியபுராண ஊர்ப் பெயர்களில் நூற்றுக்கு மேற்பட்ட ஊர்களின் பெயர்கள் 'ஊர்' எனவே முடிகின்றன. மொத்த ஊர்ப் பெயர்களின் கணக்கில் இது 28. 4%. அடுத்துத் 'துறை' என முடியும் ஊர்ப் பெயர்களின் வரவு 5% ஆகும். இதனை அடுத்து அமைவன 'குடி' என்று முடியும் பெயர்கள். அவற்றின் எண்ணிக்கை 3. 6% ஆகும். இவ்வாறு 'ஊர்', 'துறை', 'குடி' எனும் சொற்களின் வரவெண்ணிக்கை அக்கால மக்கள் தம்மூர்களுக்குப் பெயரிட்ட முறையில் பின்பற்றிய நெறியை உணர்த்தும். 'கரை', 'குன்றம்', 'கூடல்' என முடியும் ஊர்ப் பெயர்கள் குறைவு எனினும் அவற்றால் அவ்வூர்களின் நில அமைப்பைப் பற்றி அறிய முடிகிறது.

**விதி முறைகள்:**

8.7.1. பெரியபுராணம் போன்ற ஒரு தனி நூலில் காணும் ஊர்ப்பெயர்கள் பற்றிய சிறப்பகராதி தொகுத்தற் கென அமைத்துக் கொண்ட விதிமுறைகள்:

அ) நூலிற் காணும் எல்லா ஊர்ப் பெயர்களையும் தொகுத்தல். அவற்றில் பெரு வழக்குடையவற்றிற்கும், சமயச் சிறப்புடையனவற்றிற்கும் முதலிடம் அளித்தல்.

ஆ) பெயர் வடிவங்களை அகர வரிசையில் ஒழுங்குற அமைத்தல்.

இ) ஒரே ஊர்ப் பெயரின் வேறு பெயர்களில் ஒலி வேறுபாடு, புணர்ச்சி வேறுபாடு காணப்படின் அவற்றை அவ்வாறே அளித்தல்.

ஈ) தெளிவு கருதி ஊர்ப்பெயரின் முன்னடை குறித் தல்.

உ) நூலினகத்து ஊர் பற்றி வரும் செய்திகளை நூல் செல் நெறியில் இயற்கைப் பின்னணி, அமைப்பு நிலை, சிறப்பு நிகழ்ச்சிகள் என்ற நிரலில் அமைத்தல். சார்பு நூல்களில் காணும் ஏற்புடையனவற்றை ஏற்றல்.

ஊ) ஊர் பற்றிய புராண இதிகாசச் செய்திகளில் நூலினகத்தே அமைந்தவற்றிற்கு முதலிடமும், வேறு வழக்கில் வழங்கி வருவனவற்றிற்கு இரண்டாம் இட மும் நல்குதல்.

எ) நூலின் உரை, வரலாற்றுக்களம், மக்கள் வழக்கு ஆகியவற்றில் காணும் செய்திகளில் வேண்டிய அளவு எடுத்துக் கூறல்.

ஏ) ஊரின் இருப்பிடத்தைப் புகைவண்டி நிலையத்தை ஒட்டிச் சுட்டுதல்.

ஐ) பண்பாடு நாகரிகத்தைச் சுட்டும் செய்திகளை அளித்தல்.

9. 1. தமிழ்ப் பல்கலைக் கழகத் தொகுப்பியல் துறைத் தலைவராகப் பணி ஏற்றதும் இச் சிறப்பு அகராதிப் பணியை மேற்கொண்ட எனக்கு எல்லா வகையிலும் இயக்கும் ஆற்றலாக விளங்கும் மேன்மைமிகு துணைவேந்தர் முதுமுனைவர் வ.அய். சுப்பிரமணியம் எம்.ஏ.,பிஎச்.டி., டி.லிட்., அவர்களுக்கு என்றும் என் நன்றி உரியது.

9. 2. துறையில் முதுமுனைவர்ப் பட்ட ஆய்வாளர்களாம் டாக்டர் மாதையன், டாக்டர் சித்திரபுத்திர பிள்ளை ஆகிய இருவரும் வேண்டும் போது இப்பணிக்கு ஆவன செய்து உதவினர். இத் தொகுப்புப் பணிக்குப் பல்வேறு நூல்களை அவ்வப்போது கொடுத்தவர்கள் பேராசிரியர் டாக்டர் ரத்தனம், புலவர் இராசு எம்.ஏ., டாக்டர் அறிவுடைநம்பி, டாக்டர் சுப்பராயலு, டாக்டர் இராமலிங்கம், தமிழ்ப் பல்கலைக் கழக நூலகர் திரு. பத்மநாபன் ஆகியோராவர். இவர்களனைவருக்கும் என் நன்றி உரியது.

9. 3. எடின்பரோப் பல்கலைக் கழகத்திலிருந்து தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு ஆய்வுப் பணியின் பொருட்டு வந்திருந்த பேராசிரியர் ஆசர் அவர்கள் இப்பணியைப் பார்த்துச் சில பயனுள்ள திருத்தங்களை மேற்கொள்ளுமாறு கூறி உதவினார். துறை ஆய்வுக் குழு உறுப்பினர்களும் தங்கள் கருத்துரைகளால் இவ்வகராதி வளம் பெறச் செய்தனர். துறைத் தட்டச்சர் திரு. பாலசுப்பிரமணியம் படிகளுருவாகப் பணி புரிந்தார். இந்நூலைக் குறிப்பிட்ட காலத்தில் அச்சேற்றிக்கொடுத்தனர் சிவகாமி அச்சகத்தார். இவ்வாறு பல்வகையிலும் இப்பணி சிறக்க உதவிய அனைவர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

**தா. வே. வீராசாமி**

# நூலாரம்


| | |
|---|---|
| இராசமாணிக்கம், மா. | பெரியபுராண ஆராய்ச்சி, சென்னை, மாடல் பப்ளிகேசன், 1948. |
| இளங்கோ அடிகள் | சிலப்பதிகாரம், சென்னை, டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு, 1976. |
| இன்னாசி. ஆ. | பெஸ்கி அடிகளது சதுரகராதி, மதுரை, மதுரைப் பல்கலைக் கழகம், 1982. |
| கழகப் புலவர் குழு | சிவப்பதிகள் வரலாறு, சென்னை, கழகம் 1977. |
| சண்முகம்பிள்ளை, மு. | நிகண்டுச் சொற்பொருட் கோவை - தெய்வப் பெயர், மதுரை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், 1982. |
| சம்பந்தர், அப்பர், சுந்தரர் | மூவர் தேவாரம், ஸ்ரீவைகுண்டம், திருப்பனந் தாள் பதிப்பு, டி.எம். குமரகுருபரன் பிள்ளை (பதிப்பாசிரியர்), 1963. |
| சிங்காரவேலு முதலியார், ஆ. | அபிதானசிந்தாமணி, புதுதில்லி, ஆசியன் எடுகேசனல் சர்வீசசு, 1983. |
| சுந்தர சண்முகனார் | தமிழ் அகராதிக்கலை, புதுச்சேரி, புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம், 1965. |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் | தேவாரத் திருப்பதிகங்கள் ஏழாந்திருமுறை, |

| | |
|---|---|
| | (பதிப்பு) ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், (குறிப்பு) சி. அருணைவடிவேல் முதலியார், தருமபுரம், 1964. |
| சுப்பிரமணியம், வ. அய். | சொல்லடைவு அகராதி, கோயமுத்தூர், 'கலைக்கதிர்' மார்ச்சு 1963, பக். 20-24. |
| சேக்கிழார் | பெரியபுராணம் என்று வழங்குந் திருத்தொண்டர் புராணம் சென்னை, ஆறுமுக நாவலர் பதிப்பு, விபவ. பங்குனி. |
| ,, | பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர்புராணம், சி.கே. சுப்பிரமணிய முதலியார் உரை, கோயமுத்தூர், கோவைத் தமிழ்ச் சங்கம், |
| ,, | I 1960 |
| ,, | II 1940 |
| ,, | III 1943 |
| ,, | IV 1949 |
| ,, | V 1950 |
| ,, | VI 1953 |
| ,, | VII 1954 |
| சேதுப்பிள்ளை, ரா. பி. | தமிழக ஊரும் பேரும, சென்னை, பழனியப்பா பிரதர்சு, 1976. |
| சோமலெ | வளரும் தமிழ், சென்னை, பாரி நிலையம், 1968. |

| | |
|---|---|
| திருஞானசம்பந்தர் | முதல் திருமுறை, (பதிப்பு) ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், (குறிப்பு) ச. தண்டபாணி தேசிகர், தருமபுரம், 1953. |
| ,, | இரண்டாவது திருமுறை, (பதிப்பு) ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், (குறிப்பு) முத்து சு. மாணிக்க வாசக முதலியார், தருமபுரம், 1954. |
| ,, | மூன்றாவது திருமுறை, (பதிப்பு) ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், (குறிப்பு) பண்டித அ. கந்த சாமிப்பிள்ளை, தருமபுரம், 1955. |
| திருநாவுக்கரசு நாயனார் | தேவாரத் திருப்பதிகங்கள் - நாலாந்திருமுறை, (பதிப்பு) சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள், (உரை) முத்து சு. மாணிக்க வாசக முதலியார், தருமபுரம், 1957. |
| ,, | ஐந்தாந் திருமுறை, (பதிப்பு) சுருக்கம், சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள், (உரை) சொ. சிங்காரவேலன் தருமபுரம், 1961. |

| | |
|---|---|
| திருநாவுக்கரசு நாயனார் | ஆறாந் திருமுறை, (பதிப்பு) ஒடுக்கம், சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் (குறிப்பு) சி. அருணைவடிவேல் முதலியார் ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம், 1963. |
| தேவநேயப் பாவாணர், ஞா. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, சென்னை, செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்கக வெளியீடு, 1985. |
| நாச்சிமுத்து, கி. | தமிழ் இடப்பெயராய்வு, நாகர்கோவில், சோபிதம் பதிப் பகம், 1983. |
| மாணிக்கவாசகம், இரா. | சித்தர்கள் பரிபாஷை அகராதி, சென்னை, "அன்னை அபிராமி அருள்", 1982. |
| மீனாட்சிசுந்தரம், கா. | அகராதிக்கு அப்பால், சென்னை, மங்கை நூலகம், 1977. |
| வெள்ளைவாரணன் | பன்னிருதிருமுறைவரலாறு, அண்ணாமலைநகர், அண்ணா மலைப் பல்கலைக் கழகம், 1962. |
| வையாபுரிப்பிள்ளை, எஸ். | அகராதி நினைவுகள், சென்னை தமிழ்ப் புத்தகாலயம், 1959. |
| ,, | இலக்கியச் சிந்தனைகள், சென்னை, பாரி நிலையம், 1956. |

| | |
|---|---|
| *வையாபுரிப்பிள்ளை, எஸ்.* | *இலக்கிய மணிமாலை, சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1957.* |
| *ஜெயதேவன், வ.* | *தமிழ் அகராதியியல், சென்னை, அன்பு நூலகம், 1977.* |
| ,, | *தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு, சென்னை, ஐந்திணைப் பதிப்பகம், 1985.* |
| **Burrow, T. Emeneau, M.B.** | **A Dravidian Etymological Dictionary, Oxford, 1961.** |
| **Householder, W. Frnd Sol Saporta** | **Problems in Lexicography, Bloomington, Indiana University, 1967.** |
| **Paramasivanandam, A.M.** | **The Historical Study of the Thevaram Hymns, Madras, Tamil Kalai Publishing House, Shenaynagar, 1982.** |
| **Subramoniam, V.I.** | **Index of Puranaanuuru, Trivandrum, University of Kerala, 1962.** |
| **University of Madras** | **Tamil Lexicon, Vol. I-VI, Reprint Madras, University of Madras, 1982.** |
| ,, | **Tamil Lexicon Supplement Part-I, Reprint, Madras, 1982.** |
| **Veerasami, V.** | **Grammatical Study of Periyapuraanam, Unpublished Ph.D.** |

Thesis, Trivandrum, University of Kerala, 1966.

Walter, W. Skeat — An Etymological Dictionary of English Language, Oxford, 1963.

Ladislav Zgusta *et al.* — Manual of Lexicography, The Hague, Mouton, 1971.

# சுருக்க விளக்கம்

| | |
|---|---|
| எ-டு. | எடுத்துக்காட்டு |
| கி. | கிழக்கு |
| கி.மீ. | கிலோ மீட்டர் |
| த.ஊ.பே. | தமிழகம் ஊரும் பேரும் |
| தி.தொ.பு.சு.உரை. | திருத்தொண்ட புராணம், சி. கே. சுப்பிரமணிய முதலியார் உரை |
| தெ. | தெற்கு |
| தெ.கி. | தென்கிழக்கு |
| தெ.மே. | தென்மேற்கு |
| ப. | பக்கம் |
| பக். | பக்கங்கள் |
| புறம். | புறநானூறு |
| மு.நூ. | முன்னர்க் கண்ட நூல் |
| மே. | மேற்கு |
| வ. | வடக்கு |
| வ.கி. | வடகிழக்கு |
| வ.மே. | வடமேற்கு |

# பெரியபுராணச் சிறப்புப்பெயரகராதி

## ஊர்ப்பெயர்கள்

### அ

**அகத்தியான்பள்ளி:** (திருவகத்தியான்பள்ளி)

*இவ்வூர் காவிரியின் தென்கரையில் உள்ளது; தெள்ளிய அலைகள் சூழ்ந்த கடற்கானலை உடையது.*

திருஞானசம்பந்தர் இவ்வூர்க் கோவில் இறைவனை 'வாடி வெண்டலை' என்ற தேவாரப்பதிகம் பாடி வணங்கினார் (2520)

சுந்தரரும், சேரமான் பெருமாளும் இங்கு வந்து இறைவனை வணங்கினர் (3835).

*(இறைவனின் மணக்கோலம் காண அகத்தியர் இங்குத் தவம் செய்தார் என்பது புராண வழக்கு தி. தொ. பு.* **IV** *ச. உரை 1949, ப. 770. த. ஊ. பே. ப. 237.)*

*[வேதாரணியத்திற்குத் தெற்கே 1 கி.மீ. இல் இந்நிலையம் உள்ளது.]*

**அச்சிறுபாக்கம்: (திருவச்சிறுபாக்கம்)**

இவ்வூர், தொண்டைமண்டலத்தில் உள்ளது. திருஞான சம்பந்தர் தம் தொண்டர்களுடன் இவ்வூர்க் கோவிலுக்குச் சென்று, 'பொன்றிரண்டன்ன' என்ற தேவாரப்பதிகம் பாடி வணங்கினார். இவ்வூரில் அவர் சில நாள் தங்கி யிருந்தார் (3030).

(1. பாண்டிய மன்னன் ஒருவன் தன் நாட்டில் தலம் அமைக்க வண்டிகளில் கங்கை மணல் கொண்டு வந்த போது வண்டி அச்சுக்கள் முறிந்து மேற்செல் லாதவாறு தடை ஏற்பட்டது. அதனால் இப்பெயர் வந்தது என்பர்.

2. திரிபுரம் எரித்த போது இறைவன் ஏறிய பூமித்தேர் அச்சு முறிந்த கதையையும் இத்துடன் இணைப்பர்.

தி. தொ. பு. V. சு. உரை. 1950, ப. 1435.)

[சென்னை எழும்பூரிலிருந்து தெற்கே 95 கி. மீ. இல் இந்நிலையம் உள்ளது.]

**அஞ்சைக்களம்: (திருவஞ்சைக்களம், கொடுங்கோளூர், மகோதை)**

சேரநாட்டின் தலைநகரின் ஒருபகுதி. கொடுங்கோளூரும் இதுவும் சேர்ந்து ஒரு பதியாகக் கொள்வர் (3748)

இங்குள்ள இறைவனுக்குத் திருத்தொண்டு புரிந்து வந்தார் சேரமான் பெருமாள் (3754) இங்கு இறைவன் தொண்டு புரிந்து வந்த சேரமானிடம் அமைச்சர்கள் சென்று (3758) அரசாட்சியை மேற்கொள்ள வேண்டினர். அதற்கேற்ப அரசா ஆனார்.

சேரமான் பெருமாள் திருவஞ்சைக்களத்து இறைவனை வலமாக இறைஞ்சிப் போய்ப் பட்டத்து யானையின் பிடர் மீது ஏறி இம்மூதூரை விட்டுச் சுந்தரரைக் காணப் புறப் பட்டார் (3794).

திரும்பி இங்குச் சுந்தரருடன் சேரமான் வந்தபோது

நகர மாந்தர் இவ்விருவரையும் எதிர்கொள்ள வந்தனர். ஆடரங்குகளில் பெண்கள் பாடி ஆட, நகர வீதிகளில் நின்றனர். சிகர மாளிகையில் சேராமல் நேரே அஞ்சைக் களத்துள் சுந்தரரை அழைத்துக் கொண்டு சேரமான் சென்றார் (3892).

கயிலை செல்லும் காலம் வந்ததும் சுந்தரர், சேரமான் பெருமாள் திருமஞ்சனம் செய்யும் போது திருவஞ்சைக் களத்தைத் தாம் மட்டும் சென்றடைந்தார் (4256). இறைவன் கோயிலை வலம் வந்து அன்பு பெருக உள்ளே சென்று இறைவனைப் பணிந்து எழுந்து 'தலைக்குத் தலை மாலை' என்ற பதிகம் பாடினார் (4257). சுந்தரர் தம் வாழ்க்கையை அறுத்திடும் நோக்கை அறிந்த இறைவன் அவரை அழைத்துவரத் தம் கணங்களுக்கு அருள் செய்தார் (4259). இந்திரன், திருமால், பிரமன் முதலியோர் வெள்ளானையுடன் இங்கு வந்து வலம் வந்து திருவாயிலை அடைந்தனர் (4260). சுந்தரர் தேவர்களுடன் வெள்ளானை மீது புறப்பட்டதை அறிநத சேரமான் பெருமாள் குதிரை மீது ஏறித் திருவஞ்சைக்களம் சேர்ந்து சுந்தரர் ஏறிய வெள்ளானையைத் தொடரக் குதிரையைச் செலுத்தினார் (4263).

சுந்தரர் வான் வெளியில் அருளிய 'தானெனை முன் படைத்தான்' எனும் ஏழிசைத் திருப்பதிகத்தைக் கடல் வேந்தனாம் வருணனிடம் அளித்தார். அவனும் அவ்வருளைத் தலைமேற் கொண்டு இறைவனின் அஞ்சைக் களத்தில் சேர்த்து உணர்வித்தான் (4279).

(இதுவே வஞ்சிமா நகரம் என்பர் சிலர் ... கருவூரே வஞ்சி என்பர் சிலர். த. ஊ. பே. ப. 52)

[கேரளத்தில் எர்ணாகுளச் சந்திப்பிற்குத் தெற்கே சாலக்குடி நிலையத்திலிருந்து தென்மேற்கே 15 கி. மீ. இல் உள்ளது.]

**அண்ணாமலை: (திருவண்ணாமலை)**

நடுநாட்டில் உள்ளது இவ்வூர்.

ஆதி தேவராம் சிவபெருமான் வீற்றிருக்கும் ஊர் இது. இதனை அப்பர், சிவனருளால் அடைந்தார் (1576). இங்குள்ள மலையைத் தொழுது வலம் செய்து மலை மீது ஏறிச் சிவனை வணங்கினார். இவ்வாறு தொழுதற்கு உரியதே வீட்டுலகிற்கு மேலானது என நம்பினார் (1577). சிவனை 'அண்ணாமலை மேல் அணிமலை' யாகக் கருதி 'ஓதிமா மலர்' என்ற பதிகம் பாடிப் பணிந்தார் (1578).

இங்குத் தொண்டர்களும், இமையவர்களும் நாள் தோறும் இறைவனைப் பணிந்தனர். மேகங்கள் தங்கிய சோலைகள் நிறைந்திருந்தன. இதனைத் திருஞானசம்பந்தர் தம் அன்பர்களுடன் வந்து வணங்கினார் (2867). இதன் வடிவம் சிவன் திருவடிவம் போலத் தோன்றியது 'உண்ணா முலையுமையாள்' எனும் பதிகத்தை ஞான சம்பந்தர் பாடினார். மலைமேலுள்ள இறைவனைப் பணிந்து இன்பக் கண்ணீர் பெருக்கினார் (2869).

(அருணாசலம், அருணகிரி, சோணாசலம், சோணகிரி, சோணசைலம் என்னும் பெயர்களும் உடையது. த. ஊ. பே. ப. 175)

[காட்பாடிச் சந்திப்பிலிருந்து தெற்கே 93 கி. மீ. இல் உள்ளது இந்நிலையம்.]

**அதிகை: (திருவதிகை)**

இவ்வூர் நடுநாட்டில் உள்ளது.

மலையில் வளரும் சந்தனம், அகில் எனும் மரங்களையும், மயிற்பீலியையும், மலர்களையும் கொண்டு வந்து பரப்பி மணிகளையும் கொழித்து வரும் பெண்ணையாற்றைக் கடந்து திருவதிகையை அடையலாம். இங்குள்ள கோயில் திருவீரட்டானம் ஆகும்.

தவநெறியில் நின்ற திலகவதியார் (அப்பரின் தமக்கை) தம் சுற்றத் தொடர்பு நீங்கிச் சிவநெறி சேர இத்தலத்தில் வாழ்ந்தார். சிவன்பால் திருக்கெடில வடகரையில் பெருஞ் சிறப்புள்ள இவ்வூர்க் கோயிலில் தொண்டு புரிந்து வந்தார் (1307).

அம்மையாரின் தம்பியாம் அப்பர் தம் சூலை நோய் நீங்கத் திருவதிகையை அடைந்தார் (1321). இவ்வூரைச் சேரத் தாம் முன்னர்க் கொண்டிருந்த சமண மதத்திற்குரிய உறி, குண்டிகை, பீலி முதலியவற்றை ஒழித்தார் (1325). சமணர் அறியாமல் இரவில் வந்தார் (1326). இவ்வூர்க் கோயில் அவர்க்குத் தம் நோய் நீக்கும் தெப்பம் போல் தெரிந்தது. ஊர் மதில், மலை போலத் தெரிந்தது (1327).

மேகம் சூழ்ந்த, மணங்கமழும் சோலைகள் இவ்வூரைச் சுற்றியிருந்தன (1356). இங்கு அப்பரைக் காணப் பல்லவ மன்னனின் அமைச்சர்கள் படையுடன் வந்தனர்.

பின் ஒரு சமயம் பல ஊர்கள் சென்றபின் இங்குள்ள இறைவன் மீது காதல் எழ அப்பர் திரும்பவும் இவ்வூரை அடைந்தார். சமணர் செய்த தீங்கெல்லாம் ஒழிய, வெற்றி பெற்ற அப்பர் இங்கு வருதல் கேட்ட இவ்வூரார் முரசு முதலிய வாத்தியங்களை இயக்கி அச்செய்தியை ஊரில் பறை சாற்றினர் (1402). அப்பர் இவ்வூர் இறைவன் மீது தமிழ்ப் பாட்டுப் பல பாடினார் (1409). பல்லவ மன்னன் சமண சமயம் பொய்யென அறிந்து இவ்வூரில் சிவபெருமானுக்குக் குணபரவீச்சரம் என்ற கோயில் கட்டினான் (1411). (த. ஊ. பே. ப. 358.)

இங்கு அப்பர் உழவாரப் பணி செய்ததால் இப்பதியை மிதிக்கச் சுந்தரர் அஞ்சினார். இங்குத் 'தம்மானை அறியாத என்ற பதிகம் பாடிப்பணிந்தார் (234).

/பண்ருட்டி நிலையத்திலிருந்து தெற்கே 2 கி. மீ. இல் உள்ளது/

**அம்பர்: (திருவம்பர்)**

இவ்வூர் சோழநாட்டில் உள்ளது. இவ்வூர்க் கோயில் மாகாளம் எனப்பெறும்.

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் சிவன் உறையும் திருவம்பர்த் தலத்தை வணங்கினர் (1511). சம்பந்தரின் விருப்பிற்கேற்ப நாவுக்கரசர் தம் தொண்டர் குழாத்துடன்

முன்னே செல்லப் (2426) பின்னே முத்துச் சிவிகையில் சம்பந்தர் அம்பர் வந்து சேர்ந்தார் (2427).

இவ்வூர்க்கோவில் மதில் செம்பொன் மதில் எனப் போற்றப்பெறும். இதனை அடியவர் வலம் வந்து தொழுத னர் (2428). இவ்வூர்க் கோவிலைக் கோச்செங்கணான் கட்டினான் (த. ஊ. பே. ப. 216). அச்செயலைச் சிறப்பித் துச் சம்பந்தர் 'எரிதர' என்ற பதிகத்தில் பாடியுள்ளார். இக்கோவிலைப் பற்றிப் 'புல்கு பொன்னிறம்' முதலிய பல பதிகங்களைப் பாடினார் (2430).

இவ்வூரிலுள்ள கோயிலைச் சுந்தரர் வணங்கினார் (262).

இவ்வூரில் மாமரங்கள் மிக்க சோலைகள் இருந்தன (3630). இதில் சோமாசி மாறர் எனும் நாயனார் வாழ்ந்து சிவனையும் சுந்தரரையும் தொழுது இவ்வூரிலேயே சிவ லோகம் சேர்ந்தார் (3634).

(அம்பன் – அம்பாசுரன் எனும் அரக்கர்களை அழித்த பழி நீங்கக் காளி இங்குச் சிவனைப் பூசித்ததால் இப்பெயர் பெற்றது என்பர். தி. தொ. பு. I சு. உரை 1960, ப. 313.)

[திருவாரூர்க்கு வடக்கே 16 கி. மீ. இல் உள்ளது இவ் வூர்.]

**அரசிலி: (திருவரசிலி)**

இவ்வூர் தொண்டை நாட்டில் உள்ளது.

திருஞானசம்பந்தர் பல தொண்டர்களுடன், சிவபெரு மான் மகிழ்ந்து எழுந்தருளியுள்ள அரசிலியை வந்தடைந் தார் (3032).

இவ்வூரிலமர்ந்த சிவனை வணங்கியப் பின் திருப்புறவா பனங்காட்டூர் முதலிய பல ஊர்களுக்குச் சென்றார் (3033).

[புதுச்சேரி நிலையத்திலிருந்து வடக்கே 9 கி. மீ. இல் உள்ளது.]

**அரத்துறை:** (திருவரத்துறை, நெல்வாயில்அரத்துறை)

இவ்வூர் நடுநாட்டில் நிவா நதியின் வடகரையிலுள்ளது.

கானப்பூக்கள் மணம் கமழ்கின்ற ஒப்பற்ற ஊர் இவ்வூர் (1419). இவ்வூரிலுள்ள சிவபெருமானை அப்பர் வணங்கிச் சென்றார்.

திருஞானசம்பந்தர் தம் தந்தையாருடன் இவ்வூர்க்குச் சென்றார் (2083). இங்குச் செல்லும்போது சம்பந்தரின் பாதங்கள் நோக, அவருடைய தந்தை வருந்தினார் (2085). இவ்வூர் இறைவனைத் தொழ விரைந்து சென்றார் சம்பந்தர் (2086).

அன்னங்கள் ஆடும் நீர்த்துறையுள்ள அரத்துறை இறைவனை வணங்கினார் (2092). இங்கு இறைவன் சம்பந்தர் ஏறிச் செல்ல முத்துச்சிவிகை, முத்துக்குடை, பொற்சின்னம் ஆகியவற்றை அளிக்குமாறு அரத்துறை அந்தணர் கனவில் கூறினார் (2094).

சம்பந்தர் கனவிலும், தாம் அளிக்கும் முத்துச்சிவிகை முதலியவற்றை ஏற்றல் பொருத்தம் என்று அருளிச் செய்தார் (2104). அந்தணர் அபபொருள்களை இடைவழியிலே கொண்டு சென்று சம்பந்தரிடம் அளித்து. அரத்துறை இறைவன் தந்த பேரருளை ஏற்றுக் கொள்ள வேண்டினர் (2109). அரத்துறை இறைவன் அருள் என அவர் மீது சம்பந்தர் பதிகம் பாடினார் (2113). அவற்றைப் பெற்றுச் சம்பந்தர் அரத்துறை வந்து சேர்ந்தார் (2122). இவ்வூர்க் கோயிலை வலம் வந்து தன்னைப் பொருளாகக்கொண்டு இன்னருள் செய்த செயலைப் பாடிப் போற்றினார் (2124).

இங்கிருந்து **திருவெண்ணெய்நல்லூர்** முதலிய தலங்களுக்குச் சென்று மறுபடியும் சம்பந்தர் இவ்வூர்க்கே வந்தார் (2127). இவ்வூர் இறைவனை வணங்கி நித்திலச் சிவிகைமேல் எழுந்தருளினார் (2129).

சுந்தரர் இவ்வூரில் 'கல்வாயகில்' எனும் பதிகம்பாடிப் (3448) பணிந்து சென்றார் (3449).

/பெண்ணாட நிலையத்திலிருந்து மேற்கே 10 கி. மீ. இல் உள்ளது./

**அரதைப்பெரும்பாழி:** (திருவரதைப்பெரும்பாழி)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள ஊர். இவ்வூர்க்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'பைத்த பாம் போடு' என்ற பதிகம் பாடியுள்ளார் (2301).

(அரித்துவார மங்கலம் எனவும் வழங்குவர்.)

(திருமால் வராக அவதாரத்தில் பூசித்தபதி என்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 85.)

/தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 14 கி. மீ. இல் உள்ளது./

**அரிசிற்கரைப்புத்தூர்:** (திருவரிசிற்கரைப்புத்தூர்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது. இவ்வூர்.

சுந்தரர் **திருவீழிமிழலை, திருவாஞ்சியம்** ஆகிய ஊர் களில் இறைவனைத் தொழுது இவ்வூர்க்கு வந்தார் (3214). 'மலைக்குமகள் அஞ்ச' என்ற பதிகம் பாடியுள்ளார்.

**தென்திருப்புத்தூர்** எனவும் அழைக்கப் பெறும் (2301). இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'மின்னுஞ்சடை' என்ற பதிகம் பாடினார்.

**செருவிலிப்புத்தூர்** என்றும் அழைக்கப்பெறும் இவ் வூரில் சிவமறையோர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்களில் ஒருவராம் புகழ்த்துணைநாயனார் இவ்வூரில் வாழ்ந்து சிவப்பணி செய்து வந்தார் (4132).

(நாளடைவில் அரிசிற்கரைப்புத்தூர் என்ற பெயர் மாறி அழகார் திருப்புத்தூர் என்பது அதன் பெயராயிற்று. அப்பெயர் அழகாதிரிப் புத்தூர் என இந்நாளில் மருவி வழங்கும். த. ஊ. பே. ப. 281)

[கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கில் 10 கி.மீ. இல் உள்ளது.]

**அவளிவணல்லூர்: (திருவவளிவணல்லூர்)**

இவ்வூர் சோழநாட்டில் காவிரியின் தென்கரை யிலுள்ளது.

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் வந்தார் (2271). தேவர்கள் போற்ற மகிழ்ந்த சிவன் வீற்றிருக்கும் இறைவன் பெயராம் 'தம்பரிசுடையார்' என்னும் பெயர் சுட்டிக் 'கொம்பிரிய வண்டுலவு' என்ற பதிகம் பாடினார் (2272).

(இவ்வூரில் இறைவனை வணங்கும் ஆதிசைவர் பெண் களில் மூத்த பெண்ணை மணந்தவர் தீர்த்தயாத்திரை சென்றார். அவர் சென்றபின் அம்மைநோய்வாய்ப்பட்ட அப்பெண் கண்ணிழந்து உருக்குலைந்தாள். அவள் தங்கை மணம் செய்யும் பருவமடைந்தாள். அப்போது தீர்த்த யாத்திரையிலிருந்து திரும்பி வந்தவர் 'இளையவளே தம் மனைவி; மூத்தவள் அல்லள்' என்று வழக்கிட்டார். இறை வன் வெளிப்பட்டு 'உன் மனைவி இவளே' என்று காட்டிச் சான்று கூறினார். அதனால் இவ்வூருக்கு அவளிவள் நல்லூர் எனப் பெயர் வந்தது என்பர். 'தம்பரிசுடையார்' என்ற பெயர் இதனைச் சுட்டுவதாகக் கொள்வர். தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 456)

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடகிழக்கில் 18 கி. மீ. இல் உள்ளது.]

**அவிமுத்தம்: (திருவவிமுத்தம், காசி, வாரணாசி)**

கயிலையிலிருந்து வந்த யோகியார் (பின்னர்த் திரு மூலதேவ நாயனாராவார்) கங்கையின் நீண்ட துறைகளிலே நீராடினார். பின்னர்ச் சிவபெருமான் மகிழ்ந்து எழுந் தருளியுள்ள வாரணாசியாம் அவிமுத்தத்தைப் பணிந்து வணங்கினார் (3567).

[வட இந்தியாவில் அலகாபாத் சந்திப்பிலிருந்து கிழக்கே 120 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**அழுந்தூர் : (திருவழுந்தூர்)**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ளது.

திருஞானசம்பந்தர் இறைவனின் பல ஊர்களை வணங்கிச் செல்லும் போது அலை புனல் சூழ்ந்த திருவழுந்தூரில் மாடக் கோயிலிலுள்ள இறைவனை வணங்கினார் (2332).

'தொழுமாறு வல்லார்' என்ற பதிகத்தில் இதுபற்றிய செய்தி உள்ளது.

(தேரழுந்தூர் எனவும் இவ்வூர் வழங்கப்பெறும். அகத்தியர் இறைவனை இங்குப் பூசித்துக் கொண்டிருந்ததை அறியாமல் ஊர்த்துவரதன் என்னும் அரசன் வானில் தேரைச் செலுத்தி வரத் தேர் செல்லாமல் அழுந்தியதால் இப்பெயர் பெற்றது என்பர். தி. தொ. பு IV சு. உரை 1949, ப. 527 திருவழுந்தூர் தேரழுந்தூர் ஆயிற்று. த. ஊ. பே. ப. 290.)

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து தென்மேற்கில் 9 கி.மீ. இல் உள்ளது./

***அளகாபுரி: (திருவளகாபுரி)**

(தேவருலகில் நிதிக்கடவுளாம் குபேரனின் ஊர் இது.)

காஞ்சிநகரில் அணிகலன் பூண்ட வணிகர்கள் நிதி பெருகச் செய்யும் இடங்களில் மணிவாயில் மாளிகைகள் பொன்னும், நவமணிகளும் நிறைந்திருப்பதால், குபேரன் பல தளிகளிலும் திருவேகாம்பரத்திலும் எழுந்தருளியுள்ள சிவனை வணங்கத் தன் தலைநகராம் அளகாபுரியைப் பல உருவங்களில் வகுத்த தன்மை போல் காட்டும் (1178).

இதனை 'அளகை' எனவும் குறிப்பர். இளையான்குடி மாறநாயனார் சிவனருளால் நிறைந்த செல்வத்திற்குரியவராயிருந்தார். அவர் ஊரில் செல்வம் நிறைந்திருத்த நிலை, குபேரனைச் செல்வவளத்துடன் அவன் ஊராம் அளகாபுரியுள் அமைத்தது போன்றிருந்தது (444).

அளகாபுரியிலுள்ள செல்வம் முழுதும் கொணர்ந்து

குபேரன், குங்கிலியக்கலய நாயனார் மனையிலிட்டான் (844).

**அறையணிநல்லூர்: (திருவறையணிநல்லூர்)**

நடுநாட்டில் உள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் தம் தொண்டர்களுடன் இவ்வூர்க் குச் சென்றார் (2866). இங்குப் 'பீடினாற் பெரியோர்களும்' என்ற பதிகம் பாடினார்.

இவ்வூர்க்கோயில் பெண்ணையாற்றின் வடகரை யிலுள்ள மலை மீது உள்ளது. இம்மலையின் மீது சம்பந்தர் வலம் வந்தார் (2867).

(அறைகண்டநல்லூர் எனவும் வழங்குவர். பாரதத்தில் வனவாசம் செய்த பஞ்சபாண்டவர்கள் கட்டிய ஐந்து அறைகளால் அணி நலம் பெற்ற ஊர் என்பர். தி. தொ. பு. V சு. உரை. 1950, ப. 1230. ஒரு பாறையின் அருகே எழுந்த நல்லூர் அறையணி நல்லூர் என்று பெயர் பெற்றது. இப் பொழுது அரகண்ட நல்லூர் என்று வழங்குகிறது. த. ஊ. பே. ப. 39.)

[திருக்கோவலூர் நிலையத்திலிருந்து வடக்கே 2 கி. மீ. இல் உள்ளது.]

**அன்பிலாலந்துறை: (திருவன்பிலாலந்துறை)**

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர். ஈசன் கோயில் கொண்ட இடம் ஆலந்துறை (த. ஊ. பே. ப. 193).

இவ்வூரில் ஆதிசைவர் வாழ்ந்தனர். இங்குள்ள இறை வனைத் திருஞானசம்பந்தர் 'கணை நீடெரி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2206).

(அப்பர் இவ்வூர்க்குச் சென்று 'வானஞ் சேர்மதி' என்ற திருக்குறுந்தொகை பாடித் துதித்தார்.)

(அன்பில் எனவும் வழங்கப் பெறும்.)

/லால்குடி நிலையத்திலிருந்து கிழக்கே 7 கி. மீ. இல் உள்ளது./

**அன்னியூர் : (திருவன்னியூர்)**

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர். திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று 'மன்னியூரிறை' என்ற பதிகம் பாடினார் (2187).

(இதற்குப் பொன்னூர் என்ற பெயருமுளது. தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 349.)

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடக்கே 4 கி. மீ. இல் உள்ளது./

**அனேகதங்காபதம்:** காண்க: அனேகதங்காவதம்

**அனேகதங்காவதம்[1] (திருவனேகதங்காவதம்)**

இது வடநாட்டிலுள்ள தலம். இதனைத் திருஞான சம்பந்தர் 'நீடல் மேவு நிமிர்' என்ற பதிகத்தால் போற்றி யுள்ளார்.

/திருக்கேதாரத்திற்குத் தெற்கே உள்ளது./

**அனேகதங்காவதம்[2]**

வடநாட்டில் இப்பெயருள்ள ஊரோடு மயங்காதிருக் கத் திருக்கச்சி அனேகதங்காவதம் எனக் குறிப்பர். திரு ஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங் கினார் (2898).

(சம்பந்தர் இங்குப் பாடிய பதிகம் கிடைக்கவில்லை.)

இது அனேகதங்காபதம் எனவும் குறிக்கப் பெறும். இங்குச் சுந்தரர் சென்று 'தேனெய்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (3346).

(விநாயகர் பூசித்ததால் இப்பதி இப்பெயர் பெற்றது.

(விநாயகர் காஞ்சியை அடைந்து தம் பெயரால் இலிங்கம் நாட்டி, வரம் பெற்று இறைவன் அருளால் இரணியபுர அசுரரை வென்று வல்லபையை மணந்துள்ளார். தி. தொ. பு. V சு. உரை 1950, ப. 1268).

(இது காஞ்சிபுரத்திற்கு மேற்கேவயல் வெளியில் உளது.)

# ஆ

**ஆக்கூர் : (திருவாக்கூர்)**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர். இங்குச் சிவ பெருமான் தான்தோன்றி மாடத்துள் வீற்றுள்ளார் (1514).

உலகின் வறுமையால் இரப்போர்க்கு 'இல்லை' என்னாமல் ஈயும் தன்மையுடையவர்கள் எனத் திருஞான சம்பந்தர், நன்மை பொருந்திய வேதியர்களைப் பற்றி அருளிய வேதத் திருவர்க்கைப் பெற்றது திருவாக்கூர் எனும் இவ்வூர் (3654). இங்குள்ள சோலைகள், ஒளிவிடு மாடங்கள் ஆகியவற்றில் திருமுறை முழக்கம் ஓங்கும். தெருவில் அகில தூபம் கமழும். வேள்விச் சாலைகளில் ஆகுதிப்புகை மேல் ஓங்கும் (3655).

தேர் மன்னும் அழகிய வீதிகளையுடையது இவ்வூர். இங்குச் சென்று திருநாவுக்கரசர் 'முடித்தாமரை' என்ற திருத்தாண்டகம் பாடி இறைவனை வணங்கினார் (1513).

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசுடன் இவ்வூர் வந்தார் (2434). தக்க அந்தணர் வாழும் இவ்வூரில் தான் தோன்றிமாடத்து வீற்றிருக்கும் இறைவனை 'அக்கிருந்த வாரமும்' என்ற பதிகம் பாடி வணங்கினார்.

கரும்பாலைகள் சூழ்ந்த, கமுகுகள் வேலி போல அமைந்த திருவாக்கூரில் சிறப்புலிநாயனார் சிவத்தொண்டு புரிந்தார் (3656).

சிவதருமங்களால் மிக்க மேன்மை பெற்ற அந்தணர் வாழும் ஊர் இவ்வூர் (3659).

/ மயிலாடுதுறைச் சந்திப்பிற்குக் கிழக்கே 19 கி.மீ.இல் உள்ளது. /

**ஆச்சிராமம் :** (திருவாச்சிராமம், திருப்பாச்சிராமம், திருப்பாச்சிலாச் சிராமம், பாச்சில்)

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது. இங்குத் திருஞானசம்பந்தர் வந்தார் (2208). திருஞான சம்பந்தர் இவ்வூர்க்கு வந்தபோது கொல்லி மழவன் தன் மகள் நோயையும் மறந்து கட்டளையிட நகரை மக்கள் அலங்கரித்தனர்; மகர தோரணம் நாட்டினர்; வாசநீர்; தெளித்தனர்; பூரணகும்பம், மணி விளக்கு, தூபம் ஏந்தினர் மற்றும் அழகு பெருக எல்லாச் செயலும் செய்தனர் (2212).

கொல்லி மழவன், தன்மகள் முயலக நோயால் வருந்தக் கோயிலில் இறைவன் முன் அவளை இட்டு வைத்திருக்கத் 'துணிவளர் திங்கள்' என்ற பதிகம் பாடி (2216) அப் பெண்ணின் நோய் நீக்கினார். பின்னர் அங்குள்ள இறை வனைச் சம்பந்தர் வணங்கினார் (2219).

(திருப்பாச்சில் இப்பொழுது திருவாசி என்னும் பெய ரோடு உள்ளது. த. ஊ. பே. ப. 56).

/ திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிற்கு வடமேற்கே 20 கி.மீ.இல் உள்ளது. /

**ஆடானை :** (திருஆடானை)

பாண்டிநாட்டில் உள்ள ஊர்.

சொல்லுதற்கரிய புகழ் வாய்ந்த இவ்வூரினைத் திருஞானசம்பந்தர் அடைந்து 'மாதோர் கூறு' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2789).

(சாபத்தால் ஆட்டுத்தலையும் யானை உடலும் பெற்ற பிருகுமுனி அவ்வுருவத்துடன் இறைவனை வணங்கியதால்

இப்பெயர் வந்தது என்பர். தி. தொ. பு. V சு. உரை 1950, ப. 1130 வடமொழியில் அஜகஜபுரம் என்பர்.)

/ தேவகோட்டை நிலையத்திலிருந்து தெற்கே 40 கி.மீ.இல் உள்ளது. /

**ஆதனூர்:**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

விளக்கம் கொண்ட நீருடைய கொள்ளிடம் எனும் ஆறு பொன்னையும் மணியையும் அலைக் கைகளால் முகந்து தர இரு பக்கங்களிலுமுள்ள தாமரை மலர்க்கைகளால் ஏற்கும் இடமகன்ற வயல்கள் உள்ள நீர் நாட்டிலே (சோழநாட்டில்) மேற்கானாட்டில் உள்ள ஊர் ஆதனூர். உலகு, இதன் சிறப்பை எடுத்துக்கூறிப் புகழும் பழைமை வளம் கொண்ட பதியாகும் (1041).

திருநீற்றின் ஒளி இவ்வூரில் நெருங்கி ஒளிரும்; கரும்புச் சாறு பெருக அலையும் வரம்புள்ள வயலில் வரால் மீன் எழ, எருமை பூட்டிய ஏர் செல்லும். கலப்பைக்கொழுக் கிழித்த சால் வழி ஏறிய நண்டுகள் கரு ஈனும்; தாமரை மணம் வீசும் (1042).

இவ்வூரில் மரக்கூட்டம் தளிர்களால் ஞாயிற்று மண்டலத்தைத் தடவும். மேகங்கள் பெய்யும் மழையோ, தேன் மழையோ எனும்படி ஓயாமல் பெய்வன பூஞ் சோலைகள் (1043).

தென்னையின் அடிமரத்தை வாளை மீன்கள் முட்டத் தென்னை நெற்றுகள் வீழும். அப்போது பலவின் கனிகள் கிழிந்து தேன் ஒழுகும். அதில் அவ்வாளை குதிக்கும் (1044).

வயல் வளம், தோட்ட வளம் என்பன இடமெலாம் நிறைந்திருக்கும். செல்வங்கள் நிறைந்த உயர்ந்த மாடங்கள் விளங்கப் பக்க இடங்களில் நெருங்கிக் குடிகள் பெருகும்படி விளங்குவது ஆதனூர் (1045).

இவ்வூர்ப் புலைப்பாடியில் திருநாளைப்போவார் (நந்தனார்) பிறந்தார் (1051).

(இப்போது ஆதமங்கலம் என வழங்கும்.)

/ வைத்தீசுவரன்கோயில் நிலையத்திலிருந்து வட மேற்கே 15 கி.மீ.இல் உள்ளது. /

**ஆதிபுரி: காண்க: ஒற்றியூர்**

ஒற்றியூர்க்குரிய பெயர்களுள் ஒன்று. இவ்வூர் மக்கள் சுந்தரரை முறைப்படி வரவேற்ற செய்தியை அறியலாம் (3354). ஆதிபுரி ஒற்றி கொண்டார் என்று இவ்வூர் இறைவன் சிறப்பினைப் புகழ்வர் (3418).

/ சென்னைச் சந்திப்புக்கு வடக்கே 10 கி.மீ.இல் உள்ளது. /

**ஆப்பனூர் : திருவாப்பனூர்**

பாண்டிநாட்டில் வைகையின் வடகரையில் உள்ள ஊர்.

இவ்வூர் அழகுடையது. இங்குத் திருஞானசம்பந்தர் 'முற்றும் சடை முடிமேல்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2783).

நம்பியாரூரராம் சுந்தரர் மூவேந்தர்களுடன் இவ்வூரிலுள்ள இறைவனை வணங்கினார் (3848).

(ஆப்பிலே தோன்றிய ஈசன் ஆப்பன் என்று பெயர் பெற்றார். அவர் அமர்ந்த இடம் ஆப்பனூர் ஆயிற்று, த. ஊ. பே. ப. 268).

/ மதுரைச் சந்திப்பிலிருந்து வடக்கே 5 கி.மீ.இல் உள்ளது. /

**ஆமாத்தூர்: (திருவாமாத்தூர்)**

இவ்வூர் நடுநாட்டில் உள்ளது.

பசுக்களுக்குத் தாயாக இறைவன் அருளும் இடம் இது. இங்குத் திருநாவுக்கரசர் 'மாமாத்தாகிய' என்ற திருக்குறுந் தொகை பாடி இறைவனை வணங்கினார் (1413). இறை வன் மகிழ்ந்துறையும் இவ்வூரினைத் திருஞானசம்பந்தர் சென்றடைந்தார் (2864). மனத்துள் மகிழ்ச்சியுடன் விரும்பி விளங்கும் இவ்வூர் இறைவனைப் போற்றிக் 'குன்றவார் சிலை' எனும் திருப்பதிகத்தை இசையுடன் பாடினார் (2865). (துன்னம்பெய்' என்ற பதிகமும் பாடினார்).

அன்னங்கள் மலிந்த வயல்களும் தடாகங்களும் சூழ்ந்த ஊர், இவ்வூர். இங்குச் சுந்தரர் வந்தார் (3446). ஆமாத் தூர் அழகர் அடி வணங்கிக் 'காண்டனன் காண்டனன்' எனும் பதிகம் பாடினார் (3447).

(உயிர்களாம் பசுக்களுக்குத் தாயாக இறைவன் அருளும் இடம் இது. தி. தொ. பு. III. சு. உரை. 1943, ப. 202).
/விழுப்புரம் சந்திப்புக்கு வடமேற்கே 8 கி. மீ. இல் உள்ளது./

**ஆமூர்: (திருவாமூர்)**

திருமுனைப்பாடிநாட்டில் எல்லா ஊர்களும் எக்காலத் தும் மெய்வளங்கள் ஓங்க வரும் மேன்மையுடையன. அவற் றுள் சைவ நெறியை ஏழுலகங்களுக்கும் பாலிக்கும் தன் மையால் தெய்வ நெறியில் விளையும் சிவத்தைப் பெருக்கும் அருளாம் திரு ஆகும் ஊர் திருவாமூர் (1277).

இவ்வூரில் வருந்துவன மகளிர் இடை; ஏங்குவன சிலம் புகள்; இரங்குவன காஞ்சி; ஓங்குவன மாடம்; ஒழுகுவன அறம்; நீங்குவன தீயநெறி; நெருங்குவன பெருங்குடிகள் (1278).

வயல் நீலமலர்களைக் காட்டும்; மை நீலக் கண்களும் மதி போன்ற நெற்றியும் கொண்ட முகம் படைத்த பெண்கள்

சூழும் வீதிகள், அவர்கள் ஆடும் ஊஞ்சலைக் காட்டும்; வைகறைப் பொழுது புலர் காலை நீலம் காட்டும்; உழவர் ஒலி காட்டும் இவ்வூர்; மனைகள் பெருவளம் காட்டும் (1279). இவ்வாறு பல வளங்கொண்டு உலகில் விளங்கும் ஒப்பற்றப் பதியாகும் (1280).

/விழுப்புரம் சந்திப்பிலிருந்து தென்மேற்கில் 26 கி. மீ. இல் உள்ளது./

## ஆரூர் (திருவாரூர்)

எல்லா உயிர்களிலும் உள்ளே மலரும் இதயத் தாமரை போல, உலகமாம் காதல் மங்கையினுடைய இறைவன் வெளிப்படும் இடமாம் இதயத் தாமரையாகச் சிவபெருமான் எழுந்துள்ள ஆரூர் தென் திசையில் மலர்ந்தது (43).

சோழ நாட்டில் தொன்மையில் மிக்கது. திருமகள் வழிபட்டது, சிவபெருமான் திருவாரூர்த் திரு நகர் (86). வேதம், வீணை, தோத்திரம், ஆடல், முழவு, பாடல் ஆகிய ஓசைகள் அந்நகரில் கிளர்ச்சியூட்டின (87). பல இயங்கள் ஒலி, தேர் ஒலி, யானை ஒலி, குதிரை ஒலி ஆகிய ஒலிகள் அளவின்றி அந்நகர் எங்கும் எழுந்துள்ளன (88).

மாடம், மாளிகை, சூளிகை, மண்டபம், கூடம், சாலைகள், கோபுரம், திண்ணைகள், சாளரம், அரங்கு எங்கும் ஆடும் மகளிரின் சிலம்பு ஒலித்தன (89). அவ்விடத்தே உரைக்கும் உரைகளுக்கு அளவில்லை. அங்குள்ள மாளிகைகளில் பதியிலார் மாளிகைகள் பல இருந்தன. அம்மாளிகைகளில் ஒன்றிலே உமையம்மையின் சேடியாம் பரவை அவதரித்தார் (90).

பேரொளி மிக்க வீதி, சிவபெருமான் சுந்தரர்க்குத் தூது போய் நடந்த தாமரைத் திருவடி மணம் கமழும் (91). பெண்கள் தெருவில் தெளித்த குங்குமக் குழம்பை அவர்கள் அணிந்த மாலையிலிருந்து பூந்தாது உதிர்ந்து புலர்த்தும் (92). திருவாரூர் மருங்கெல்லாம் கிளிகள் திருப்பதிகம் பாடப் பூவைகள் கேட்கும் (93). கலன்கள் விரவு

வதால், பேரொலியால், பண்டங்கள் மடுத்தலால் ஆவண வீதிகள் கடலைப போன்றன (94). வீதிகளில் வேதங்களின் முழக்கமன்றி, யானைகளும் முழங்கும். தேவர்கள் நிறைந் திருப்பர்; மாலைகளும் சூழ்ந்திருக்கும் (95). நீண்ட சடை யினர், சைவர், பெருந்தவசிகள், முனிவர், மறையவர், இன் பத்துறையில் பொருந்தியவர் சூழ்ந்து வாழும் பல இடங் களை உடையது பழமை மிகுந்த திருவாரூர் (96). நில மகளின் நெற்றித் திலகம் போன்றது சோழர் வாழும் இவ்வூர். திருமகள் வாழும் தாமரை போல் மலர்ந்து விளங்கும் (97).

இவ்வூரில் பிறந்த உயிர்களைக் கொன்றவனைக் கொல்வதே அறம் என மனுவேந்தன் தன் அமைச்சர் களிடம் கூறினான் (126). தன் மகன ஆவின் கன்றின் மீது திருவாரூரில் தேர் ஏற்றிக் கொன்றதால் அவன் மீது தேரூர்ந்தான் மனு. ஆதலால் இவ்வூர் வீதியிலே அவ் வேந்தனுக்கு இறைவன் அருள் செய்தார் (134).

சுந்தரர் 'முத்தெறியும் நீர்வளமிக்க பொன்னி பெரு கும் வண்ணப் பண்ணை ஆரூரில் நம்பால் வருக' என்று சிவனருளால் வானில் நாதம் கேட்டு உணர்ந்தார் (254). திருவாரூரை வணங்கப் புறவம், கோலக்கா முதலிய பதிகளை வணங்கிச் சென்றார் (260). அவரை வரவேற்க ஆரூர் வாழ்வாருக்குச் சிவபெருமான் அருள் செய்தார் (264). ஊரை அலங்கரித்து விரைப்பணி நீர் தெளித்துக் கீதம் பாடி நடனம் ஆடித் திருவாரூர் வாழ்வார் வாயில்புறத்துச் சுந்தரரை வரவேற்றனர் (268). சுந்தரர் 'கரையும் கடலும் என்ற பதிகத்தில் 'எந்தையிருப்பதுமாரூர்' எனப் பாடிப் பணிந்தார் (269). சுந்தரர்க்குத் 'தோழமையாக உனக்கு நம்மைத் தந்தோம். மணக்கோலம் என்றும் புனைந்து நிலவுலகில் வாழ்க' என இறைவன் வாக்குக் கேட்டது. அது கேட்டு ஆரூரில் புற்றிடங் கொண்ட பிரானை வணங்கச் சுந்தரர் சென்றார் (274).

திருவாரூரில் இறைவன் முன்னின்று சென்ற பரவை யாரைத் தேடச் சுந்தரர் முற்பட்டார் (297). இறைவ

னையே பரவையை அளிக்குமாறு வேண்டினார் (302). பரவையும் ஆரூர் இறைவன் முன் கண்ட அடியார் யார் எனக் கேட்டுச் சுந்தரர் என அறிந்தார் (317). தேவரும் பணியும் திருவாரூர் இறைவனின் திருவடிகள் பரவையிடம் தூது செல்ல இவ்வூர் வீதியில் நடந்தன (324). சுந்தரர்க்கு நம்பி ஆரூரர் என்ற பெயர் இவ்வூரால் அமைய மக்க ளெல்லாம் அவரை 'ஆரூர் மறையவர் தலைவ' எனப் போற்றினர் (332).

இவ்வூரின் இறைவனைச் சுந்தரர் வணங்கி அருள் பெற்றார் (346). 'திருத்தொண்டத் தொகை' யைச் சுந்தரர் பாடத் திருவாரூர் இறைவன் ('தில்லை வாழந்தணர் தம் மடியார்க்குமடியேன்' எனும்) அடி எடுத்துக் கொடுத்தார் (358).

* * *

விறன்மிண்ட நாயனார் மலை நாட்டைக் கடந்து சிவன் வீற்றிருக்கும் திருவாரூரைச் சென்று பணிந்தார் (496).

* * *

திருநாவுக்கரசர் திருநல்லூரில் இறைவனை வணங்கி யிருந்தபோது பெருங்காதலால் பிரமனும், திருமாலும் அறிதற்கரிய சிவனது திருவாரூரைத் தொழ நினைந்தார் (1479). அவர் ஆரூர் வருவதை அறிந்து மாளிகை மாடம் அழகு சிறந்திட, வீதிகள் பொலிய, மங்கல அணிகளைச் செய்தனர் இவ்வூரார் (1483). திருவாரூர் வீதியுள் செல் லும் போதும் அப்பர் தம்முணர்வு அற்றவராய்ச் சென்றார் (1485). புற்றிடங்கொண்ட பெருமானைப் 'பாடிளம் பூதத் தினானும்' எனும் பதிகம் பாடி வணங்கினார் (1491). இவ்வூர் அரன் நெறியாக நமிநந்தி அடிகள் தொண்டைத் திருவிருத்தத்துள் (வேம்பினைப் பேசி) பாடி வீதிப்பணி செய்து வந்தார் (1492). இங்கிருந்து வலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் ஆகிய ஊரார்க்குச் சென்று வணங்கி மீண்டும் வந்தார் (1493). மற்றுமுள்ள பதிகளை வணங்கும் காதல் வேட்கை மிக ஒருவாறு திருவாரூரை அகல நினைத்து இங்குத் தம் உள்ளம் வைத்தார் (1495). மணிப்புற்றி லமர்ந்த பிரானை வணங்கிப் புறப்பட்டார் (1497).

அப்பரைக் கண்ட சம்பந்தர் 'நீர்வரு நாளில் திருவாரூர் நிகழ் பெருமை வகுத்துரைப்பீர்' என்றார் (1499). அதற்கு அப்பர் 'ஆரூர்நகராகும் சிவனின் ஆதிரை நாளின் தகைமையை எவ்வாறு மொழிவேன்' என 'முத்து விதான மணிப் பொற்கவரி' என்ற பதிகத்தில் விரித்துரைத்தார் (1500). அது கேட்டுச் சம்பந்தர் 'ஆரூர் கும்பிட்டு உம்முடன் வந்து உடன் அமர்வேன்' என்றார் (1501). மாமதில் ஆரூர் வணங்கச் சென்றார் (1502). திருவாரூர் இறைவனை வணங்கிய சம்பந்தர் திருப்புகலூர் சென்றார் (1506). திருப்புகலூராம் இவ்வூரில் அப்பரை அரம்பையர் மயக்கிய போது திருவாரூர் அம்மானுக்காளானேன்; அலையேன் மினீர்' என்று 'பொய்ம்மாயப் பெருங்கடலுள்' எனும் திருத்தாண்டகம் புகன்றார் (1688).

* * *

நமிநந்தியடிகள் என்னும் நாயனார் தம் ஊராம் ஏமப்பேறூரை விட்டு நீங்கிச் சிவன் தாள் பணிவதே ஊதியம் என எண்ணித் திருவாரூரை அடைந்தார் (1871). இவ்வூர்க் கோவிலுள் திருமுற்றத்தின் ஒரு பக்கத்திலுள்ள அரநெறி என்ற தலத்தை வணங்கினார் (1872). சமணர்க்குத் தெளிவுண்டாகும் வகையில் அவர்கள் கூறிய வண்ணம் விளக்கில் குளத்தின் நீரைப் பெய்து விளக்கெரித்தார் (1879). தம் ஊர் திரும்பி இறைவனை வணங்கி விடியலில் பூசை நியமத்தை முடித்து மீண்டும் ஆரூர் அணைந்தார் (1881). இவர் திருப்பணியால் சமணர் அழியத் தேவர் பணியும் திருவாரூரில் ஏழுலகம் போற்றும் பெருமை நிலவியது (1883). அடிகள் தொண்டால் இறைவற்கு நிபந்தம் பலவும் சோழ மன்னன் அமைத்தான். இறைவன் திருவாரூரில் திருவிளையாடல் புரியும் செயலினையும் பங்குனி உத்திரத் திருவிழாவையும் கொண்டருளுமாறு விண்ணப்பிக்க, விழா கொண்டாடும் நிலை பெற்றார் அடிகள் (1885). இவ்வாறு திருப்பணிகள் பலவும் செய்து திருவாரூரில் சிவனடியார் வழி நின்றார் (1886). தம்மூரில் அடிகள் துயிலும் போது கனவில் சிவன் 'ஞானமறையோர் ஆரூரில் பிறந்தார் எல்லாம் நம் கணங்களான பரிசு காண்பாய்' என

அருளினார் (1892). எழுந்த அடிகள விடியலில் விரைவாக இறைவன் திருவாரூருள் புக எதிரே அந்நகரைக் கண்டார் (1893). தெய்வப் பெருமான் திருவாரூர்ப் பிறந்து வாழ் வார் எல்லாரையும், சிவன் வடிவாகக் கண்டு நிலந்தோய விழுந்து வணங்கினார் (1894). பின்னர்த் திருவாரூரகத்துப் புகுந்து வாழ்ந்தார் (1895). திருத்தொண்டு புரிந்து ஆரூர் மன்னராம் சிவனடி சேர்ந்தார் (1897).

* * *

திருஞானசம்பந்தர் திருவானைக்காவில் இறைவனைத் தொழுதபோது 'மண்ணது வுண்டரி' என்றபதிகத்தில்சிவன் செல்வத் திருவாரூரில் எழுந்தருளிய பண்பைக் குறித்துப் பாடினார் (2244). திருப்புகலூரில் தங்கியிருந்தபோது திருவாரூரானைப் புகழ்ந்து போற்றிய அப்பர் வந்தார் (2390). அவரை எதிரேற்ற சம்பந்தர் 'அழகிய குளிர்ச்சி யுடைய திருவாரூரினை எத்தன்மையில் தொழுது உய்ந்தது? எனக் கேட்டார் (2393). ஆரூர்த் திருவாதிரை விழாவின் சிறப்பைக் கேட்ட சம்பந்தர் 'திருவாரூர் வணங்குதற்குச் சென்று மீண்டும் வருவேன்' எனக் கூறிச் சென்றார் (2394). திருவாரூர் செல்லும் வழியில் 'பாடல னான்மறையன்' என்ற பதிகம் பாடிச் சென்றார் (2396). கதிர் மண்டலத் தளவு உயர்கொடி ஆரூர் பொன்னுலகம் எனத் தோன்றப் 'பருக்கை யானை' என்ற பதிகம் பாடி அவ்வூர் எல்லை சேர்ந்தார் (2397). சிவிகையிலிருந்து இறங்கி மலர் தூவித்' திருவிருக்குக்குறள் பாடி ஆரூரைப் பணிந்தார் (2398). சிவனடியார்கள் சம்பந்தரை வரவேற்றனர். இதனால் ஆரூரின் அழகு எல்லையற்றதாய் விளங்கியது (2399).

பல்வகை அணியழகு பொருந்தி விளங்குகின்ற, தேன் மலர்நிறைந்த சோலை சூழ்ந்த பெருந்திருவாரூரில் இறைவன் அருளால் அடியவரும் ஏனைமக்களும் ஊரின் எல்லையில் சம் பந்தரை எதிரேற்றனர் (2404). சிலநாள் தங்கிப் பின் பல பதிகளுக்குச் சென்று மீண்டும் ஆரூர் தொழச் சம்பந்தர் வந் தார் (2413). இவ்வூரினின்று புறம்புபோந்து இதனையே நோக்கி நின்று 'பவனமாய்ச் சோடையாய்' என்ற பதிகம் பாடி (2416) ஆரூர்ப் பணிந்துஅரிது சென்றார் (2417).

பல ஊர்கள் சென்று வணங்கியபோது திருவாரூர்த் தொழ சம்பந்தர் நினைந்தார் (2471). இங்குச் சென்று வணங்கிப் பின் காறாயில் முதலிய தலங்கட்குச் சென்றார் (2472).

* * *

'திருத்தொண்டத்தொகை' பாடிய சுந்தரர், கருத் தொன்று காதலினால் பொன்மதில் திருவாரூரில் சிவனை வணங்கிப் பிரியாது உறைந்தார் (3163). 'சுந்தரரின் திருவாரூர்த் திருமாளிகைக்கு நெல்லெடுக்கக் குறை யாகின்றது என்செய்கேன்? எனக் குண்டையூர்கிழார் வருந்தினார் (3167). இறைவனருளால் சுநதரர் பரவை மனையளவின்றித் திருவாரூர் நிறைய நெல்லைப் பூதங்கள் கொண்டு தந்தன (3175).

இறைவன் அருளைப் போற்றிய சுந்தரர் பல பதிகள் வணங்கிப் பின் திருவாரூர் சென்றார் (3176). குண்டையூர் நெல்மலையால் சிவன் பூதகணங்கள் தம் மாளிகையை நிறைவித்துத் திருவாரூர் அடங்கவும் நெல்மலையாக்கிய தைக் கண்டு அற்புதம் எய்தினார் (3179). புலர்காலையில் அவ்வூரார் நெல்மலையைக் கண்டதிசயித்தனர் (3180).

அணியாரூர்த் தெருக்களில் ஆளியங்கப் பறையறைந்த தால், தம் மனை எல்லைக்குட்பட்ட நெல்லை எல்லாம் தத்தம் வீட்டிற்கெனக் கொண்டனர் (3183). சுந்தரர் ஆரூரில் விரும்பி உறை நாட்களில் புற்றிடங் கொண்ட பெருமானைப் பணிந்து வாழ்ந்தார் (3184). இவ்வூர் இறைவன் முன்னிலையில் தேவர் ஒதுங்கத் திருத்தொண்டர் மிடைந்தனர். இது திருவாரூரைச் செல்வத் திருவாரூர் எனப் புகழ் பெறச் செய்தது (3186).

பல தலங்களைப் பணிந்த பின் பெருமை மிக்க திருவா ரூரைச் சுந்தரர் அடைந்தார் (3198). பரவையாருடன் மாளிகையில் விரும்பி உறைந்து செல்வத் திருவாரூர்க்குப் பக்கத்திலுள்ள கோயில்களைப் பணிந்து திரும்பினார் (3199). அப்போது திருவாரூர்ப் பங்குனி உத்திரத் திருநாள் வந்தது (3200). பொன்பெறப் புகலூர் செல்ல அங்குச் செங்கல் பொன்னாயிட அவற்றைக் கொண்டு திருவாரூர்ப்

பரவை மாளிகைக்குத் திரும்பினார் (3208). அங்குத் தங்கிய நாட்களில் அழகிய குளிர்ந்த திருவாரூர்க்கருகி லுள்ள கோயில்கள் பலவற்றையும் வணங்கித் திரும்பினார் (3209).

திருமுதுகுன்றூரில் இறைவனிடம் தாம் பெற்ற பன்னி ரண்டாயிரம் பொன்னை ஆரூர் மக்கள் மருளுற்று வியக்க, அங்கே வரப்பெறவேண்டும் எனச் சுந்தரர் வேண்ட 'மணிமுத்தாற்றிலிட்டுத் திருவாரூர்க் குளத்தில் போய்க் கொள்க' என இறைவன் அருளினார் (3262).

சிவபெருமான் இடங்கள் பலவும் வணங்கி மேகம் சூழ்ந்த சோலைகள் நிறைந்த மலர்த் தடங்கள் சூழ்ந்த, செந்நெல் வயல் மருதத் திருவாரூரைச் சுந்தரர் அடைந் தார் (3277). செல்வமலி திருவாரூரில் தேவரொடு முனிவர் களும் மல்கிய கோபுரத்தை அணுகி வணங்கினார் (3278). ஒருநாள் அடியாருடன் திருவாரூர் இறைவனைப் 'பாறு தாங்கிய' என்ற பதிகம் பாடினார் (3295). சுந்தரரையே 'திருவாரூர்த் தம்பிரான்' எனப் போற்றினர் அடியார்கள் (3312). நம்பியாரூரர் எனவும் குறிக்கப் பெற்றார் (3395).

ஆரூர் மீது அத்தகைய அன்பு பூண்டு மிகவும் மகிழ்ந் துறையும் பாங்கினை, அவரை மணக்கப் போகும் சங்கிலி யாரும் அறிந்திருந்தார் (3396). சங்கிலியை மணந்து அவளைப் பிரியாதுறையச் சபதம் செய்ததை மறந்து பொதியத் தென்றல் ஒற்றியூரில் வந்து சாரத் திருவாரூர் அணி வீதி அழகர் மங்கல வசந்தத் திருவோலக்கத்தை எண்ணினார் சுந்தரர் (3424). திருவாரூர் மகிழ்ந்தானை மிக நினைந்து 'பத்திமையும்' என்ற பதிகம் பாடினார் (3427). பின்னொருநாள் ஆரூர்தனைப் பெருக நினைந்து ஒற்றியூரை நீங்கப்புகக் கண்ணொளி மறைந்து மூர்ச்சித் தார் (3428). அதனைச் சிவனருளாக எண்ணித் திருவாரூர்த் தொழ நினைந்து பொங்குகாதல் மீளா நிலைமையால் சென்றார் (3431). காஞ்சியில் இடக்கண்ணொளி பெற்று அவ்வூரைக் கடந்து செல்லும் சுந்தரர் 'திருவாரூர் மேல் பரவி 'அந்தியும் நண்பகலும்' என்ற பதிகம் பாடி 'எந்தை

பிரான் திருவாரூர் என்று கொல் எய்துவது' என ஏங்கி னார் (3445). பல ஊர்கள் கடந்து கண்ணிறைந்த திருவா ரூர் முன் தோன்றக் கண்டார் (3455). ஒரு கண்ணால் அதைக்கண்டு இன்பம் முற்றப் பெறாது பொழுதுமயங்கும் மாலைப் போதில் ஊருட்புகுந்து (3456) மற்றொரு கண்தர 'மீளா அடிமை' என்ற பதிகம் பாடிக் (3463) கண் பெற்றார்.

சுந்தரரைப் பரவையார் எதிரேற்காது ஊடியதால் இறைவன் அதற்காகத் தூது செல்லத் திருவாரூர் வீதியிலே சென்றபோது சிவலோகம் முழுதும் காணுமாறாயிற்று (3490). தூது சென்று திரும்பிய ஆரூர் இறைவன் சுந்தரரி டம் திரும்பினார் (3523).

இவ்வாறு இறைவனைப் பரவையிடம் தூதுவிட்ட சுந்தரர் மீது ஏயர்கோன்கலிக்காமர் செற்றம் கொள்ள அதை நீக்கிய சுந்தரர் அவரை அன்புடன் அழைத்துக் கொண்டு மலர்புகழ்த் திருவாரூர் அடைந்தார் (3561).

* * *

திருவாரூரில் வாழ்ந்த சமணர்களின் தீய செயல்களைத் தண்டிஅடிகள் கலங்கச் செய்தார் (3591). அவர் திருவா ரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார் (3592). செல்வத் திருவாரூர்ப் பெருமானுக்கே தொண்டு புரிந்து வந்தார் (3593). சிவனருளால் அவரைக் கண்பெறுமாறு அரசன் கூற, அவர் 'சிவனுக்கு ஏய்ந்த அடிமை யான் என்னில், இன்று என் கண் பெற்றிடத் திருவாரூர் விரவும் சமணர் கண் இழப்பர்' என்றார் (3610). அதனால் கண்ணிழந்த சமணர் திருவாரூரிலிருந்து அகன்று போய்க்கழிய அரசன் ஆணையிட்டான் (3612). கண்ணிழந்து பலவாறு சமணர் திருவாரூரில் கலங்கினர் (3615).

* * *

சீரும் திருவும் பொழியும் திருவாரூர்ச் சார்ந்து சுந்தரர்க்கு அன்பால் சோமாசிமாற நாயனார் சிவலோக இன்பம் பெற்றார் (3633, 3634).

* * *

கழறிற்றறிவார் நாயனார் எனும் சேரமான் பெருமாள் பல ஊர்களிலுள்ள இறைவனைச் சுந்தரருடன் வணங்கிப் பின் மிக விரைவுடன் மகளிர் மணிவாய்க்குத் தோற்றுச் சேதாம்பல் இரவிலே மலரும் திருவாரூர் வந்து சேர்ந்தார் (3867). அவர்களிருவரையும் திருவாரூர் மக்கள் எதிர் கொண்டு காதலுடன் வணங்கினர் (3868). தொண்டர் களுடன் சுந்தரரும் கழறிற்றறிவாரும் செம்பொன் மதில் ஆரூரைத் தொழுது சென்றனர் (3876).

**கொடுங்கோளூரில்** கழறிற்றறிவார் அரண்மனையில் தங்கி மகிழ்ந்திருக்கும் ஒரு நாள் திருவாரூர் ஆளும் சிவனை எண்ணிப் 'பொன்னும் மெய்ப்பொருளும்' என்ற பதிகம் பாடி ஆரூரைவிட்டு வந்ததற்கு அஞ்சினார் (3903). திரு வாரூரைச் 'சென்று தொழுவேன்' என்று சுந்தரர் புறப் பட்டார் (3904). அப்போது அவரிடம் சேரமான் பெரு மாள் 'தேரூரும் நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள நேரூரும் மனக் காதல் நீக்க அஞ்சுவ'தாகக் கூறினார் (3906).

அதுகேட்ட சுந்தரர் 'என்னுயிர்க் கின்னுயிராம் எழில் ஆரூர்ப் பிரானை ... மறந்திரேன்' என்றார் (3907).

கோமானைப் பிரிந்து காதலினால் விரைந்தேகிக் கரும் பும் நெல்லும் சூழ்ந்து விளங்கும் திருவாரூர்ச் சென்றணைந் தார் (3919).

* * *

கழற்சிங்க நாயனார் சிவன் கோயில்கள் பலவும் சென்று பிறழா அன்பால் வணங்கி உண்மைத் தொண்டு புரிவார் ஆகிச் சிவபுரி என்ன விளங்கும் தென் திருவா ரூர் எய்தினார் (4098). இக்கோயிலில் வலம் வரும்போது பட்டத்தரசி இறைவற்குரிய பூவை எடுத்து மோந்தார், அது கண்டு சிவாபராதம் எனச் செருத்துணையார் அவ் வரசி மூக்கை அறுத்தார். அரசரோ பூவை எடுத்த அரசி யின் கையையும் வாளால் அறுத்தார். திருவாரூர் இறைவன் அரசர்க்கு அருள்புரிந்தார் (4107).

* * *

சிவன் பத்தராய்ப் பணிவார் பல வகையாவர். அவர் களில் திருவாரூர் ஆளும் சிவனை வணங்குபவர் ஒருவகை யினர் (4154).

தொகையடியார்களுள் 'திருவாரூர்ப் பிறந்தார்' என்ப வர்கள், ஒரு கூட்டமாவர். 'திருவாரூர்ப் பிறந்தார் புரா ணம்' எனவே பெரிய புராணத்தில் தனிப்புராணம் உளது. சிவன் மகிழ்ந்தருளும் திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத் தொண்டைக் கூறுவது அருமையாகும் (4158). இவ்வூரில் பிறந்தவர்கள் சிவபெருமான் திருக்கணத்தார். எனவே இவ்வூரார் அடியை வணங்கினால் உயர்நெறி அடைவது எளிது (4159).

⁂ ⁂ ⁂

திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் யாழ் வாசித்துப் பல பதிகளில் இறைவனை வணங்கித் தேவர் நாட்டாட் சியை விடுத்து ஆரூர் ஆண்டவரின் திருவாரூர் அடைந்தார் (4221). சீலமுடைய அடியார் பிரியாத திருவாரூர் என இவ்வூர் போற்றப் பெறும் (4223).

⁂ ⁂ ⁂

ஆரூரில் இருந்த சுந்தரர் சேரமான் பெருமானைக் காண விரும்பினார் (4231). அவர் வரவறிந்த சேரமான் 'ஆரூரிற் சைவன் அணைந்தான்' என உவகை முரசம் நகரெங்கும் அறைவித்தார் (4245). வந்த சுந்தரரிடம் திருவாரூர்ச் செல்வம் கேட்டின்புற்றார் (4248).

/ மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 39 கி.மீ. இல் உள்ள சந்திப்பு /

## ஆலந்துறை[1] (திருவாலந்துறை)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர். தேவர்கள் வந்து பணிந்தெழும் ஆலந்துறை என்னும் ஊரிலுள்ள கோயிலைத் திருஞானசம்பந்தர் வணங்கினார் (2240). இப்போது **அந்தநல்லூர்** என வழங்கப் பெறும் **(அந்தவனநல்லூர்,**

அந்துவனல்லூர்). /திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிற்கு மேற்கில் 10 கி. மீ. இல் உள்ளது./

**ஆலந்துறை**[2]

**திருப்புள்ளமங்கை** என்னும் ஊரிலுள்ள கோயிலின் பெயரும் ஆலந்துறை (2261). இது காவிரிக்குத் தென்கரையிலுள்ளது. இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'பாலுந் துறு திரள்' எனும் பதிகம் பாடினார்.

/ தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 16 கி.மீ. இல் உள்ளது. /

**ஆலம்பொழில்: (திருவாலம்பொழில்)**

இவ்வூர் சோழநாட்டில் உள்ளது.

அழகிய ஆலம்பொழிலுள்ள இறைவனைத் திருஞானசம்பந்தர் வணங்கிச் சென்றார் (2249). (இங்குச் சம்பந்தர் பாடிய பதிகம் கிடைத்திலது.)

சுந்தரர் இவ்வூரைச் சேர்ந்து இரவில் பள்ளி கொண்டிருந்த போது அவருடைய கனவில் 'மழபாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ?' என்று அழகிய தம் கோலம் காட்டிச் சிவன் அருளினார் (3225, 3226).

(இங்கு அப்பர் செய்த உழவாரப் பணிக்கு இத்தலத்து வைணவர்கள் இடையூறு செய்தனர். அதனால் சம்பந்தர் ஆணையிடக் காவிரி பெருகி அவர்கள் வீடுகளையும் திருமால் கோயிலையும் பெயர்த்துச் சேந்தலைப் **பெருமாள் கோயில்** உள்ள இடத்துச் சேர்த்தது. அது முதல் இவ்வூரில் வைணவக் குடிகள் இரவில் தங்கக் கூடாது என்று செவி வழிச் செய்திக் கூறும்.)

/தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 10 கி. மீ. இல் உள்ளது. /

**ஆலவாய்:** *காண்க:* **மதுரை.**

**ஆவடுதுறை:** (திருவாவடுதுறை, ஆவடுதண்டுறை, திருவாவடுதண்டுறை) சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையிலுள்ள ஊர்.

(பசுத் தன்மையைப் போக்குகின்ற (ஆ + அடு) ஊர்.

கயிலையிலிருந்து வந்த யோகியார் (திருமூலர்) காவிரி நீர்ப்பெருந்தீர்த்தம் ஆடித் தென்கரையேறிப் பசுவின் கன்றாக உமை தவம் செய்யும் ஆவடுதண்டுறை சேர்ந்து இறைவன் கோயிலை வணங்கி, மேவு பெருங் காதலினால் பணிந்து இங்கு விருப்புற்றிருந்தார் (3572).

இங்குப் பசுக்கள் புலம்புவது கண்டு அதன் காரணத்தை அறிந்தார். பசுக்களை மேய்த்த மூலனைப் பாம்பு கடிக்க அவன் இறந்தது அறிந்து அவனுடம்பில் தாம் புகுந்து பசுக் களிடர் தீர்த்தார். மூலன் உறவினர்க்கும், அவன் மனைவிக் கும் தாம் இடையன் அன்று எனக் கூறித் தம்முடம்பு வைத்த இடத்திற் சென்று தேடியபோது அது காணாமல், தம் செயலை ஆய்ந்து தெளிந்தார். ஈசரருளை எண்ணி (3586) ஆவடுதண்டுறை சேர்ந்தார். சிவனை வணங்கி அரசமரத்தின் கீழமர்ந்து சிவயோகம் புரிந்து 'திருமந்திரம்' படைக்க இவ்வூர் இடமாக அமைந்தது.

அப்பர் இவ்வூரைச் சார்ந்து (1455) 'நம்பனை' என்ற திருத்தாண்டகம் பாடி வணங்கினார். திருக்குறுந்தொகை, நேரிசை, சந்த விருத்தங்கள் ஆகியவை வேறு வேறு பாடித் துதித்துப் பல நாள் தங்கிக் கைத்திருத் தொண்டாம் உழவாரப் பணியைப் போற்றிச் செய்தார் (1456). 'மாயிரு ஞாலம்' என்ற பதிகம் பாடினார் (1558).

இறைவன் கோயில்கள் பலவற்றை வணங்கித் திருஞான சம்பந்தர் திருவாவடு துறையைச் சேர்ந்தார் (2315). இவ்வூரில் சம்பந்தரைத் திருத்தொண்டர்கள் எதிர் கொள்ளும் ஆதரவுடன் கலந்தனர் (2316). ஆவடுதுறை இறைவனைச் சம்பந்தர் பணிந்தார் (2318) (இங்குச் சம்பந் தர் பாடிய பதிகம் கிடைத்திலது.). தொண்டர்களுடன்

இன்பம் மேவிய இப்பதியில் அமர்ந்தார் (2319). வேள்வி செய்தற்குரிய பொருள் வேண்டுமாறு சம்பந்தரின் தந்தை கூறினார். அது கேட்ட சம்பந்தர் 'அந்தமில்லாத பொருள் ஆவன ஆவடுதுறையின் எந்தையார் அடித்தலங்கள் அன்றோ' என இவ்வூர்க் கோவில் இறைவன் மீது 'நாலடி மேல்வைப்பு'ப் பாடினார். இறைவனருளால் சிவபூதம் பலிபீடத்தின் மேல் ஆயிரம் பசும்பொற்கிழியை வைத்தது. அதனைத் தம் தந்தைக்களித்துச் சம்பந்தர் ஆவடுதுறையில் மகிழ்ந்து இனிதிருந்தார் (2328).

சுந்தரர், இனிய நினைவினால் திருவாவடுதுறை வந்து எய்தினார் (3216). இவ்வூர்க் கோயிலை வலம்கொண்டு உட்சென்று இறைஞ்சி 'மறையவன்' என்ற பதிகத்தில் கோச்செங்கணான் பிறப்பைச் சிறப்பித்துப் பாடினார் (3217). இங்குத் தங்கியிருந்த நாட்களில் அன்பர்களுடன் மீண்டும் சிவனை வணங்கினார் (3218).

பலபதிகள் பணிந்து வந்து சுந்தரர் அடியவர்களுடன் காவிரியில் குளித்து இவ்வூரை அடைந்தார் (3449).

(வடமொழியில் கோமுத்தீச்சுரம் என்று வழங்கும். ஆதியில் ஆலயப் பெயராக அமைந்திருத்தல் கூடும். த. ஊ. பே. 1976, ப. 190)

/ மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 20 கி. மீ. இல் உள்ளது. /

**ஆவூர்: (திருவாவூர்)**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

ஆ பூசித்தமையால் இப்பெயர் பெற்றது.

அப்பர் இவ்வூர்க்குச் சென்று சிவனை வணங்கிப் பெருகார்வத்துடன் திருத்தொண்டு செய்தார் (1463).

சிவபெருமானின் பழம்பதியான இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் அன்பர்கள் துதித்து ஒலிபெருக வாழ்த்திட

வந்தார் (2274). இவ்வூரிலுள்ள பசுபதீச்சரம் என்ற கோவிலிலுள்ள இறைவனைத் துதித்துப் பாடினார். (த. ஊ. பே. 1976, ப. 248).

/ கும்பகோணம் நிலையத்திற்குத் தென்மேற்கே 10கி. மீ. இல் உள்ளது. /

**ஆறை:** (திருவாறை, பழையாறை)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

பொன்னி நாட்டில் சோலைகள் சூழ்ந்து, தேரொடு வீதிகள் சிறந்து உலகில் நீடிய பெருமை சேர்ந்தவூர் ஆறை (பழையாறை) (502).

இவ்வூரில் பிறந்தவர் அமர்நீதிநாயனார் (501).

இங்குள்ள பல கோயில்களை அப்பர் வணங்கினார் (1480).

அமணர் மறைத்த இவ்வூர் வடதளிக் கோயில் இறைவனையும் வணங்கினார். அவ்விமானம் அமணர் வஞ்சனையாற் செய்தது எனக் கேட்டு உள்ளம் பொறாது சிவனை நினைந்து அவர் தம் வஞ்சனையை ஒழித்தருளப் பணிந்தார் (1560). 'வடிவு கண்டன்றிப் போகேன்' என அமுது செய்யாது இருந்தார். சிவன் இதனை மன்னனுக்குக் கனவில் அருள அரசன், அமணர் வஞ்சனையை நீக்கிச் சிவ பூசைக்கு வேண்டுவன செய்தான். 'தலையெலாம்' என்ற திருக்குறுந்தொகை பாடி அப்பர் இறைவனை வணங்கி மகிழ்ந்தார் (1561–1565).

வானமளாவிய நீண்ட மதில் ஆறையின் மேற்றளியைத் திருஞானசம்பந்தர் தம் அடியவர்களுடன் அடைந்தார் (2287). இப்பதியின் வடதளியில் சென்று இறைவனைப் பாடி இறைஞ்சினார் (2297). (இப்பதிகம் கிடைத்திலது.)

சுந்தரர் இவ்வூர் மேற்றளியை அடைந்து நாளும் வணங்கி அருள் மிகப் பெற்றார் (3247, 3248). 'அங்க

மோதியோராறை மேற்றளி' எனப் பதிகத்தின் தொடக்கத்தில் இவ்வூர்க் கோயில் சிறப்பைப் பாடினார் சுந்தரர் (3250).

[கும்பகோண நிலையத்திற்குத் தென்மேற்கில் 8 கி. மீ. இல் உள்ளது.]

**ஆனைக்கா: (திருவானைக்கா)**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது இவ்வூர்.

யானை பூசித்துப் பேறு பெற்ற இடம். (த. ஊ. பே. 1976, ப. 156) அப்பர் இவ்வூர்க்குச் சென்றார் (1566).

இவ்வூர்க் கோவிலிறைவன் சிலந்திக்கருள் செய்ததைக் குறித்துக் 'கோனைக்காவிக் குளிர்ந்த மனத்தராய்', 'எத்தாயர்', 'முன்னானைத் தோல் போர்த்த' எனும் பதிகங்கள் பாடி வணங்கினார் (1567).

திருஞானசம்பந்தர் இவ்வூரினை வணங்கும் விருப்போடு வந்தார் (2242). ஆனைக்காவில் வெண்ணாவல் மரத்தில் மேவிய இறைவனை வணங்கினார். அங்கு நான்கு கொம்புள்ள வெள்ளை யானை பணிந்ததையும், கோச்செங்கண்ணரசன் செய்த அடிமைத் திறத்தினையும் 'மழையார்' எனும் பதிகத்தில் பாடிப் பணிந்து எல்லையற்ற இன்பமடைந்தார் (2243,2244).

சுந்தரர் திருவானைக்காவை அடையத் திருத்தொண்டர்கள் அவரை வரவேற்றனர். இவ்வூர்க் கோவிலுட் சென்று 'மறைகளாயின' என்ற பதிகம் பாடினார். உறையூர்ச் சோழன் மணியாரத்தை இவ்விறைவன் அணிந்த அருட்டிறத்தைப் போற்றினார் (3230).

வெண்ணாவலின் கீழ் அமர்ந்த இறைவனை வெள்ளானை கைப்புனலால் நீராட்டி மலர் சூட்டி நாளும் வழிபட்டு வந்ததால் திருவானைக்கா என்ற பெயர் வந்தது. இவ்விறைவன் மீது சருகுதிரா வண்ணம் சிலந்தி தன் வாய்

நூலால் மேற்கட்டி அமைத்தது. அதனை யானை அழிக்க அது கண்டு பொங்கிய சிலந்தி அதன் துதிக்கையில் புகுந்து கடித்தது. யானை கையை நிலத்தில் மோதி வீழ்ந்து இறந் தது. இதனால் சிலந்தியும் இறந்தது. யானைக்கு வரங் கொடுத்துச் சிலந்தியைச் சோழ அரசனாக அருள் செய் தான் இறைவன். அது கோச்செங்கணனாய்ப் பிறந்தது. அவ்வரசன் சிவாலயம் பல கட்டி ஆனைக்காவில் பல பணி செய்தமைத்தான் (4209).

(இக்கோயில் வடமொழியில் ஜம்புகேசுரம் என வழங் கும் த. ஊ. பே. 1976, ப. 211).

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கில் 8 கி. மீ. தூரத்தில் உள்ளது.]

# இ

**இடும்பாவனம்: (திருவிடும்பாவனம்)**

காவிரியின் தென்கரையிலுள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர் சென்று 'மனமார்தரு' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2521).

(இடும்பன் பூசித்துப் பேறு பெற்ற இடம். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977 ப. 90),

[திருத்துறைப்பூண்டிச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**இடைச்சுரம்: (திருவிடைச்சுரம்)**

தொண்டைநாட்டுக் குறிஞ்சி நிலத்தில் உள்ள ஊர் இடைச்சுரம். தேவர்களும் அரம்பையரும் இங்கு வேடரும் மாதருமாகப் பிறந்து சிவனை வணங்குவர் (1090).

திருஞானசம்பந்தர் திருத்தொண்டருடன் வர இவ்

லூர்க் கோயிலின் கோபுரம் இறைஞ்சி உள் புகுந்து கோயிலை வலம் வந்தார். இறைவன் திருமேனி வண்ணம் கண்டதிசயித்த சம்பந்தர் 'வரிவள ரவிரொளி' என்ற பதிகம் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்திப் பெருந்தன வாழ்வினைப் பெற்றார் (3024-3026).

(திருவிடைச்சுரம், திருவடிசூலம் எனத் திரிந்துவிட்டது. த. ஊ. பே. 1976, ப. 10)

[செங்கல்பட்டுச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 7 கி.மீ. இல் உள்ளது.]

**இடைமருது: (திருவிடைமருதூர்)**

காவிரிக்குத் தென்கரையில் உள்ளது இவ்வூர். (வடநாட்டிலுள்ள மல்லிகார்ச்சுனத்திற்கும், தெற்கே பாண்டிநாட்டிலுள்ள திருப்புடைமருதூர்க்கும் இடையில் உள்ளதாலும், இம்மூன்று தலங்களிலும் மருது தலமரம் ஆதலாலும் இப்பெயர் பெற்றது.)

எறியும் நீரினால் பொன்னையும் மணிகளையும் சிதறும் அலையுடைய காவிரிக் கரையிலுள்ள இடைமருதை அடைந்த அப்பர், இறைவன் மீது 'காடுடைச் சுடலை' எனும் திருக்குறுந்தொகையும், திருநேரிசையும், 'பறையிேனாசையும்' எனும் திருக்குறுந்தொகையும, 'சூலப்படையுடையார்', 'ஆறுசடைக் கணிவர்' எனும் திருத்தாண்டகங்களும் பாடினார் (1457).

திருஞானசம்பந்தர் இடைமருதிற் பொன்னிக் கரை போய்ப் புகுந்தார் (2310). 'ஓடேகலன்' என்ற பதிகம் தாங்கரிய பெருமகிழ்ச்சியால் பாடினார் (2311).

சுந்தரர் தம் அடியாருடன் காவிரியின் தென்கரையிலுள்ள பல பகுதிகளுக்குச் சென்று பணிந்த பின்னர் இடைமருதை அடைந்தார் (3218). நிலைபெற்ற மருதின் இடமாக விரும்பி அமர்ந்த இறைவனைப் புகழ்ந்து பாடும்போது 'கழுதை குங்குமம் தான் சுமந்து' எனத் தொடங்

கும் பதிகம் பாடி வணங்கித் தொண்டருடன் புறப்பட்டார் (3219).

(இவ்வூர்க்கு மத்தியார்ச்சுனம் என்ற பெயர் வழங்கும். த. ஊ. பே. 1976, ப. 289)

[கும்பகோண நிலையத்திலிருந்து கிழக்கே 8 கி.மீ.இல் உள்ளது.]

**இந்திரநீலபருப்பதம் (இந்திரநீலபர்ப்பதம், திருவிந்திரநீலபருப்பதம்)**

வட நாட்டில் உள்ள ஊர்.

திருக்காளத்தியில் இறைவனைப் பணிந்து தங்கிய திருஞானசம்பந்தர் வடதிசையில் தமிழ் வழக்கு நிகழாததால், அங்குள்ள இறைவன் பதிகள் தோறும் சென்று தமிழிசை பாடும் செய்கை போலப் பாடினார் (2924). அவ்வாறு பாடும் போது இந்திரநீலபருப்பதத்தை நினைந்து 'குலவு பாரிடம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2925).

(இந்திரன் பூசித்ததால் இப்பெயர் பெற்றது என்பர். சிவஸ்தல மஞ்சரி, வ. த. சுப்பிரமணிய பிள்ளை, சென்னை, 1958 ப. 103.)

[நேபாளம், காட்மாண்டுவிலிருந்து வடமேற்கே 13 கி. மீ. இல் உள்ளது.]

**இராமீச்சரம்:** *காண்க:* **இராமேச்சரம்.**

**இராமேச்சரம்: (திருவிராமீச்சரம், திருவிராமேச்சுரம்)**

பாண்டி நாட்டிலுள்ளது இவ்வூர்.

இராமன் இறைவன் திருவுருவை நிலைநாட்டி வழிபட்ட தலம் ஆதலின் இப்பெயர் பெற்றது.

இலங்கை வேந்தன் இராவணனின் பத்துத் தலையும் துணித்த இராமனுக்கு வரும் பெரும் பாதகம் தீர்த்த

சிவனைத் தொழுவதற்கு அப்பர் இங்குச் சென்று (1673) 'பாசமும் கழிக்க கில்லா' எனும் திருநேரிசை பாடித்திருத் தொண்டு நலமுறச் செய்தார் (1674).

இலங்கையை அழித்ததால் விளைந்த மிக்க பெரும் பாதகத்தை நீக்க வேண்டி இராமன் சிவனை வணங்கிய திருவிராமேச்சுரத்தைத் திருஞானசம்பந்தர் சென்று சேர்ந் தார் (2785). திருமால் வழிபட்ட கோயிலை அடைந்து திருமுன்பு வீழ்ந்து எழுந்து பாண்டியன் நெடுமாறன், மங்கையர்க்கரசியார், மந்திரி குலச்சிறையார் ஆகியோரு டன் வாயிலில் புகுந்து, வலம் செய்தார். 'அலைவலர்' எனும் பதிகம் பாடினார் (2786).

வில்லேந்திய வேடர்உருவுடன் வென்றி அருச்சுனனுக்கு முன்பு பன்றியின் பின் சென்ற சிவன் விரும்பியமர்ந்துள்ள இராமேச்சரத்திற்குச் சேரமானுடன் சுந்தரர் வந்தார். இறைவன் திருமுன் வணங்கிப் பதிகம் பாடினார் (அது கிடைத்திலது. 3855, 3856). இங்குள்ள செழும்பவளச் சுடர்க் கொழுந்தாம் இறைவனைத் தொழுது புறப்பட்டார் (3857).

[மதுரைச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கில் 160 கி. மீ இல் உள்ளது.]

**இராமேச்சுரம்:** காண்க: **இராமேச்சரம்**

**இருக்குவேளூர்:**

செல்வமிகு சீர்மாடங்களில் திருத்தமுடைய பெருங்குடி மக்கள் நெருங்கியுள்ள, வளம்பெருக்கும் வடவெள்ளாற்றின் தென்கரையில் உள்ளது, இருக்குவேளூர் என்னும் இவ்வூர். இங்குப் பலாச்சுளையிலிருந்து பொழியும் தேன், மடு நிறைத்து வயல் விளையச் செய்யும். இவ்வூரில் கணம்புல்ல நாயனார் பிறந்தார் (4055).

(இன்று பேளூர் என்றபெயர் பெற்றுப் பச்சைமலையின் வடசாரலில் உளது.)

/சேலம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 50. கி.மீ. இல் உளளது./

**இரும்பூளை:** (திருஇரும்பூளை)

காவிரியின் தென்கரையில் உள்ளது.

**பழையாறை** வடதளியை வணங்கிய திருஞானசம்பந்தர் தம் தொண்டர்களுடன் இறைவனின் பதிகளில் ஒன்றான இரும்பூளை எய்தினார் (2297). அவரை வரவேற்கப் பந்தர்களைத் தோரணங்களுடன் நாட்டிப்பூமாலைகள் தொங்கவிட்டுப் பூரண பொற்குடம் வைத்துத் திருத்தொண் டர்கள் எதிர்கொண்டனர் (2298). சிவிகையிலிருந்து இழிந்த திருஞானசம்பந்தர் தொண்டர்கள் தொழத் தாமும் தொழுது சிவன் கோவில் சென்று (2299) 'சீரார் கழலே' என்ற பதிகத்தை அருமறையின் பொருள் விரியப் பாடினார் (2300).

(இது ஆலங்குடி என வழங்கப் பெறுகிறது.)

/நீடாமங்கலம் நிலையத்திலிருந்து வடமேற்கே 6 கி.மீ. இல் உள்ளது./

**இரும்பை:**

தொண்டை மண்டலத்தில் இவ்வூர் உள்ளது.

இங்குள்ள கோயில் மாகாளம் என்பதாம்.

(மாகாளர் பூசித்ததால் இப்பெயர் பெற்றது.)

திருஞானசம்பந்தர் இறைவன் அருளால் இரும்பை மாகாளம் சென்று வணங்கி உடன் திருவக்கரைக்கு மீண்டார் (2862). இங்கு 'மண்டு கங்கை' எனும் பதிகம் பாடியருளினார்.

/புதுச்சேரி நிலையத்திலிருந்து வடமேற்கே 8 கி.மீ இல் உள்ளது./

**இலங்கை:**

இராமாயணத்தில் காணும் இராவணனின் தலைநகர்.

'தென்னிலங்கை என்று இது பெரிய புராணத்தில் (1673) குறிக்கப் பெறுகிறது.

இராமன் இலங்கையை அழித்தான். அதனால் மிக்க பெரும் பாதகம் பூண்டான் (2785).

**இலம்பையங்கோட்டூர்:** (திருவிலம்பையங்கோட்டூர்)

தொண்டை மண்டலத்தில் பாலியாற்றங்கரையில் இவ் வூர் உள்ளது.

திருஞானசம்பந்தர், பாலியாற்றின் அருகாக வடபுறத் திலே இறைவன் எழுந்தருளியுள்ள பதிகளை வணங்குவா ராகி இலம்பையங் கோட்டூரில் 'மலையனார் எனற பதிகம் பாடினார் (2902).

(அரம்பை முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்ற தலம். ஆதலால் அரம்பையங்கோட்டூர் என்பது இன்று **சிலம்பையங்கோட்டூர்** என மருவியுள்ளது என்பர் சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை 1977, ப. 137)

[கடம்பத்தூர் நிலையத்திலிருந்து தெற்கே 11 கி. மீ. இல் உள்ளது.]

**இளசை:** காண்க: **இளையான் குடி**

இளசைமாறன் என இளையான்குடியில் பிறந்த நாயனாரைக் குறிக்க இப்பெயர் பயன்படும் (439).

**இளையான் குடி:**

மாறநாயனார் எனும் சைவ அடியார் பிறந்த ஊர் (440) இளையான்குடி. இவ்வூரின் தலைவர் இந்த நாய னார் ஆவார் (446). இந்நாயனார் பெயரைக் குறிப்பிடும் போது இவ்வூர்ப் பெயர் இணைந்தே காணப்பெறுகின்றது (456).

(இவ்வூர் சோழ நாட்டில் திருநள்ளாற்றிற்கு அருகில் உள்ளது. இவ்வூர்க்கோயிலுக்கு அருகிலுள்ள முளைவாரிக் குட்டையை இந்நாயனார் புராணத்தில் வரும் நாற்றங் காலாகக் கொள்வர்.)

/காரைக்காலுக்கு வடமேற்கே 5 கி. மீ. இல் உள்ளது./

(தொண்டை மண்டலத்தார் இவ்வூர் தம் நாட்டகத்தில் உள்ளதாகக் குறிப்பர்.)

(பாண்டி நாட்டார் பரமக்குடிக்கு அருகிலுள்ள ஊரை இப்பதி என்பர். அவ்வூரில் முளைவாரி அமுதளித்த விழா நடந்து வந்ததென்பர். மாறன் என்ற பெயர் பாண்டியனுக் குரியது என்பதையும் சுட்டி இவ்வூர் பாண்டி நாட்டுக் குரியது என்பர்.)

/பரமக்குடி நிலையத்திலிருந்து வடகிழக்கே 12 கி.மீ. இல் உள்ளது./

இவ்வாறு பல கருத்துகளிருப்பினும், இவ்வூர் எப்பகுதி யைச் சார்ந்தது எனத் தெளிவாகக் கூற இயலவில்லை.

**இன்னம்பர்: (திருவின்னம்பர்)**

காவிரியின் வடகரையில் சோழநாட்டில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவன் கோயிலை அடைந்தார் (2194). இடைமடக்கான பாடலாம் 'எண் டிசைக்கும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2195).

சுந்தரர், இவ்வுலகிலுள்ளார் வாழும் பொருட்டு இவ் வூரை அடைந்தார் (3248). அழகில் பொலியும் இவ்வூர் இறைவன் அடிகளை வணங்கி 'அங்கமோதி' என்ற பதிகம் பாடிச் சென்றார் (3250).

/கும்பகோண நிலையத்திற்கு வடமேற்கே 6 கி.மீ.இல் உள்ளது./

## உ

**உச்சி: (திருவுச்சி)**

தில்லைக்கு அருகில் உள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் இவ்வூரிலுள்ள இறைவன் மீது 'புடையினார்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2065).

(இதற்குத் திருநெல்வாயில் என்ற பெயர் உள்ளது.)

[சிதம்பரத்திலிருந்து தென்கிழக்கில் $2\frac{1}{2}$ கி. மீ. இல் உள்ளது.]

**உசாத்தானம்: (திருவுசாத்தானம்)**

காவிரியின் தென்கரையில் உள்ளது.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கித் திருமால் போற்றும்படி பாடினார் (2522).

(திருக்கோயிலூர் எனவும் வழங்கப்பெறும்)

இங்கு இராமன், இலக்குவன், சாம்பவான், சுக்கிரீவன் ஆகியோர் தொழுதனர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை 1977 ப. 90)

[முத்துப்பேட்டை நிலையத்திலிருந்து வடக்கே 3 கி. மீ. இல் உள்ளது.]

**உடுப்பூர்:**

பொத்தப்பி நாட்டில் (650) கண்ணப்பரின் திருப்பதி இவ்வூர். முத்துக் கொழிக்கும் அருவிச் சாரல்களை உடைய நீண்ட மலைகள் சூழ்ந்தது இவ்வூர். மதயானையின் கொம்புகளால் வலிய வேலியிட்டுப் பெரிய மதில்கள் சூழ்ந்த பழைய ஊர் உடுப்பூர் (651).

மலைமக்கள் இங்கு வாழ்வர். நாய்கள் கட்டிய விளா மரக்கிளையில் வலைகள் தொங்கும். பன்றி, புலி, கரடி கடமை மான் முதலிய பார்வைவிலங்குகள் உள்ளன. வீட்டின் முன்னர்ப் பாறை முற்றங்களில் ஐவன அரிசி உலரும் (652).

இவ்வூர்ச் சிறுவர்கள் புலிக்குட்டி, யானைக்கன்று,

ஆகியவற்றுடன் விளையாடுவர். அன்போடு பெண்மான்களுடன் வேட்டுவச் சிறுமியர் விளையாடுவர் (653).

வெல்படை, தறுகண், வெஞ்சொல் வேட்டுவர் கூட்டங்களில் 'கொல்', 'எறி', 'குத்து' என்று ஆரவாரம் கேட்கும். உடுக்கை, கொம்பு, சிறுபறை போன்ற கருவிகளில் முழக்கம் கேட்கும். அவற்றுடன் அருவிகளின் ஓசையும் கேட்கும் (654).

ஆறலைக் கள்வர்கள் கொணர்ந்த ஆநிரைகளும், மதயானைகளும் இங்கு உள்ளன (655).

|ஆந்திர மாநிலத்தில் திருப்பதி நிலையத்திலிருந்து மேற்கே 30 கி. மீ. இல் உள்ளது.|

**உறந்தை:** காண்க: உறையூர்

**உறையூர்:** (உறந்தை)

சோழர்களின் தலைநகரம்.

மலைமுடிகள் மேல் வேங்கைக்குறி எழுதி வெண்கொற்றக் குடைக்கீழ் 'நெடுநிலங் காத்தினிதளிக்கும்' சோழர் வள நாட்டு மாமூதூர் ஆகும் உறையூர். உலகில் வளர் அணிக்கெல்லாம் 'உள்ளுறையூராம் உறையூர்' (3942).

அளவில்லாப் புகழ் பெற்ற அந்நகரத்தில் அழகிய மணிகளின் தொகுதி இரவே இல்லை என ஒளி வீசும். ஆகாய கங்கையின் கொடி போல மாளிகைகளின் வரிசை விளங்கும் (3943). தேவருலகம், கீழ்உலகம், நிலவுலகம் ஆகிய உலகங்களில் காணும்வளங்களைக் கொண்டு வானளாவு பொருள்கள் கூடி விளங்கும் கடைவீதிகள் உள்ளன (3944). மதம் பொழியும் யானைகளின் கூடங்கள் பல விளங்கின (3945). கடல்கள் போலக் குதிரைச்சாலைகள் உள்ளன (3946). ஐராவதம், உச்சை சிரவம், திருமகள், அமுதம், கற்பகத்தரு, சிந்தாமணி, ஆகியவற்றைத் தேவர்கள் எடுத்துச் சென்ற

மையால் வருந்திய பாற்கடல் அவற்றுள் ஒன்றையாவது பெற வேண்டித் தேவர் உலகை வளைத்தது போல உறை யூர் மதிலைச் சூழ்ந்த அகழியாய் உளது (3947). மேகம் தவழ் கோபுரங்கள், மலர்ச் சோலைகள், தேரோடும் வீதி கள், ஆகியவற்றால் புகழ்மிக்க உறையூர் வளத்தைக் கூறுவது அரிது (3948).

இந்நகரை ஆண்ட சோழன் தன் மணியாரத்தை ஆனைக்காவிலுறை இறைவனுக்குச் சாத்த நினைத்தான். அவன் காவிரியில் நீராடும் போது அது நீரில் மூழ்கி வழு விப் போக, வருந்தினான். ஆயின் சிவன் அதனைத் தன் அருளால் திருமஞ்சனக்குடத்துள் புகச்செய்து மஞ்சன நீராட்டும் போது முடிமேல் வீழும்படி செய்து, தான் அணிந்த அருளைக் காட்டினான். இச் செய்தியைச் சுந்தரர் 'மறைகளாயின' என்ற பதிகம் வாயிலாக உணர்த்தி யுள்ளார் (3230).

(இங்குள்ள கோயில் மூக்கீச்சுரம். மூவேந்தரும் சேர்ந்து வழிபடும் பெருமை சான்றது. த. ஊ. பே. 1976, ப. 249).

/திருச்சிராப்பள்ளி நகரத்தின் ஒரு பகுதியாக உள்ளது./

## ஊ

**ஊறல்: (திருவூறல்)**

தொண்டை நாட்டில் உள்ள ஊர். இது தக்கோலம் என்ற பெயரால் அறியப் பெறும். இறைவன் திருவுருவத் தின் அடியிலிருந்து நீர் பெருகி வருவதால் இப்பெயர் பெற்றது. இது பழைய பாலாற்றின் கரையில் அமைந் துள்ளது.

திருஞானசம்பந்தர் தக்கோலம் அணைந்து விருப்புடன் திருவூறலில் இறைவனை வணங்கினார் (2903). இங்குத் தேவகுருவாம் வியாழனின் தம்பி சம்வர்த்தமுனி தவம்

புரிந்து வணங்கிய இறைவன் மீது சம்பந்தர் 'மாறிலவுணர்' என்ற பதிகம் புனைந்தருளினார் (2904).

சுந்தரர் திருவூறல் பதியினை விரும்பிச் சென்று இறைவனை வணங்கினார் (3437).

'கலிகை' என்ற பெயரும் இவ்வூர்க்கு உளது (1096).

/அரக்கோணம் சந்திப்பிலிருந்து தெற்கே 6 கி. மீ. இல் உள்ள நிலையம்./

# எ

**எதிர்கொள்பாடி:** (திருவெதிர்கொள்பாடி)

காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவன் மீது பதிகம் பாடினார். (அது கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் தம் தொண்டருடன் எப்பொருளும் தரும் ஈசர் உறையும் எதிர்கொள்பாடிப்பதி எய்திப் பதிகம் பாடினார். (அது கிடைத்திலது.)

தேனாரு மலர்ச் சோலை மருங்கு சூழ்ந்த இவ்வூரைச் சுந்தரர் அடைந்தார் (3274). 'மத்தயானை' என்ற பதிகம் பாடித் திருக்கோயில் வணங்கி அப்பதியில் தங்கித் திருவருள் பெற்றார் (3275).

(மேலைத் திருமணஞ்சேரி எனவும் வழங்குவர். மணக்கோலத்தில் வந்த இளவரசனை இறைவன் மாமனார் போலக் காட்டி எதிர்கொண்டு அழைத்துச் சென்றதால் இப்பெயர் பெற்றது என்பர். 'கீழைத் திருமணஞ்சேரி' என்ற தலமும் உளது. சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, பக்.11 12).

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 5 கி.மீ. இல் உள்ளது./

**எயினனூர்:**

சோழ நாட்டில் உள்ளது இவ்வூர். வண்டுகள் ஒலிக்கும் பூஞ்சோலைகள் சூழ்ந்த வயல்கள் நிறைந்த மருதத்தின் குளிர்ந்த பண்ணைகள் சூழப்பட்டதாய் எட்டுத் திக்குகளிலும் தன் சிறப்பு ஏறிய பழைய ஊர் எயினனூர் ஆகும் (608). வேழக்கரும்போடு மென்கரும்பும் வயலில் தாழச் செந்நெல் ஓங்கும் தன்மையது. வாழ்வு பெறும் பெருங்குடிகள் தழைத்து நிலைபெற்ற இவ்வழகிய ஊரில் ஏனாதி நாயனார் பிறந்தார் (609).

(இத்தலம் ஏனனூர் என வழங்கப்பெறும்)

/கும்பகோண நிலையத்திலிருந்து தென்கிழக்கே 6. கி.மீ. இல் உள்ளது./

**எருக்கத்தம்புலியூர்:** (திருவெருக்கத்தம்புலியூர்)

நடுநாட்டில் உள்ள இவ்வூர்,

நிவாநதியின் தென்கரையில் உள்ளது.

திருநீலகண்டயாழ்ப்பாணர் பிறந்த ஊர் (4215).

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்ற போது திருநீலகண்டப்பெரும்பாணனார் அவரை வணங்கிச் 'சோலை சூழ் இப்பதி அடியனேன் பதி' என்றார் (2076). அது கேட்ட சம்பந்தர் 'ஐயர்! நீர் அவதரித்திட இப்பதி அளவில் மா தவம் முன்பு செய்துள்ளது' எனச் சிறப்புரைத்தார். அச் செழும்பதியில் உள்ள இறைவன் கோயிலுள் சென்று வலமாக வணங்கிப் 'படையார்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2077).

(இதை இராஜேந்திர பட்டணம் என்பர். த. ஊ. பே. 1976, ப. 12).

/விருத்தாசலம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 11 கி. மீ. இல் உள்ளது./

**எறும்பியூர்மலை (திருவெறும்பியூர்மலை)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள இடம்.

திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவன் மீது 'பன்னிய செந்தமிழறியேன்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (1567).

(தேவர்கள் எறும்பு உருவம் எடுத்துப் பூசித்ததால் இப் பெயர் வந்தது என்பர். தி.தொ.பு. III சு.உரை,1943, ப.515)

/திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து கிழக்கே 11 கி. மீ. இல் உள்ள நிலையம்./

# ஏ

**ஏடகம்:** (திருவேடகம்)

பாண்டி நாட்டில் வையை ஆற்றின் வடகரையில் உள்ளது இவ்வூர். சமணருடன் திருஞானசம்பந்தர் புனல் வாதம் செய்து இட்ட ஏடுகளில் சமணரிட்ட ஏடுகள் ஆற்றின் வழியே செல்லச் சம்பந்தரிட்ட ஏடு ஆற்றின் எதிரே சென்றது. அமைச்சர் குலச்சிறையார் குதிரைமீது ஏறி அவ் வேட்டைப் பின்தொடர்ந்து வைகைக்கரைமீது சென்றார். சம்பந்தராணையால் இங்கு நின்ற ஏட்டினை அமைச்சர் எடுத்ததலால் இது திருவேடகம் எனப்பெயர் பெற்றது.

இங்குச் சம்பந்தர் 'வன்னியும்' என்ற பதிகம் பாடக் குலச்சிறையார் சிவன் கோயில் பக்கம் நீர்நடுவே சென்று ஏட்டை எடுத்துக் கொண்டார் (2748).

சுந்தரர் மூவேந்தர்களுடன் திருவேடகம் சென்று இறைவனை வணங்கினார் (3848).

/மதுரைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**ஏமப்பேறூர்:**

சோழ நாட்டில் தாமரைத் தடங்களும் வயல்களும எப்பக்கமும் உடையதாகிப் பொய் தீர் வாய்மை அருமறை விதிகளை விடாது ஒழுகும் பெரியோர் புகழினால் பெருமை எல்லாத் திக்குகளிலும் பரந்து செல்லும் ஊர் ஏமப்பேறூர் (1866). இங்கு வெண்ணெல்லின் மீது தாமரை எழுந்து தோன்றுவது, வேள்விக்களத்தில் வேதிகை மேல் வெண் மணற் பரப்பின் இடையே வளர்த்த செந்தீப் போல இருக் கும் (1868).

இவ்வூரில் நமிநந்தியடிகள் நாயனார் பிறந்தார் (1869).

(இப்போது திருமப்பேறு எனவும், நெய்ப்பேறு எனவும் வழங்கப்பெறும்)

[திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தெற்கே 15 கி.மீ. இல் உள்ளது.]

# ஐ

**ஐயாறு: (திருவையாறு)**

சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ளது இவ் வூர். காவிரி முதலிய ஐந்து ஆறுகள் பாயும் வளநிலத்தில் அமைந்த நகரம் ஐயாறு என்று பெயர் பெற்றது போலும். (த. ஊ. பே. 1976, ப. 16). நந்திதேவர் இவ்வூரில் வந்து தவம் செய்து அருள் பெற்றார். இவ்வூர், தென்திசையில் விளங்கு வதால் அத்திசை புகழ் பெற்றது (45).

கயிலைமலையை மானுட உடம்போடு காண முடியாத அப்பர் இறைவனிடம் கயிலையில் இருந்த கோலம் காட்ட வேண்டினார் (1633). அப்போது விண்ணில் எழுந்த திரு வாக்கினால் அவரைக் 'கயிலையில் இருந்த அம்முறைமை பழுதில் சீர்த் திருவையாற்றில் காண்' என இறைவன் பணித்தார் (1634). கயிலைமலைச்சாரற் பொய்கையில்

மூழ்கிய அப்பர் தென்றிசைத் திருவையாற்றுப் பொய்கையில் எழுந்தார். அப்பதியில் எல்லா உயிரினங்களும் துணையொடும் பொலியக் கண்டார் (1638). அவை சத்தியும் சிவமுமாம் தன்மை கண்டு பணிந்தார் (1639). விடைமேல் இறைவனையும் இறைவியையும் கண்டு வணங்கினார் (1644). போற்றித் திருத்தாண்டகம் பாடினார் (1646). கயிலாயத் தோற்றம் சேயதாக மறைத்துத் திருவையாறு அமர்ந்தமை காட்டினார், இறைவர் (1647). அது கண்டு அப்பர் 'மாதர் பிறைக்கண்ணியானை' என்று பதிகம் பாடித் திருத்தாண்டகங்கள், குறுந்தொகை, நேரிசை முதலியன பாடித் திருத்தொண்டு செய்தார் (1650).

திருஞானசம்பந்தர், தாமரைத் தடாகமுடைய திருவையாறு அடைந்தார் (2197). அவர் வரவைஅறிந்த அடியார்கள் ஊரை அலங்கரித்து வரவேற்றனர் (2198). 'புலனைந்தும் பொறி கலங்கி' எனும் பதிகம் பாடி இறைவனைப் போற்றினார் (2199). கோயில் புகுந்து வலங்கொண்டு தாழ்ந்து பணிந்து வீழ்ந்து பரவினார் (2201). 'கோடல் கோங்கம்' என்று பதிகம் பாடி இறைவனைப் புகழ்ந்தார் (2201). மறுமுறை சம்பந்தர் திருவையாறு வந்த போது 'திருத்திகழ் மலைச் சிறுமியோடு' என்ற பதிகம் பாடிப் பரவினார் (2847).

சுந்தரர் **கண்டியூர்** பணிந்து திருவையாறதனை மேவி இறைவனைப் பணிந்தார் (3225).

பின்னொரு முறை சுந்தரர் சேரமான் பெருமாளுடன் சென்றபோது காவிரிக்கு வட கரையில் திருவையாறு தெரியவும், வெள்ளம் பெருகும் காவிரியைக் கடந்து ஐயாற்று இறைவன் திருவடியைத் தொழுவதற்கு நினைந்தார் (3878). சுந்தரரிடம் சேரமான், 'ஐயாறு இறைஞ்ச மனமுருகினையா நின்றது, இந்த ஆற்றைக் கடந்து பணிவோம் நாம்' என்றார் (3879). 'பரவும் பரிசு' என்ற பதிகம் பாடிச் சுந்தரர் தொழுதவுடன் காவிரியின் ஓடும் நீர், வானில் எழுந்து அவர்கட்கு வழி காட்டியது (3882). ஆற்றிடை மணல் வழியில் பரிசனமும் தாமும் சென்று பஞ்சநதி வாணரைப் பணிந்த

னர் (3885). தென்கரைக்கு முன்பு போல் திரும்பியவுடன் வானில் மலை போல் நின்ற காவிரி பின்னர்த் தொடரப் பெருகியது (3886). அவர்கள் அவ்வதிசயம் கண்டு அக்கரையி லுள்ள ஐயாற்றைத் தொழுதனர் (3887).

(ஐயாறு என்பன இறைவனடிக் கங்கை, தேவி கங்கை, இடப கங்கை, காவிரி, நந்தி தேவரின் உவகை ஆகியவை ஒடு நதியாக உருவெடுத்துச் சேர்வது ஆகிய ஐந்தாறுகள் என்பர். **பஞ்சநதம்** என இவ்வூர் வழங்கும் த. ஊ. பே. ப. 1976, 289).

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 15 கி. மீ. இல் உள்ளது.]

# ஒ

**ஒற்றிநகர்:** காண்க: ஒற்றியூர்

**ஒற்றியூர்: (ஒற்றிநகர், திருஒற்றியூர்)**

தொண்டைநாட்டில் உள்ள ஊர்.

மயக்கத்தால் கொடுந்தொழில் செய்யும் (மாந்தாதா) மன்னவன் சிவன் கோயில் பூசனைகளைக் குறைத்து ஆணை யிட்டு வரைந்த ஓலையில் எழுத்து வரியை நெருக்கி, வரிப் பிளந்து 'திருவொற்றியூர் நீங்க' என்று எழுதவல்ல சிவனின் பெரிய கோயிலின் ஒரு புறத்தில் சூழ்ந்துள்ளது நெய்தல் நில வரைப்பு (1116).

அப்பர் கடற்கரை வழியே திருவொற்றியூர்ச் சேர்ந்தார் (1597). இவ்வூர் வீதிகளில் கொடி, மாலை, கமுகு, வாழை ஆகியவற்றை வரிசையாகக் கட்டிப் பூரண கும்பம், விளக்கு ஏந்தி மக்கள் அவரை எதிர்கொண்டனர் (1598). இவ்வூர்க் கோபுரத்தை வணங்கி இறைவன் முன் அப்பர் வீழ்ந்தார்

(1599). 'வண்டோங்கு' என்ற தாண்டகம்பாடினார் (1601). விருத்தங்கள், திருக்குறுந்தொகைகள், நேரிசைகள் பல பாடிப் பல நாள் தங்கினார் (1602). அப்போது அருகிலுள்ள பல கோயில்களுக்கும் சென்று வணங்கிப் பின் திருவொற்றி யூர்த் தொழுதார் (1603).

திருஞானசம்பந்தர் காளத்தியில் உள்ள போது அலை கடல் சூழ்ந்த திருவொற்றியூரை வணங்கத் திருவுள்ளத்தில் நினைத்தார் (2926). இவ்வூர்க்குச் சம்பந்தர் வந்தபோது இப்பெரும்பதியோர் அவரை எதிர்கொண்டனர் (2928). இங்கு 'விடையவன்' எனும் பதிகம் பாடிக் கோயிலிறைவனை வணங்கி (2929) ஒற்றிநகர்க் காதலித்து இனிதுறைந்தார் (2930). இங்குத் தங்கியிருப்பதை மயிலை வணிகர் சிவநே சர்க்கு ஊரார் உரைத்தனர் (2967). திருமயிலையிலிருந்து திரு வொற்றியூரளவும் நடைக்காவணத் துகில் விதானம் கட்டி (2968) 'ஒற்றியூரில் சம்பந்தர் பொன்னடியைத் தலை மேல் புனைவேன்' எனச் சென்றார்.

அவ்வேளையில் சம்பந்தர் ஒற்றியூரைப் பணிந்து அவ் வூரிலிருந்து நீங்கினார் (2971).

உலகில் சிவலோகம் போலச் சிவன் அமர்ந்த திரு வொற்றியூரைச் சுந்தரர் அடைந்தார் (3353). அவரை அவ்வூர் மக்கள் கடல் போல் திரண்டு தொழுதனர் (3356). 'பாட்டும் பாடிப் பரவி' என்ற பதிகம் பாடிப் பரவினார் (3352). ஞாயிறு கிழவர் மகளாம் சங்கிலியார் சிவத்தொண்டு புரிய இவ்வூர் வந்திருந்தார் (3373). சிவனருளால் இவரைச் சுந்தரர் காதல் மணம் புணர நேர்ந்தது (3378). ஒற்றியூர் இறைவனை இறைஞ்சினார் சுந்தரர் (3385). சங்கிலியிடம் 'ஒற்றியூரில் பிரியேன்' எனச் சபதம் செய்து மணந்தார் (3420). சங்கிலியை மணந்து இன்புற்று ஒற்றியூரின் மகிழ் சிறப்பால் இறைவனைத் தொழுதிருந்தார் (3423). ஒற்றி யூரில் சங்கிலியை மணந்த செய்தியைத் திருவாரூரில் பரவை அறிந்து வருந்தினார் (3468). அவர்தம் மாளிகைக்கு வந்த பரிசனங்கள் புகுதப் பெறாது சுந்தரரிடம் வந்து, 'திரு வொற்றியூரில் நிகழ்ந்த செய்கை எல்லாம் ஒன்றும் ஒழியா

வகை அறிந்துள்ளார்' என மொழிந்தனர் (3471). திரு வொற்றியூரில் இறைவன் அருள் செய்யச் சங்கிலியை மணந்த தால் அவ்விறைவனே பரவை ஊடலைத் தீர்க்குமாறு சுந்த ரர் வேண்டினார் (3482). இறைவன் பரவையிடம் தூது சென்ற போது 'ஒற்றியூர் எய்தி அங்கே சங்கிலித் தொடக் குண்டவர்க்குச் சாரத்தக்க பற்றில்லை' என மறுத்தார் (3499).

தொண்டை நன்னாட்டில் சிவன் பதியாகும் மேகம் உலாவும் சோலைக் கன்னி மதில் சூழ்ந்து தேருலவும்நெடு வீதி சிறந்த திருவொற்றியூர் (4022). இவ்வூர் மண்டபங் களில் திருப்பதிகப்பாட்டு நீங்காமல் ஒலிக்கும், மடங்களில் உணவு எப்போதும் ஈவர் (4024). இவ்வூரில் கலிய நாய னார் பிறந்தார்.

/சென்னைச் சந்திப்பிலிருந்து வடக்கே 10 கி. மீ. இல் உள்ள நிலையம்./

## ஓ

**ஓத்தூர்: (திருவோத்தூர்)**

தொண்டை நாட்டிலுள்ள தலம் இது.

சிவன், தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மறைகளை ஓதுவித்தருளியதலம் என்பர்.

திருநாவுக்கரசர் தொண்டை நன்னாடு எய்திக் குளிர்ந்த மென்மலர்ச் சோலைகள் சூழ்ந்த திருவோத்தூர் சென்றார் (1580). இவ்வூர்க் கோயில் புக்கு வலங்கொண்டு திருத்தாண்டகங்கள் முதலியன பாடினார் (அவை கிடைத் தில.)

திருஞானசம்பந்தர் தொண்டைத் திருநாட்டில் சிவன் இனிதமரும் திருவோத்தூரைச் சேர்ந்தார் (2871). தேவர் முனிவர்க்கு வேதங்களை ஓதுவித்தருளிய இத்தலத்தில்,

திருத்தொண்டர்கள், சம்பந்தர் வர, மகிழ்ந்து எதிர்கொண் டனர். வாழை, தோரணம், விளக்கு நிரைத்து, நிறை குடமும், பூவும், பொரியும், சுண்ணமும கொண்டு போற் றினர் (2872).

கோயிலின் உயர்ந்த மதிலை வலங்கொண்டு கோயி லினுள் சென்றார் சம்பந்தர் (2873). அமணர்கள் சிவன ருளால் ஆண்பனை காய்க்குமோ என இழித்துரைசெயக் கேட்ட சம்பந்தர் 'பூத்தேர்ந்தாயன' என்ற பதிகம் பாடி யதும் ஆண்பனைகள் குரும்பையரும்பு பெண்பனை ஆகிடக் கண்டோர் அதிசயித்தனர் (2878).

(திருவத்தூர் என்னும் திருவோத்தூர் சமணசமயத்தார் சிறந்து வாழ்ந்த தலங்களுள் ஒன்று. த. ஊ. பே. 1976, ப.339).

[காஞ்சிபுரத்திற்குத் தென்மேற்கில் 30 கி. மீ. இல் உள்ளது.]

**ஓமாம்புலியூர்:** (திருவோமாம்புலியூர்)

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.

இவ்வூரில் உள்ள இறைவனின் கோயில் வடதளி (த. ஊ. பே. 1976, ப. 233).

திருஞானசம்பந்தர் மறையந்தணர் ஓங்கும் ஓமாம்புலி யூர் வந்துற்றார் (2148). இவ்வூர் வடதளியில் மேவிய இறைவன் மீது 'பூங்கொடி மடவாள்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2149).

(இவ்வூர் 'ஓம்' எனும் பிரணவ மந்திரம் பற்றிய தொடர்பு கொண்டு எழுந்தது ஒன்றும் உரைப்பர். புலிக் குப் பயந்த வேடன் ஒருவன் வில்வ மரத்தில் ஏறி இரவு முழுதும் தூங்காமல் வில்வ இலையைப் பறித்துப் போட, அவை கீழேயிருந்த சிவபெருமான் மீது விழ அவ்வேடனுக்கு முக்தி கிடைத்தது என்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 15).

/ சிதம்பரம் நிலையத்திற்குத் தென்மேற்கே 30 கி. மீ. இல் உள்ளது. /

# க

**கச்சி:** *(திருக்கச்சி, கன்னிகாப்பு, காஞ்சி, காஞ்சிபுரம்)*

*தொண்டைமண்டலத்தில் இவ்வூர் உள்ளது. உமையம்மை சிவபெருமானைத் தவம் செய்யக் கம்பையாற்றங் கரையிலே பூசித்த இப்பதி தேவர்களும் வணங்கும் சிறப்புடையது (44).*

*தொண்டை நாட்டில் காஞ்சிமாநகரம் மெய்வளம் தரு சிறப்பினால் உலகெலாம் வியப்ப, எல்லா உலகங்களிலும் அழியாமல் நிலைத்து உள்ளது என்று எல்லோரும் துதிக்கும் ஒழுக்கத்தினால் விளங்கும் நிலையை உடையது (1125).*

*சிவன் உமையிடம் தென்திசை மிக்க செய்தவத்தால் யாவரும் தன்னிடம் வந்து அடையத் தக்கது; மண்மேல் என்றுமுள்ளது – காஞ்சி என்றார் (1130). இவ்வூரில் தவம் செய்ய வானவர் முதல் பலரும் உடன் செல்ல இதனை அடைந்தார் (1132). சிவன், உமை வேண்ட, அறம் செய்ய நெல்லளித்துக் காஞ்சி வாழ்பவர் தாம் செய்தீவினையும் தடைபடாது மெய்ந்நெறி அடைவதற்காம் தவங்களாக அருள்செய்தார் (1147). யோகபீடம், போகபீடம், ஆகியவை இங்குள்ளன. சிவன் மகிழ் காஞ்சியின் சிறப்பு எல்லையற்றது (1160). இவ்வூரை வந்தடைந்தவர்க்கு அல்லாது தம்மைப் பற்றிய குற்றங்கள் நீக்கிக் கொள்ளல் அரிது (1164). இவ்வூரில் பொன்மழையன்றி நவமணி மழையும், பெண்டிர்தம் பல செயல்களால் பெய்யும் (1171). சிவன் இங்குள்ள பல தளிகளில் எழுந்தருளியுள்ள சிறப்பை அறிந்து குபேரன் தன் ஊர் வகுத்த பரிசாக வணிகர்*

வீதியில் பல பொருள்கள் குவிந்திருக்கும் (1178). காஞ்சி யின் எல்லையில் வேளாளர் விழுக்குடிமைப் பெருஞ்செல் வர் வாழ்ந்தனர் (1179). இவ்வூரில் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் பிறந்தார் (1188).

உமை தழுவக் குழைந்த சிவன் தங்கு தெய்வப் பதி யென்று வையம் முழுதும் தொழுதேத்தும் எயிற்பதியாம் (து. ஊ. பே. 73). மதில்சூழ் காஞ்சியைத் திருநாவுக்கரசர் தொழவந்தார் (1582). காஞ்சி வாணர்கள் அவர் வரவு அறிந்து மகிழ்ந்து நகரை அலங்கரித்தனர் (1584). அப்பர் தெருவுட் போந்து கச்சி ஏகம்பர் கோயில் சென்றார் (1586). 'கரவாடும்' என்ற பதிகம் பாடித் திருமுன்றிற் புறம் சேர்ந்தார் (1589). திருத்தொண்டு செய்து 'நம்பனை', 'ஓதுவித்தாய்' முதலிய பதிகம் பாடினார் (1590). திருக்கச்சி மயானம் (து. ஊ. பே. ப. 208) எனும் தனிக்கோயிலை வணங்கினார் (1590). கச்சி மேற்றளி சென்று (இப்பொழுது இவ்வூரின் ஒருபாகமாகிய பிள்ளைப்பாளையத்தில் உள்ளது து. ஊ. பே. ப. 232) 'மறையது பாடி' என்ற பதிகம் பாடி னார் (1591). இவ்வூரிலிருந்து பல தலங்கள் சென்று இறை வனை வணங்கித் தொடர்ந்த பெருங்காதலினால் மீண்டும் காஞ்சியை அடைந்தார் (1592). 'கூற்றுவன் காண்', 'உரித் தவன் காண்' முதலிய பதிகம்பாடித் (1593) திருக்கச்சி ஏகம்பம் பணிந்தேத்தினார் (1594).

அப்பர் தொண்டை நாடு சென்று 'மல்கு புகழ்க் காஞ்சி' ஏகம்பரைப் பணிந்ததைச் சொல்லக் கேட்ட திரு ஞானசம்பந்தர் தாமும் இங்குச் சென்று இறைவனைப் போற்ற மனம் புரிந்தார் (2843). சிவன் மன்னும் மதில்சூழ் காஞ்சியின் பக்கம் சேர்ந்தார் (2883). காஞ்சி வாணர், சம்பந்தர் வரவு கேட்டு மகிழ்ந்து ஊரை அலங்கரித்தனர் (2884). தொண்டர் பாடலும், வேத கீதமும் எழ மதிற் புறம் சென்று வணங்கினர் (2886). சம்பந்தர் வீதியில் சென்ற போது மகளிரும் மாந்தரும் பூவும், கண்ணமும் வீசினர் (2889). சிவன் கோயில்களை வணங்க முதலில் திரு வேகம்பத்தை வழிபட்டார். 'மறையானை' என்ற பதிகம் பாடினார் (2893). கோயிற் புறத்தே அமைந்த மடத்தில் தங்கிப் பின் திருக்காமக்கோட்டம் சேர்ந்து (2896), வணங்

கினார். ஏகம்பநாதரை திருவியமகம், திருவிருக்குக்குறள், மற்றும் பல இசைத்திருப்பதிகங்கள் பாடி வழிபட்டார். (2897). கச்சிநகரின் கீழ்க் கோடியிலுள்ள திருக்கச்சி நெறிக் காரைக் காடு (காலிக்காடு. த. ஊ. பே. ப. 161) முதலிய தளிகளை வணங்கினார் (2899).

சுந்தரர் காஞ்சி நகர் வந்தார் (3337). வலிய ஆட் கொண்ட செய்தியை அறிந்த காஞ்சிநகர் வாழ்வார் (3338) ஊரை அலங்கரித்துப் பதியின் புறத்தே சென்று எதிர் கொண்டார் (3339). சுந்தரர் ஊரினுள் சென்று ஏகாம்பரர் கோயிலை அடைந்தார் (3340). கோபுரமும், மாளிகையும் தொழுது கோயிலுள் சென்றார் (3341). கச்சியில் பல ஆலயங்களுக்குச் சென்று வணங்கிப் பின் திருக்காமக்கோட்டம் வணங்கி மேற்றளியில் 'நுந்தா வொண்சுடர்' எனப் பதிகம் பாடினார் (3344).

பின்னர்த் திருவொற்றியூரில் செய்த சபதத்தை மீறித் திருவாரூர்க்குப் புறப்பட்டுக் கன்னி மதில் மணிமாடக் காஞ்சி மாநகரைச் சுந்தரர் அடைந்தார் (3437). கச்சித் திருகாமக்கோட்டத்தில் அறம் புரக்கும் அம்மை கோயிலைக் கண்ணொளி இழந்த நிலையில் வானை நோக்கி வணங்கி னார் (3438). திருவேகம்பத்தில் தன் பிழை பொறுக்க வணங்கினார் (3440). அன்பொடு போற்றிய சுந்தரர்க்கு மறைந்த இடக்கண்ணை இறைவன் அருளினார் (3441). கண்பெற்றுக் களித்த சுந்தரர் 'ஆலந்தானு கந்தமுது செய் தானை' என்று பதிகம் பாடினார் (3442). சிவனைப் போற்றித் திருவருள் அதுவாகக் கொண்டு காஞ்சி நகரம் கடந்தார் (3444).

✻ ✻ ✻

சிவயோகியாம் திருமூலர் கயிலையிலிருந்து புறப்பட்டு திருவேகாம்பரம் பணிந்து காஞ்சியில் தங்கினார் (3568).

✻ ✻ ✻

சாக்கிய நாயனார் பிறப்பறுக்கும் அறிவுபெறக் காஞ்சி அணிநகரம் சென்றடைந்து நல்ஞானம் அடையப் பல வழி களை நாடினார் (3638)

✻ ✻ ✻

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் ஊர், கன்னி மதில் சூழ் காஞ்சியாகும் (4052). காடவர் அரசனாம் இராச சிங்கர் கைலாசநாதர் கோயிலைக் காஞ்சியில் கட்டினார் (4179). (த. ஊ. பே. 1976, ப. 259).

/செங்கல்பட்டுச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 35 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**கச்சூர்:** (திருக்கச்சூர்)

தொண்டை நாட்டில் உள்ளது இவ்வூர்.

இங்குள்ள கோயில் ஆலக்கோயில் (த. ஊ. பே. 1976, ப. 221)

சுந்தரர் நாடிய நல்லுணர்வோடு திருக்கச்சூரை அடைந்துஇவ்வூர் ஆலக்கோயிலுள்ள இறைவனை வணங்கினார் (3328). திருக்கோயிற் புறத்து வந்தபோது அமுது செய்யும் காலம் ஆயிற்று. அப்போது அமுது ஆக்கி உதவும் பரிசினங்கள் வந்து சேராமையால் பசிவருத்தக் கோயிலின் மதிற் புறத்தே சுந்தரர் தங்கினார் (3329). சுந்தரர் பசி தீர்க்கக் கச்சூர் இறைவன் அந்தணராய்ப் புறப்பட்டு அவர்முன் வந்து 'பசியால் வருந்தி இளைத்தீர். இப்பொழுதே சோறிரந்து யான் உமக்குக் கொணர்கிறேன். அப்புறம் அகலாது சிறிது பொழுது அமரும்' எனக் கூறிக் கச்சூர் மனை தோறும் சென்றிரந்து (3331) சுந்தரர்க்கு உணவருந்த அளித்தார். சுந்தரர் உவந்துண்டருள அவர் அறியாமல் சிவன் மறைந்தார் (3334). வந்தவர் சிவனென அறிந்த சுந்தரர் 'முதுவாய் ஓரி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3336).

/சிங்கப் பெருமாள் கோயில் நிலையத்திலிருந்து வடக்கே 2½ கி. மீ. இல் உள்ளது./

**கஞ்சனூர்:**

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் சிறிது தள்ளி உள்ள ஊர். பிறப்பின் எல்லையைக் கடக்க நினைப்பவர்கள்

சேர்தற்குரிய இடம் இவ்வூர். இங்குத் திருஞானசம்பந்தர் சென்றார் (2190). இங்குள்ள இறைவனை வணங்கினார் (2191).

(கம்சனாம் கஞ்சனின் நகர் என்றும், பிரம்மன், அக்கினி வணங்கிய தலம் என்றும் இதன் பெயர்க்குரிய காரணம் காண்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 18 சிவாலயம் அக்கீச்சுரம் என்று பெயர் பெற்றது. த. ஊ. பே. 1976, ப. 245).

/நரசிங்கன்பேட்டை நிலையத்திலிருந்து வடக்கே 2. கி. மீ. இல் உள்ளது./

**கஞ்சாறு:** காண்க: கஞ்சாறூர்

**கஞ்சாறூர்:** (கஞ்சாறு, கஞ்சை)

சோழ நாட்டில் உள்ளது இவ்வூர். தேன்பொழியக் கனிச்சாறு ஒழுகும் ஒழுக்கு கரும்புச் சாற்றினைக் கடி மணம் செய்யும் ஊர் கஞ்சாறூர் (866), வயல்களும் வாவிகளும் இவ்வூரில் சிறந்து விளங்கும் (867). நெற் பயிர் கமுகளவு வளரும் (869). மாடங்கள் மதில்கள் சூழக் கொடி, தோரணம் முதலியவற்றால் அலங்கரிக்கப் பெற்றிருக்கும் (870). உழவுத் தொழிலில் வழிவழி சிறந்த பழங்குடியினர் இங்கு வாழ்வர். வீதிகளில் விழாச் சிறந்து விளங்கும் (871). இவ்வூரில் மானக்கஞ்சாறநாயனார் பிறந்தார் (872).

மானக்கஞ்சாறர் மகளை மணக்க ஏயர்குலத் | தலைவராம் கலிக்காமர் தம் சுற்றத்துடன் கஞ்சாற்றிற்கு வந்தார் (885)

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 8 கி. மீ. இல் உள்ள ஆனதாண்டவபுரம் நிலையமாம்./

**கடம்பூர்:** (கடம்பை)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர். இங்குள்ள கோயில்

கரக்கோயிலாம் த. ஊ. பே. 1976, ப. 218). இத்துடன் இளங் கோயில் என்னும் மற்றுமோர் ஆலயமும் இருந்ததாகத் தெரிகிறது (மு. நா. ப. 220). சுந்தரர் இவ்வூரிலுள்ள இறை வனைப் போற்றித் தில்லைக்குச் சென்றார் (3265).

/சிதம்பரத்திற்குத் தென்மேற்கில் 25 கி.மீ.இல் உள்ளது.

**கடம்பை:** (திருக்கடம்பூர்)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ளது. திருஞானசம்பந்தர் நிறைந்த புகழையுடைய கடம்பையை வணங்கினார் (2150). 'வானமர் திங்களும்' என்ற பதிகம் பாடினார்.

(இது கடம்பைத்திருக்கோயில் எனப் போற்றப் பெற் றது. மேலைக்கடம்பூர் எனவும் வழங்கப் பெறும். இதனை இந்திரன் தன்னுலகிற்குக் கொண்டு செல்ல எண்ணிப் பாதாளம் வரையும் தோண்டி, எடுக்கலாற்றாது முன்போல் அமைத்துப் பூசித்தான். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 17.)

/சிதம்பரத்திற்குத் தென்மேற்கில் 25 கி.மீ.இல் உள்ளது./

**கடவூர்:** (திருக்கடவூர்)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

இவ்வூரில் குங்குலியக்கலய நாயனார் பிறந்தார்.

மறையோர் வாழும் மதில் சூழ்ந்த ஊர்.

மார்க்கண்டேயனைக் காக்க யமனை (831) உதைத்த சிவன் இருக்கும் ஊர் (த. ஊ. பே. 1976, ப. 202).

வயலில் நெல், வரம்புகளில் முத்து, வயல் பக்கங்களில் வேள்விச் சாலை, அணைகளில் செங்கழுநீர்ப் பூக்கள், கமுகுச் சோலைகளில் மேகங்கள், அப்புறம் எல்லாம் அதன் சீர் போற்றல், வேதியர் செய்யும் ஆறு தொழில்கள் ஆகிய திருக்கடவூரில் அமைந்திருக்கும்.

குங்குலியக்கலயநாயனார் இவ்வூரில் இறைப்பணி செய்து வந்த போது அப்பரும், சம்பந்தரும் எழுந்தருளக் கேட்டு எதிரேற்றுத் தம் வீட்டில் விருந்தளித்தார் (862, 863). சிவனை வணங்கிக் கடவூரில் தங்கிச் சிவப்பணி பலவும் செய்து குங்கிலியக்கலயர் சிவபதம் சேர்ந்தார் (864).

அப்பர், குமுத மலர் வாவிக் கடவூர் அடைந்து சிவனடி தொழுது குங்கிலியக்கலயனார் திருமடத்தில் சிவனடியாருடன் எழுந்தருளி அமுது செய்தார் (1512). 'பொள்ளத்த', 'மருட்டுயர்' 'மலை கொளானை' முதலிய பதிகங்களை அப்பர் பாடி இறைவனை வணங்கினார்.

கன்னி மாமதில் திருக்கடவூர் தொழத் திருஞான சம்பந்தர் கருதி அப்பருடன் இப்பதிக்குவரக் குங்குலியக் கலயரோடு அடியவர் எதிர் கொண்டனர் (2431). இறைவரது வீரட்டக் கோவிலுள் சென்று 'சடையுடையானும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2432). குங்கிலியக்கலயர் மனையில் விருந்தினிதமர்ந்தார் (2434).

பின்னர்ச் சம்பந்தர் இவ்வூர் மருங்கு வந்தார் (2824). இறைவனை வணங்கி அப்பர் பூந்துருத்தி நகரில் திருத்தொண்டு செய்தல் கேட்டு இங்கிருந்து அப்பரைக் காணும் விருப்போங்கச் சென்றார் (2826).

சுந்தரர் 'மங்குலணி மணிமாடத் திருக்கடவூர்' அடைந்து இறைவனை வணங்கினார் (3299). திருவீரட்டானத்து இறைவன் மீது 'பொடியார் மேனியனே' என்ற பதிகம் பாடினார் (3300).

இவ்வூரில் காரி நாயனார் பிறந்தார் (4064).

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து கிழக்கே 22 கி. மீ. இல் உள்ளது./

**கடவூர் மயானம்: (திருக்கடவூர்த் திருமயானம்)**

சோழநாட்டில் காவிரித் தென்கரையில் உள்ளது இத்தலம். அப்பர் இங்கு வந்து இறைவன் மீது 'குழை கொள் காதினர்' எனப் பதிகம் பாடி வணங்கினார் (1513).

சம்பந்தரும் இங்கு 'வரிய மறையார்' எனப் பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2433).

சுந்தரர், திருமயானத்தைப் பணிந்து 'மருவார் கொன்றை' என்ற பதிகம் பாடினார் (3299).

(ஒரு கற்பத்தில் பிரமனை எரித்து மீள உயிர்ப்பித்துப் படைப்பாற்றல் நல்கிய தலம் என்பர். திருமெய்ஞ்ஞானம் என இன்று வழங்கப் பெறுகிறது. (சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 59.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து 42 கி. மீ. இல் உள்ளது.]

**கடிக்குளம்: (திருக்கடிக்குளம்)**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது.

திருஞானசம்பந்தர் சிவபெருமான் மகிழ்ந்தமர்ந்த கடிக் குளத்தில்(2521) வணங்கிப் 'பொடி கொள் மேனி' என்ற பதிகம் பாடினார்.

(கற்பகநாதர் கோயில், கற்பகனார் கோயில் த. ஊ. பே. 1976, ப. 180) கற்பகனார் குளம் என்ற பெயர்களும் உள்ளன. கற்பக விநாயகர் பூசித்து மாம்பழம் பெற்றதால் இப்பெயர் வந்தது என்பர். (சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 91).

[தில்லைவிளாக நிலையத்திலிருந்து கிழக்கே 6 கி. மீ. இல் உள்ளது.]

**கண்டியூர்: (திருக்கண்டியூர்)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது. அட்ட வீரட்டங்களுள் ஒன்று.

திருநாவுக்கரசர் (1566) இவ்வூரில் 'வானவர் தானவர்' என்ற திருவிருத்தம் பாடினார்.

திருஞானசம்பந்தர் செங்கயல் பாயும் வயலோடை சூழ்ந்த திருக்கண்டியூர் தொழச் சென்றார் (2249). இவ்வூர் வீரட்டர் கோயிலை அடைந்து அடியாருடன் அன்பு பொங்க விருப்புடன் சூழ்ந்து வணங்கினார் (2250). தொண்டர் களை நோக்கி அடியார்களை வினவுவது போன்று திருப் பதிகம் 'வினவினேனறியா மையில்லுரை செய்ம்மின்' எனப் பாடினார் (2251).

சுந்தரர், சிவபெருமானைக் கண்டியூரில் பணிந்தார் (3225). மற்றொரு முறை சுந்தரர், சேரமான் பெருமாளுடன் காவிரித் தென்கரையிலுள்ள திருக்கண்டியூர் சென்று 'அன்புறு சிந்தையுடன்' இறைவனை வணங்கினார் (3877).

[தஞ்சாவூர்ச் சந்திப்பிற்கு வடமேற்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**கண்ணார்கோயில்:** (திருக்கண்ணார்கோயில்)

சோழநாட்டில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் சிவபெருமானின் திருக்கண்ணார் கோயிலைப் பெருவிருப்பால் அடைந்து 'தண்ணார் திங்கள்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2183).

(**குறுமாணக்குடி** என்று இன்று வழங்கப்படுகிறது).

[வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து தென் கிழக்கே 2½ கி. மீ. இல் உள்ளது.]

**கணமங்கலம்**

சோழ நாட்டில் உள்ளது. (அழிந்துள்ள நிலையிலிருக்கும் இதனைக் கணமங்கலத்திடல் என்பர்)

பொன்னி நாட்டில் வாழ்பதி, கரும்பு, வண்டொடு ஒலிக்கக் கரம்பு தேன் பொழியும் கணமங்கலம் (903). செந்நெல் வயலில் பிடுங்கிய தாமரைப் பூக்களை, முன்னர் அவற்றில் சங்கு ஈன்ற முத்துக்களைச் சொரியும்படி

மள்ளர்கள் கையில் கொண்டு தோன்றுவதால், பங்கய நிதிகொண்ட தேவர்களாய்த் தோன்றுவர் (904). வளத்தில் நீடும் அப்பதியில் பெண்கள் முகத்தில் நீலமலர் போல் கண்கள் நீள்வன. கழுத்தின் மேல் குழைகள் நீலமணிகளால் செய்த அணிகள் விளங்கும். கயல் பாயும் வயலின் பக்கத்திலுள்ள குளத்தில் நீலமலர்கள் நீண்டு படரும் (905). இவ்வூரில் அரிவாட்டாய நாயனார் பிறந்தார்.

/திருத்துறைப்பூண்டி நிலையத்திலிருந்து வடக்கே 2½ கி. மீ. இல் உள்ளது./

**கரவீரம்:** (திருக்கரவீரம்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் இவ்வூர் உள்ளது.

திருஞானசம்பந்தர் இவ்வூரில் இறைவனை விரும்பி 'அரியு நம் வினை' என்ற பதிகம் பாடி வணங்கினார். (2471).

கரம் - (கழுதை) பூசித்த தலம் என்பர்.

(கரையபுரம் எனவும் வழங்குவர். தி. தொ. பு. IV சு. உரை, 1949, ப. 997.)

கரவீரம் - பொன்னலரி, இன்றும் கரவீரக் கோயிலில் பொன்னலரியே தலவிருட்சமாகப் போற்றப்படுகின்றது (த. ஊ. பே. 1976 ப. 11).

/திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 12 கி. மீ. இல் உள்ளது./

**கருகாவூர்:** (திருக்கருகாவூர்)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையிலுள்ள ஊர்.

திருநாவுக்கரசர், சிவன் அமர்ந்தருளும் கருகாவூரை அடைந்து பெருகிய ஆர்வத்துடன் திருத்தொண்டு செய்தார். 'குருகாம் வயிரமாம்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (1463).

திருஞானசம்பந்தர் இவ்வூரை வந்தடைந்தார் (2269). பந்தரில் படர்ந்தேறிய முல்லை மணம் கமழும் இவ்வூர் இறைவனை 'முத்திலங்கு முறுவல்' என்ற பதிகம் பாடி வணங்கியின்புற்றார் (2270).

(முல்லைவனம் எனவும் வழங்கப் பெறும். இங்குள்ள சிவலிங்கத் திருமேனி மணல் வடிவிலமைந்து முல்லைக் கொடி சுற்றிய அடையாளத்துடன் உள்ளது.

துணையற்ற ஒரு பெண்ணின் கருப்பத்தைக் காத்த காரணத்தால் கருகாவூர் என்ற பெயர் அமைந்ததாகக் கூறுவர்.)

/பாபநாசம் நிலையத்திலிருந்து தெற்கே 6 கி. மீ. இல் உள்ளது./

**கருப்பறியலூர்:** (திருக்கருப்பறியலூர்)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ளது இவ்வூர்.

இந்நாட்டிலுள்ள சிவன்கோயில்களை எல்லாம் வணங்கத் திருநாவுக்கரசு உள்ளத்தில் எண்ணம் தோன்ற அதனைத் திருஞானசம்பந்தரிடம் கூறினார். அதனை அவரும் ஒப்புக்கொண்டார் (1453). **திருக்கோலக்காவில்** சம்பந்தரிடம் திருநாவுக்கரசர் விடைபெற்ற பின் சிவபெருமான் உறையும் திருக்கருப்பறியலூரை அடைந்து இறைவனை வணங்கினார் (1454). (இங்கு அப்பர் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் இவ்வூரில் இறைவனை வணங்கிச் 'சுற்றமொடு பற்றவை' என்ற பதிகம் பாடினார் (2153).

சுந்தரர் இவ்வூரை வணங்கி அடைந்தார் (3270). இங்குள்ள கொகுடிக் கோயிலை அடைந்து கோபுரத்தைத் தொழுது அன்பர் சூழக் காதலால் வணங்கிப் பெருமகிழ்ச்சி அடைந்து இப்பதியில் தங்கினார். 'சிம்மாந்து சிம்புளித்து' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3271).

('மேலைக் காழி' என்றும் 'தலை ஞாயிறு' என்றும் இதற்குப் பெயர்கள் உள.)

இந்திரன் அகந்தையுடன் கயிலை மலைக்குச் சென்ற போது சிவன இயக்க வடிவில் அவன் முன் தோன்றினார். அதை அறியா இந்திரன் அவர் மீது வச்சிராயுதத்தை எறிந்து போர் செய்து பின்னர் அவரை வணங்கி மன்னிப்புப் பெற்றான். அக்குற்றம் நீங்க இங்கு வந்து பூசித்தார். (சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 13).

[வைத்தீசுவரன்கோயில் நிலையத்திலிருந்து வடமேற்கே 5 கி. மீ. இல் உள்ளது.]

**கருவூர்:** (திருக்கருவூர்)

சோழநாட்டில் ஆன்பொருநை ஆற்றின் (அமராவதி) வடகரையில் உள்ள ஊர்.

தொன்னெடும் கருவூர் என்பது ஒளியும் அழகும் உள்ள வீதிகளமைந்த பழைய ஊர். இமய உச்சியில் புலிக்கொடி ஓங்கி நிற்கப் புதுமலை இடித்து அவ்வழியே வழியாக மற்ற வழியை அடைத்த கரிகாலன் முதல் அநபாய சோழன் வரை முடிசூட்டும் சீர்படைத்த மரபின் வரும் மாநகரமாகும்.

தேவர்களின் இந்திரபட்டினம் தாழ இந்நகரின் பெரிய மதில்கள் மேகங்களால் சூழப் பெற்றிருக்கும். மாளிகைகள் வானில் உயர்ந்திருக்கும். தூய மணிகள் வாயில்கள் சூழ்வன. சோலைகளில் மணம் மிகுந்திருக்கும். மகளிர் கூந்தலில் மலர்கள் சூழ்ந்திருக்கத் தெருவில் உலவுவர் (553). யானைகள் நீர்த் துறையில் ஆடும். மயில்கள் சோலைகளில் ஆடும். மகளிர் அரங்கில் ஆடுவர். அவர் குழலில் வண்டுகள் ஆடும். வீதிகளில் ஆடும் கொடிகள் கதிர்கள் மீது ஆடும். உலகம் கொண்டாடும் ஒப்பற்ற நகர வளமை இதுவாம் (554). இவ்வூரிலுள்ள கோயில் ஆனிலைக் கோயில் (555). இவ்வூரில் பிறந்து இக்கோயிலில் சிவனை வழிபட்டார் எறிபத்தநாயனார் (556).

திருஞானசம்பந்தர் செல்வமுள்ள கருவூரில் திருவானி லைக் கோயிலிறைவனை வணங்கித் 'தொண்டெலாம்' என்ற பதிகம் பாடினார் (2237).

புகழ்ச்சோழ நாயனார், கொங்கர்களும், மேற்றிசைக் கோமன்னர்களும் திறைகொண்டு வரத் தங்கள் குலமர பின் முதல்தனிநகராம் கருவூரில் மங்கலநாளில் அரசுரிமைச் சுற்றமுடன் வந்து சேர்ந்தார் (3952). இறைவன் ஆனிலைக் கோயில் வணங்கி மாளிகை புகுந்தார் (3953). அத்தாணி மண்டபத்தில் மன்னர்கள் கொணர்ந்த திறைப் பொரு ளைக் கண்டார் (3954). திறை தந்த அரசர்க்குச் செயலுரி மைத் தொழில் அருளித் திறையளியா மன்னர் பற்றிக் கேட் டறியும் நாளில் (3955), சிவனடியாராம் சிவகாமியார் கொணர்ந்த பள்ளித் தாமம் சிதைத்த களிற்றைக் கொன்று, பாசரையும் கொன்ற எறிபத்தர் எதிரே சென்று 'என்னை யும் கொன்றருளும்' எனப் புகழ்ச்சோழர் வாள் கொடுத் துத் திருத்தொண்டில் மிகச் சிறந்தவூர் இவ்வூர் (3956).

அதிகனுடன் புகழ்ச்சோழர் பொருட்டுப் போர் புரிந்து வெற்றி பெற்ற அமைச்சர்கள் அரசன் கழல் பணிய மதில் சூழ் கருவூர் அடைந்தனர் (3972). அவர்கள் கொணர்ந்த தலைகளில் சடையுடை அடியார் தலையுமிருக்கக் கண்டு புகழ்ச்சோழர் (3974) இவ்வூரில் தீ வளர்த்து அதில் புகுந்து சிவனடி சேர்ந்தார்.

(இவ்வூர் கொங்கு நாட்டுப்பதி என்பர். மூவர் தேவாரம், திருப்பனந்தாள் பதிப்பு, 1968, ப. 1157)

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து மேற்கே 76 கி.மீ.- இல் உள்ள நிலையம்.]

**கலயநல்லூர்:** (திருக்கலயநல்லூர்)

சோழ நாட்டில் அரிசலாற்றின் தென்கரையில் உள்ளது இவ்வூர் (த. ஊ. பே. 1976, ப. 217). சுந்தரர் கலயநல்லூரை அடைந்தார் (3220). செம்மை மறையோர்கள் வாழும் இவ்

ஷூரின் இறைவன் அடிக்கீழ் முக்கரணங்களும் ஒன்றிய வணக்கம் பெற இறைஞ்சித் தொழுதெழுந்து 'குரும்பை முலை' என்னும் திருப்பதிகத்தில் மெய்ம்மைப் புராணம் பலவும் சிறப்பித்துப் பாடினார் (3221).

(இப்போது சாக்கோட்டை என வழங்கப் பெறும். உயிர்களை அடைத்த கலயம், நீர்ப்பெருக்கூழியில் தங்கிய இடம் இது. ஆதலின் இப்பெயர் பெற்றது என்பர். சிவஸ்தல மஞ்சரி, வ. த. சுப்பிரமணியபிள்ளை, சென்னை, 1958, ப. 144).

[கும்பகோணம் நிலையத்திற்குத் தென்கிழக்கில் 40 கி. மீ. இல் உள்ளது.]

**கலிகை:** (கலிகைமாநகர்)

காண்க: ஊறல்

தொண்டை நாட்டில் உள்ள ஊர்.

சிவபெருமானுக்கு மஞ்சனம் தர ஊறு நீர் தரும் கலிகைமாநகர் எனும் ஊரைத் தன் பெரு வைப்பு எனும் படி முல்லை நிலம் கொண்டுள்ளது (1096).

[அரக்கோணத்திலிருந்து தெற்கே 6 கி. மீ. இல் உள்ளது.]

**கலையநல்லூர்:** காண்க: கலயநல்லூர் (3221).

**கழிப்பாலை:** (திருக்கழிப்பாலை)

சோழ நாட்டில் இவ்வூர் கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்ற இடத்திலிருந்தது. திருநாவுக்கரசர் சிவபெருமான் நிலைபெற்றுள்ள திருக்கழிப்பாலையை அடைந்தார் (1437). 'வனபவள வாய் திறந்து' என்ற பதிகம் பாடினார் (1438). மனைகளின் முற்றங்களில் கடலலைகள் சங்குகளைச் சொரியும் கழிப்பாலையிலிருந்து நீங்கினார் (1439).

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை 'வெந்த குங்குலியப் புகை விம்மவே' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2065).

சுந்தரர், கல்லால் கட்டப்பட்ட மதில்கள் பக்கத்தே சூழ்ந்த கழிப்பாலைக்கு வந்து இறைவனைச் 'செடியேன்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3320).

(இடைக்காலத்தில் கொள்ளிட நதியிலே பெருகி வந்த வெள்ளம் இக்கோவிலை அழித்துவிட்டது. த. ஊ. பே. 1976, ப. 37).

/ சிதம்பரத்திற்குத் தென்கிழக்கில் 6 கி. மீ. இல் உள்ளது ./

**கழுக்குன்று: (திருக்கழுக்குன்று)**

தொண்டை நாட்டில் உள்ள தலம். அழகிய பொன்னிற மலர்களை அணிந்த நீண்ட கூந்தலையுடைய கொடிச்சியருடன் தெய்வ மகளிர் மணமிக்க மலர்கள் பூத்த சுனைகளில் ஆடுகின்ற (1091) நீண்ட இடங்களை உடையது இத் தலம்.

திருநாவுக்கரசர் இதன் பாங்கணைந்து (1594) இறைவனடி வணங்கி 'மூவிலை வேற்கையானை' என்ற பதிகம் பாடினார் (1595).

செந்துருத்தி எனும் பண்பாடி வண்டுகள் பயிலும் சாரலுடைய இப்பதியைத் திருஞானசம்பந்தர் சென்றடைந்தார் (3027). அப்போது அவரைச் சிவனடியார்கள் எதிர்கொண்டழைக்கச் சம்பந்தர் சிவிகையிலிருந்து இறங்கினார். மணமிக்க சோலைத் திருமலையை வலம் கொண்டு இறைவனை விரும்பிப் பணிந்தார் (3028). 'தோடுடையான்' என்ற பதிகத்தைப் பாடிச் சிந்தை நிறை மகிழ்வுற்றார் (3029). பின் தொண்டருடன் இறைவனருள் பெற்றுச் சென்றார் (3030).

எண்திசையோர் பரவும் இப்பதியைச் சுந்தரர் அடைந்

தார் (3326). தேன்மிக்க மலர்ச்சோலைக் கழுக்குன்றத்தடியவர்கள் சுந்தரரை விருப்போடு எதிர்கொண்டனர். 'கொன்று செய்த கொடுமை' எனும் பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (3327).

(இரு கழுகுகள் நாளும் வந்து இறைவனைப் பூசித்ததால் இப்பெயர் பெற்றுள்ளது. வேதங்கள் இம்மலை உருவானதால் வேதகிரி எனப்படும். **வேதாசலம்** என்றும் வழங்குவர். த. ஊ. பே. 1976, ப. 289.)

/ செங்கல்பட்டுச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**கழுமலம்: (திருக்கழுமலம்)**

*காண்க:* **காழி, கொச்சைவயம், சண்பை, சிரபுரம், சீகாழி, தோணிபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுறம்.** சீர்காழி என்ற ஊருக்குரிய பன்னிரண்டு திருப்பெயர்களுள் இதுவும் ஒன்று (1912).

பெரியபுராணம், இவ்வூருக்குச் சுந்தரர் வருதல் பற்றிக் குறிக்கும் போது, 'உமை அம்மை முலைப் பாலமுதுண்டு வளர்ந்தவராம் திருஞானசம்பந்தர் பிறந்தருளும் பெரும் பேறு பெற்றதென உலகில் சிறந்த புகழ் பெற்ற கழுமலம் என்னும் திருப்பதியை அடைந்தார்' எனக் கூறும் (257). ஞானசம்பந்தர் பிறந்த இப்பதியை மிதிக்க அஞ்சி எல்லையில் நின்று சுந்தரர் இறைவனை வணங்கிச் 'சாதலும் பிறத்தலும்' என்ற பதிகம் பாடினார் (258).

கடையுகத்தில் கடலின் மேல் மிதந்த திருக்கழுமலத்தில் உமை அளித்த பாலினை ஞானசம்பந்தர் உண்ட செய்தியைத் திருநாவுக்கரசர் கேட்டார் (1442). ஞானசம்பந்தர் இவ்வூரில் பிறந்ததால் 'கழுமலக் கோன்' (1663, 2064). கழுமலத் தலைவர் (2963) என்று போற்றப் பெற்றார்.

பொன்னி நாட்டில் கன்னி மதில் மேல் முகில்சூழும் கழுமலமூதூர் நிலவியது (1900). திருஞானசம்பந்தரை அவரு

டைய தந்தையார் தோளின் மீது கொண்டுசென்றபோது நீடு திருக்கழுமலத்தில் பூசுரர் மாளிகையின் மேல் நெருங்கிப் பக்கத்தே நிறைந்த மறையோர் மகளிர் அலைமேல் மின்னற் கூட்டம் போல நின்று மங்கல மொழியால் வாழத்தி மலரும், சுண்ணமும், பொரியும் தூவினர் (1994). சம்பந்தர் "கழுமலத்து" இறைவனையும் இறைவியையும் வணங்கினார் (1998). உலவாப் பொற்கிழியை இறைவனிடம் பெற்ற சம்பந்தர் (2325) தந்தையாரிடம் 'வேதமுறைப்படி சிவனை உட்கொண்டு செய்யும் யாகத்தைத் தீமை நீங்க நீர் செய்யவும் திருக்கழுமலத்து வேத வேதியர் அனைவரும் செய்யவும் குறைபடாது மிகும்' எனக் கூறினார் (2327). பாண்டியன் முன் திருஞானசம்பந்தர் 'கழுமலம் நாம் கருதுமூர்' எனத் தம்மூர்ச் சிறப்பைப் பாடிப் புலப்படுத்தினார் (2652), பலவூர்கள் சென்ற சம்பந்தர் 'கற்றவர்கள் பரவும் திருக்கழுமலம்' வந்தார் (3043). சம்பந்தர்க்கு மணம் பேசச் சென்ற சிவபாத இருதயர் முதலியோர் 'காருலவு மலர்ச் சோலைக் கழுமலத்தை' மீண்டும் வந்தெய்தினர் (3066).

(உரோமச முனிவர் இறைவனை வணங்கி உலகில் உயிர்களின் மலங்கழுவும் வரம் பெற்றார். மேல்வரும் ஊழி வரை உயிர்கள் போற்ற நின்றது; மலம் கழுவப் பெற்றுச் சிவத்தை உயிர்கள் பெறும் பேறாக அதைச் செய்யும் கருத்துடன் பரவ நிற்கும் சிறப்புடையது என்பர்.)

[சிதம்பரம் நிலையத்திலிருந்து தெற்கே 17 கி.மீ. இல் உள்ள நிலையம்.]

**களந்தை:**

இவ்வூர் சோழ நாட்டில் உள்ளது. **களப்பாள்**[1] என்றும் வழங்குவர். சிலர் இதனைத் தொண்டை நாட்டிலுள்ள பொன்விளைந்த களத்தூர்[2] என்பர்.

இவ்வூரில் கூற்றுவ நாயனார் பிறந்தார் (3930). இவரைக் களந்தைக் கூற்றனார் என அழைப்பர் (3937).

(1) திருத்துறைப்பூண்டி நிலையத்திலிருந்து தென் மேற்கே 15 கி. மீ. இல் உள்ளது.

(2) செங்கல்பட்டுச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கில் 28 கி. மீ. இல் உள்ளது.

**களர்:** **(திருக்களர்)**

சோழநாட்டில் காவிரித் தென்கரையில் உள்ளது.

திருஞானசம்பந்தர், பொன்மதிலை உடைய திருக்களர் சென்று 'நீருளார் கயல்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2473). மீண்டும் ஒரு முறை இவ்வூர் சென்று பணிந்தார் (2794).

(இது **பாரிசாதவனம்** எனவும் வழங்கப்பெறும்)

/ திருத்துறைப்பூண்டி நிலையத்திலிருந்து தென்மேற்கே 14 கி.மீ. இல் உள்ளது ./

**கற்குடி:** **(திருக்கற்குடி)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவன் மீது 'மூத்த வனை' என்ற பதிகம்பாடி வணங்கினார் (1567).

செழுமலர்ச் சோலை சூழ்ந்த இவ்வூர்க்குத் திருஞான சம்பந்தர் சென்று (2240), 'வடந்திகழ்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2241).

சுந்தரர் தென்திசையில் உள்ள கற்குடி மலையினை அடைந்து அங்குள்ள இறைவனாம் விழுமியாரைப் பணிந்து 'விடையாரும்' என்ற பதிகம் பாடிச் சென்றார் (3247).

(கற்குடி என்பது **உய்யக்கொண்டான் திருமலை** என்று பெயர் பெற்றது. த. ஞா. பே. 1976, ப. 117).

/திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 4 கி. மீ. இல் உள்ளது./

**கறையூர்:** *காண்க:* **கொடுமுடி**

*கொங்கு நாட்டில் பொன்னித் தென்கரையில் உள்ளது இவ்வூர்.*

*சுந்தரர் இவ்வூர்க் கொடுமுடிக் கோயில் (கொடுமுடி, இறைவன் பெயர்) சென்று 'மற்றுப் பற்றெனக்கு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3240). பாண்டிக்கொடிமுடி என்னும் திருக்கோயில் கறையூர் என்ற ஊரைச் சேர்ந்தது. (த. ஊ. பே. 1976, ப. 212.) இன்று கொடுமுடி எனவே வழங்கும்.*

*[கரூர் நிலையத்திலிருந்து வடமேற்கே 27 கி. மீ. இல் உள்ள நிலையம்.]*

**கன்றாப்பூர்:**

*சோழ நாட்டில் உள்ள ஊர்.*

*திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவன் மீது மனங் கலந்து பாடி வணங்கினார் (1493).*

*(கன்று கட்டிய ஒரு முளையினின்றும் இறைவன் வெளிப்பட்டமையால் கன்றாப்பூர் என்னும் பெயர் அமைந்ததென்பர். த. ஊ. பே. 1976, ப. 268).*

*[திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கில் 10 கி. மீ. இல் உள்ளது.]*

**கன்னிகாப்பு:** *(கச்சி, காஞ்சி, காஞ்சிபுரம்)*

*காஞ்சிபுரத்திற்குரிய பல பெயர்களுள் இதுவும் ஒன்று.*

*காண்க:* **கச்சி.**

**கன்னிமாவனம்:** *காண்க:* **பாதிரிப்புலியூர்**

# கா

**காஞ்சி:** *காண்க:* கச்சி

**காஞ்சிபுரம்:** *காண்க:* கச்சி

**காட்டுப்பள்ளி:** **(திருக்காட்டுப்பள்ளி, மேலைத்திருக்காட்டுப்பள்ளி)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது இவ்வூர். இவ்வூர்க்குச் சென்ற திருநாவுக்கரசர் இறைவனை 'மாட்டுப் பள்ளி' என்ற பதிகம் பாடி வணங்கினார் **(1566).**

திருஞானசம்பந்தர் சிவன் கோயில் அடைந்து முன்றில் வலம் கொண்டு வணங்கிக் கன்றணைந்த ஆப்போல் கருத்து வாய்ப்ப 'வாரு மன்னும் முலை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2248).

(காவிரிக்கு வடகரையில் **திருவெண்காட்டிற்கு** அருகில் கீழைத் திருக்காட்டுப் பள்ளி உள்ளது. வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 12 கி. மீ. இல் உள்ளது.)

/தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 25 கி. மீ. இல் உள்ளது./

**காம்பீலி:**

தெலுங்கு நாட்டில் பல்லாரி மாவட்டத்தில் இவ்வூர் உள்ளது. இது நேசநாயனார் பிறந்த ஊர்.

சிறப்பு மிக்க செயல் முறை ஒழுக்கம் குன்றாது அன்பு வளர் சிந்தையும் வாய்மையும் உடைய நன்மை புரியும் பெரியவர்கள் நிலை பெற்று வாழும் பழம் புகழ் மிக்க பழைய பதி, உயர்ந்த மாடங்களை உடையது, காம்பீலி நகரம் (4192).

/குண்டக்கல் சந்திப்பிலிருந்து வடக்கே 75 கி. மீ. இல் உள்ளது./

**காரிகரை:** **(திருக்காரிக்கரை)**

தொண்டை நாட்டில் உள்ளது இவ்வூர்.

ஆரண்ய நதியின் வடகரையில் உள்ளது.

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவனை வணங்கினார் (1608). (இங்கு இவர் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் தொண்டர் சூழ மலையும் காடும் நெருங்கிய வலிய நிலம் பரந்த காடுகளைக் கடந்து சென்று காரிகரை முன்னர்ச் சென்று இறைவனை வணங்கினார் (2912).

/அரக்கோணம் ரேணுகுண்டா புகைவண்டிப் பாதையில் புத்தூர் நிலையததிற்குத் தென்கிழக்கில் 25 கி. மீ. இல் உள்ளது./

**காரைக்கால்:** *(திருக்காரைக்கால்)*

சோழ நாட்டில் உள்ளது இவ்வூர். வணிகர் குடி நெருங்கி ஓங்கும் ஊர். சங்குகளைக் கடலலைகள் சுமந்து ஏறிக் கழிக்கானல் உலவும் வளமிக்க காரைக்கால் (1717). இவ்வூரில் புனிதவதியார் எனும் காரைக்காலம்மையார் பிறந்தார் (1718). நீதிபதி என்பான் மகனுக்கு இவரை மகட்பேச, மாடமலி காரைக்கால் வள நகரில் பெரியோரை வரவிட்டனர் (1723). மண ஓலை விடுத்து மணமகனை மண அணி விளக்கி, முரசார்ப்பக் காரைக்காலில் புகுந்தனர் (1726). கணவன் பிரிந்து சென்ற பின் நீண்ட கன்னி மாமதில் சூழ் மாடக் காரைக்காலில் புனிதவதி நிலைபெற்ற கற்புடன் இல்லறம் புரிந்து வந்தார் (1755).

(இதற்குச் சாகம்பரிபுரம் என்ற பெயருமுளது.)

/மயிலாடு துறைச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கில் 40 கி. மீ. உள்ள நிலையம்./

**காழி:** *காண்க:* **கழுமலம், கொச்சைவயம், சண்பை, சிரபுரம், (சீகாழி), தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது.

(சீ)காழி எனப்படும் இவ்வூரில் திருஞானசம்பந்தர்

பிறந்தார். இவ்வூர்க்குரிய பன்னிரண்டு பெயர்களுள் காழி என்பதும் ஒரு பெயராகும் (1912). ஞானசம்பந்தர் இப்பதி வாழத் திருவவதாரம் செய்தார் என்பர் (1924). இவ்வூர் வீதிகள் ஒளி பொருந்திய மணிகளுடையன (1923). இங்குத் தேவர்கள் வேள்வி செய்தனர் (1928). இசைபாடும் வண்டு கள் ஒலிக்கின்ற சோலை நிறைந்தது இவ்வூர் (1451).

அந்தணர் மறை ஒலியுடன் கமுகுச் சோலை சூழவும் இருப்பதால் யுகக்கடையிலன்றி எப்போதும் கடல் மீது மிதப்பது போல இவ்வூர் தோன்றும் (1901). யுகக் கடை நீர் வரைகள் புற மதில் வரிசையில் தெரியும் (1902). தாம ரைப் பொய்கைகள் பல உள்ளன (1903). ஓமப்புகையால் இரவும், நீற்றொளியால் நண்பகலும் விளங்குவதால் இம் மூதூர்க்குப் பகலும் இரவும் மிகையாகும் (1904).

வயலில் பூத்த தாமரையாம் தீயில் வயற்கரையில் வளர்ந்த தேமாங்கனி பிளந்து வீழும் சாறு இலை வழியே ஒழுகுவதால், இவ்வூர் மக்களன்றி மரங்களும் ஆகுதி வேட் கும் என்பர் (1905). சோலையில் நுழைந்து எழும் மதியம், மலர் மதுவும் மகரந்தமும் அளாவி மாலையில் தோன்றும செவ்வொளி மதியம் போலத் தோன்றும் (1906). இந் நகரில் தாமரை, வேதியர் போல் நூல் தாங்கி நுண்துகள் அணிந்து வண்டிசையால் சாமவேதம் பாடும் (1907). கற்புடை மகளிர் விளங்குவதால் மாடங்கள் பொலிவுறும் (1908). வேள்விபுரி சடங்கை மறைச் சிறுவர்கள் விளை யாட்டாய்ச் செய்யும் தெருக்கள் இவ்வூர்த் தெருக்களாம் (1909). மாளிகைகளில் கொடிகள் வானளாவ நின்றன (1910).

இவ்வூரின் மடைகளில் மணியின் குவியல், வயல்களில் கயல் வெள்ளம்; பக்கமெலாம் மலர்க்குவியல்; அவற்றின் புறமெல்லாம் யாகப்பொலிவு; வேதம் ஓது கிடைகளில் கலைச் சூழல்; சோலைகளில் வண்டின் கூட்டம்; சோலை யிடையெலாம் முனிவர் கூட்டம்; மதிலெல்லாம் முகிலின் கூட்டம் (1911). கற்றமாந்தர்கள் வாழ்வது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் இறைவனை வணங்கி யாழ்ப்பாண ரோடு காழியைத்தொழுது புறம்போந்தார் (2179). இவ்வூர்

மறையவர்கள் வீழிமிழலைக்குச் சென்ற போது அவ்வூர் மறையவர்கள் முறைமையாக எதிர்கொண்டனர் (2449).

பல தலங்கள் சென்று சிவபெருமானை வணங்கித் திரும்பிய சம்பந்தர் காழியின் புறம்பணையில் வந்து சேர்ந்தார் (3045). மலர், விளக்கு, தூபம் ஆகியவற்றுடன் 'காழி சேர்மின்' எனக் கடை முடித்த திருப்பதிகம் பாடி மதில் சூழ்ந்த ஊருள் புகுந்தார் (3046).

சம்பந்தர் திருமணம் புரியக் காழி மாநகர் வேதியர் குழுவுடன் அன்பர்களும் நெருங்கிச் செல்ல வளம் பதியை வணங்கிச் சிவிகையில் ஏறினார் (3095).

இவ்வூர்ப் பெயர் சம்பந்தரின் பெயருடன் இணைந்து சிறப்பினை வெளிப்படுத்தும்.

காழி அண்ணலார் (2424)

காழி ஞானப்பிள்ளையார் (1515)

காழித் தலைவர் (862)

காழிப் பிள்ளையார் (2381)

காழி மன்னவர் (3010)

காழி வேந்தர் (2379) என்பன அவற்றுள் சில.

* * *

உலகில் உமை அம்மையின் ஞானப்பாலுண்ட ஞான சம்பந்தர் வந்தருளிய வனப்புடையது; கடல் ஊழி வெள்ளத்தில் மிதந்து உலகுக்கு ஒரு முதலாய் நின்றது; காழி மாநகர் ஆகும். இவ்வூரில் கணநாத நாயனார் பிறந்தார் (3923).

* * *

இவ்வூரில் சம்பந்தர் பிறந்து கோயில் குளக்கரையில் அம்மை ஞானப் பாலூட்டப் பெற்றார். இப்பெருமை கேட்ட திருநாவுக்கரசர் சம்பந்தரைக் காண இங்கு வந்தார். சுந்தரர், சம்பந்தர் பிறந்த இவ்வூரை மிதிக்க அஞ்சிப் புறத்தே நின்று இறைவனைப் பாடி வணங்கினார். திருநீலகண்ட யாழ்ப்பாணர் வந்து சம்பந்தர் பதிகங்களை யாழில் இட்டு வாசித்துப் பேறுபெற்ற ஊர் இதுவாகும்.

இவ்வூரின் பன்னிரு பெயர்களுக்கும் பன்னிரண்டு தனிக் கோயில்கள் உள. அவற்றுள் தோணிக் கோயில் சிறந்து விளங்குவதாகும்.

(காளிதன் என்ற பாம்பும், இறைவனுடன் நடனமாடித் தோல்வியுற்ற காளியும் வணங்கியதால் இப்பெயர்பெற்றது.)

[சிதம்பரம் நிலையத்திலிருந்து தெற்கே 17 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**காளத்தி:** (திருக்காளத்தி)

தொண்டை நாட்டிலுள்ள பதி.

அழகிய இடமகன்ற வானக அரம்பையரின் கூந்தலி லுள்ள வண்டுகள், குறத்தியர் கூந்தலில் மூழ்கி அங்கிருந்து நீங்காதிருக்கும் இடமாகிய இறைவனின் திருக்காளத்தி என்னும் மேகம் சூழ்ந்த மலை, குறிஞ்சிச் செல்வம் படைத்தது (1089).

இம்மலை முன்னாளில் காளன் என்னும் பாம்பும், யானையும் தம்மில் மாறுபட்டு வழிபாடு செய்ய இறைவன் பொருந்திய மலை, அழிவில்லாத சிறப்புடையது (2918). இங்கு வழிபட்டுத் திண்ணனாராம் கண்ணப்பர் பேறு பெற்றார்.

திண்ணனார் காளத்திமலையைக் காட்டி இதனை அடைவது குறித்துக் கூற, அவர் நண்பன் நாணன் 'இதன் மீதுள்ள இறைவன் குடுமித்தேவரைக் கும்பிடலாம்' என்றான் (745). களி வரு மகிழ்ச்சி பொங்கக் காளத்தியை அவர் கண்டு கொண்டு மலைச்சாரல் சேர்ந்தார் (749). ஆகாயத்தை அளாவி நின்ற திருக்காளத்தி மலையில் எழுந் தருளிய இறைவனைக் கண்டார் (754). திண்ணனார் தம் தலையில் சுமந்த மாலையைப் பெரிய காளத்தி மலை மேல் உள்ள இறைவர்க்குச் சாத்தி வணங்கினார் (773). ஒளி வீசும் தீப மரங்களாலும், மந்திகள் மலைப் பொந்தில் வைத்த மணிகளின் ஒளியாலும், புலனடக்கிய முனிவர்க

ளின் அரும் பெரும் சோதியாலும் காளத்தி மலையில் இரவு என ஒன்றில்லை (780). அத்தகைய காளத்தி மலை ஏறி ஓர் அந்தணர் இறைவர்க்கு முறைப்படி, திண்ணனார் இட்டவற்றை நீக்கிப் பூசை செய்தார் (798).

நாள் தோறும் திண்ணனார் பொன்முகலியாற்றில் முழுகி இறைவன் அருளை எண்ணி நிலை பெற்ற திருக் காளத்தி மலை ஏறி முன்பு போல் இறைவனைப் பூசித் திருந்தார் 809).

மேகம் தங்கிய திருக்காளத்தி மலை இறைவன் திண்ண னார்க்கு அருள் புரிந்தார் (830).

* * *

தேவர் கூட்டம் தொண்டர்கள் பின் நிறைந்துள்ள திருக்காளத்தி மலையைத் திருநாவுக்கரசர் சென்றடைந் தார் (1608). பொன்முகலி ஆற்றில் முழுகிக் காளத்தியின் தாழ்வரையைத் தலையால் வணங்கி இறைவன் நிலைபெற் றுள்ள மலைமேல் ஏறி வலம் வந்து வணங்கினார் (1609). மனம் களித்துப் பரவசமாய் இறைவன் மீது 'விற்றூண்' என்ற திருத்தாண்டகம் பாடினார் (1610).

திருஞானசம்பந்தர், பெருகும் அன்பால் திருவாய் மஞ் சன நீராட்டும் கண்ணப்பரை நினைந்து ஒளி வீசி விளங் கும் திருக்காளத்தி மலையை வணங்க உவந்து சென்றார் (2911). கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தேய வேட் டையாடிய காடும், வானத்தை மறைக்கும் நீண்ட சோலை களும், தூறுகளும், தேவர் வணங்கி வரும் பெருமை மிக்க பல இடங்களும் கடந்து திருக்காளத்தியை அடைந்தார் (2915). சம்பந்தர் வந்த செய்தியை அறிந்து காளத்தித் தொண்டர் கூட்டம் நெருங்கி வந்து முனிவர்களும், காபா லிகளும், பல விரதம் பூண்ட சைவரும், வேடரும், தவம் புரிவோரும் அப்பதியில் உள்ளவருடன் கூடி எதிர்கொள் ளச் சென்றனர் (2916). மண்ணுலகில் சிவலோகம் வந்த தெனச் சென்ற போது சிவிகையிலிருந்து இறங்கிய சம்பந் தரைத் தொண்டர் குழாம் போற்றி அரவொலி எழுப்பி னர். அப்போது சம்பந்தர் 'திருக்காளத்தித் திருமலை அம்

மலைகளில் யாது?' எனக் கேட்டார் (2917). அதுகேட்ட மாதவத்தோர் 'இந்த மலை காளனோடு (பாம்பு) அத்தி (யானை) மாறுபட்டு வழிபாடு செய்யும் புகழ் மிக்க மலை யாகும் என்றனர். நிலத்தில் வீழ்ந்து எழுந்த மகிழ்ச்சியால் திருவிராகத் தாள அமைப்பில் 'வானவர்கள் தானவர்' என்ற பதிகம் பாடிக் கண்ணப்பர் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடித் திருக்காளத்தி அடிவாரம் சேர்ந்தார் (2919). காளத்தி மலை மேலுள்ள இறைவனைப் பணிந்து இப்பதியில் பயிலும் நாளில் (2923) வட கயிலை, கேதா ரம் முதலிய பதிகளைத் தொழுது 'பொடி கொள்'. வாள் வரி', 'தொண்டரஞ்சு' எனும் பதிகங்கள் பாடினார் (2924). பல பதிகளையும் நினைந்து பதிகம் பாடி இப்பதியில் நெடிது மகிழ்ந்திருந்தார் (2925). தென்திசையில் கயிலை எனும் திருக்காளத்தியைச் 'சந்தமார்' என்ற பதிகம் பாடிப் போற்றி இனிதமர்ந்தார் (2926).

சுந்தரர், மலை உச்சியில் மேகங்கள் தோய்கின்ற பெரு முடிகளை உடைய திருக்காளத்தி மலையைச் சேர்ந்தார் (3349). திண்ணனாராம் கண்ணப்பரின் துன்பம் களைந்த இறைவனின் காளத்தியை அடைந்து பணிந்தார். அருளால் ஏறி அன்பாறு மடுப்ப இறைவன் முன் வணங்கினார் (3350). 'செண்டாடும்' என்ற பதிகம் பாடிக் கண்ணப்பர் மலரடி பணிந்தார். புறம்வந்து அவர் வாழ்ந்த திருப்பதியில் தொண்டருடன் எழுந்தருளினார். அப்போது வட திசையி லுள்ள பருப்பதம், கேதாரமலை முதலிய இடங்களை இங் கிருந்தபடியே வணங்கி 'மானும் மரையினமும்', 'வாழ்வா வது மாயம்' முதலிய பதிகங்களை முறையே பாடி வணங் கினார் (3352).

* * *

திருமூலர் திருக்காளத்தி மலை சேர்ந்தார் (3567). இங்குள்ள இறைவனை வணங்கிச் சென்றார் (3568).

(சிலந்தி, பாம்பு, யானை ஆகியவை சிவனைப் பூசித்த தால் இப்பெயர் பெற்றது என்பர். மும்முடிச் சோழபுரம் என்னும் மறு பெயர் பெற்றது. த. ஊ. பே. 1976, ப. 115.)

[ரேணுகுண்டா சந்திப்பிலிருந்து வடகிழக்கில் 24 கி.மீ. இல் உள்ளது.]

**காறாயில்:** (திருக்காறாயில்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவன் மீது 'நீரானே' என்ற பதிகம் பாடிப் போற்றினார் (2472).

(திருக்காறைவாசல் என்ற பெயருமுளது.

முசுகுந்தன் இந்திரனிடம் பெற்று வந்த தியாகேசர் வடிவில் ஒன்றை வைத்து வழிபட்ட இடம். சத்த விடங்கத் தலங்களுள் ஒன்று. சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 95)

[திருவாரூர்க்குத் தென்கிழக்கில் 6 கி. மீ. இல் உள்ளது.]

**கானப்பேர்:** (திருக்கானப்பேர்)

பாண்டி நாட்டில் இவ்வூர் உள்ளது.

திருநாவுக்கரசர், காளையை ஊர்தியாக உடைய சிவனை வணங்க இவ்வூரை அடைந்து தொழுதார் (1675).

திருஞானசம்பந்தர் 'கற்றார்கள் தொழுதேத்தும் கானப்பேர் தொழுது, 'பிடியெலாம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2784).

சுந்தரர், சேரமான் பெருமானுடன் பாண்டி நாட்டுப் பதிகள் பல பணிந்து திருச்சுழியலில் தங்கினார் (3858). இறைவன் சுந்தரர் கனவில் காளையார் திருவடிவில் கையில் பொற்செண்டும், திருமுடியில் சுழியமும் கொண்ட திரு வேடம் காட்டிக் 'கானப் பேர் நாமிருப்பது' எனக் கூறினார் (3859). தாம் கண்டதைச் சுந்தரர் சேரமானிடம்

கூறிக் கானப்பேர் சென்று 'தொண்டரடித் தொழலும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3861). ஆராத காத லுடன் இறைவனைப் பணிந்து சில நாள் மேகம் சூழ்ந்த மலர்ச்சோலை மிகுந்த கானப்பேரூரில் தங்கியிருந்தார் (3864).

(காளையார் கோயில் என வழங்கப்பெறும். த. ஊ. பே. 1976, ப. 284)

/சிவகங்கை நிலையத்திலிருந்து கிழக்கே 8 கி. மீ. இல் உள்ளது./

**கானாட்டுமுள்ளூர்: (திருக்கானாட்டுமுள்ளூர்)**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.

சுந்தரர் கானாட்டு முள்ளூரை அணுகிய போது (3273) இறைவன் எதிர்காட்சி கொடுத்தார். 'வள்வாய' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3274).

(கானாட்டாம்புலியூர் என்ற பெயர் வழங்கப்படும்.)

/சிதம்பரத்திற்குத் தென்மேற்கே 30 கி. மீ. இல் உள்ளது./

**கானூர்: (திருக்கானூர்)**

சோழ நாட்டிலுள்ள ஊர். காவிரிக்கு வடகரையில் உள்ளது. இங்குச் சென்று திருஞானசம்பந்தர் 'வானோர் சோதி மன்னு' என்ற பதிகம் பாடினார் (2206).

(இவ்வூர்க்குச் சென்ற திருநாவுக்கரசர் 'திருவினாதனும்' என்ற திருக்குறுந்தொகை பாடினார். இப்போது அங்கு ஊரில்லை. கோயில் மட்டும் உள்ளது. த. ஊ. பே. 1976, ப. 268).

/பூதலூர் நிலையத்திறகு வடமேற்கே 11 கி. மீ. இல் உள்ளது./

## கீ

### கீழ்வேளூர்:

*சோழநாட்டில் இவ்வூர் காவிரியின் தென்கரையிலுள்ளது.*

*இங்குள்ள கோயில் மாடக்கோயில். திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவனைக் கலந்து பாடினார் (1493).*

*திருஞானசம்பந்தர் காவிமலர் பூத்த வயல் சூழ்ந்த இவ்வூர் இறைவனை 'மின்னுலாவிய சடையினர்' எனப் பாடி வணங்கினார் (2365).*

*சுந்தரர், சேரமான் பெருமாளுடன் சென்று இவ்வூர் இறைவனை வணங்கினார் (3831).*

*(இங்குப் பாடிய சுந்தரர் பதிகம் கிடைத்திலது.)*

*(கீழ்வேளூரின் பெயர் இப்பொழுது* கீவளூர் *என்று சிதைந்துள்ளது. த. ஊ. பே. 1976, ப. 65).*

*[திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து கிழக்கே 13 கி. மீ. இல் உள்ள நிலையம்.]*

### கீழைக்காட்டுப்பள்ளி: *(கீழைத்திருக்காட்டுப்பள்ளி)*

*காண்க:* காட்டுப்பள்ளி

*(இப்பொழுது* ஆரணியேசுரர் கோயில் *என வழங்குகின்றது. த. ஊ. பே. 1976, ப. 238)*

## கு

### குடந்தை: (திருக்குடந்தை, கும்பகோணம்)

காண்க: குடமூக்கு

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ்வூர்.

மூர்க்க நாயனார் பல ஊர்களிலும் சென்று சிவனை வணங்கிச் சூதாடுதலால் பெற்ற பொருளைக் கொண்டு அடியார் பணி செய்து முடித்துக் குடந்தை சேர்ந்தார் (3624). சில நாளில் அடியார்க்கு இன்னமுதாக்கு தற்குப் பொருள் எய்தப் புகழ்க் குடந்தை அம்பலத்தில் சூதாடிப் பொருள் வென்று சிவன் அருளாக அதைக் கொண்டு அமுது செய்வித்து அடியார்க்களித்து இன்புற்றார் (3625).

/தஞ்சாவூர் - மயிலாடுதுறைச் சந்திப்புகளுக்கிடையில் உள்ள (கும்பகோண) நிலையம்./

**குடமூக்கு: (திருக்குடமூக்கு)**

காண்க: குடந்தை

**கும்பகோணம்** என வழங்கப் பெறும் ஊர். (த. ஊ. பே., 1976, ப. 289). சோழநாட்டில் காவிரியின் தென்கரை யிலுள்ளது.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கினார் (1481). 'பூ வைத்தவன்' என்ற திருக்குறுந தொகையும் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத்தில் 'சொன் மலிந்த' என்ற திருத்தாண்டகமும் பாடினார். திருக்குடந் தையில் கர்ரோணத்தையும் பணிந்தார். (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் நாற்றிசையோர் பரவும் இவ்வூரை அடைந்தார் (2303). தேமலர்ச் சோலை சூழ்ந்த இவ்வூரினை அடைவது கேட்டு ஊர் மக்கள் மறையொலி பெருக மங்கலம் முழங்க, அரச்ரை எதிர் கொள்ளும் முறையில் எதிர் கொண்டேற்றனர் (2304). இங்கு 'அரவிரி' என்ற

பதிகம் பாடினார் (2305). இவ்வூர்க் கீழ்க்கோட்டத்தில் இறைவனை வணங்கிக் காரோணம் என்ற கோயிலை அடைந்தார் (2306). கங்கை முதல் புனிதமாம் தீர்த்தத்தலங்கள் கூடிய மாமகத்தில் நீராடிப் பாவம் போக்கும் கோயிலைத் தொழுது 'வாரார் கொங்கை' எனற பதிகம் பாடினார் (2309).

சுந்தரர் குடமூக்கை அடைந்து இறைவனைப் பணிந்து பாடினார். (இப்பதிகம் கிடைத்திலது.)

இவ்வூரில் மூர்க்க நாயனார் சூதினால் வென்ற பொருளைச் சிவனடியார்க்கு உணவாக அளித்துப் பணி செய்தார். (பேருழி நீர்ப்பெருக்கில் எல்லா உயிர்களையும் சேரக் கொண்டு வைத்த குடத்தின் மூக்கு இருந்த இடம் என்ற காரணத்தால் இப்பெயர் வந்தது என்பர். தம்முள் மூழ்கியவர் பாவங்களைத் தாம் நீக்கக் கங்கை முதலிய எழுவர் ஆடும் மகாமகத் தீர்த்தம் இங்குள்ளது.)

/தஞ்சாவூர் - மயிலாடுதுறைச் சந்திப்புக்களுக்கிடையில் உள்ள (கும்பகோண) நிலையம்./

**குடவாயில்: (திருக்குடவாயில்)**

சோழ நாட்டில் உள்ள ஊர் இது. காவிரியின் தென் கரையில் உள்ளது. மாடக் கோயில் அமைந்தது. திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவனை வணங்கினார் (1481). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று 'திகழும் திருமாலொடு' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2301).

(தம்மை வழிபட்ட திருணபிந்து முனிவர்க்குச் சிவன் குடத்தின் வாயில் வெளிப்பட்டு அவருடைய குட்ட நோயினைத் தீர்த்ததால் இப்பெயர் வந்தது என்பர்.

கருடன் பூசித்து அமுதம் கொண்டு வந்து தானும் தன் தாயும் சாபம் தீர்ந்ததால் இப்பெயர் வந்தது என்பர்.

தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 489.)

குடவாசல் என வழங்கும் ஊரே குடவாயில். இங்கு ஒரு பெருங்கோயில் இருந்தது. த. ஊ. பே. 1976, ப. 226, 227.)

/ நீடாமங்கலம் சந்திப்பிலிருந்து வடகிழக்கில் 14 கி. மீ. இல் உள்ளது. /

**குண்டையூர்:**

சோழநாட்டில் உள்ள ஊர். வேளாண்மையில் சிறந்தது. இவ்வூரில் வாழ்ந்த குண்டையூர்க் கிழார் (3164) என்ற வேளாளர் சுந்தரர் பால் அன்பு கொண்டு திருவாரூரிலுள்ள பரவையார் மாளிகைக்கு வேண்டிய அமுதுக்குரிய பொருள் களை அளித்து வந்தார் (3165). ஒரு சமயம் நெல்லளிக்க இயலாமல் மழை சுருங்கியபோது குண்டையூர்க் கிழார் துயர் எய்தித் துயில் கொண்ட போது கனவில் சிவன் தோன்ற 'ஆரூரனுக்கு உன்பால் நெல் தந்தோம்' என்று கூறி மறைய, மறுநாள் காலை குண்டையூரில் நெல்மலை குவிந்திருந்தது (3169). அதனை அவர் சுந்தரர்க்கு அறிவிக்கக் குண்டை யூருக்குச் சுந்தரர் வந்தார். சுந்தரர் இறைவனை வேண்ட இறைவனருளால், குண்டையூர் நெல்மலையைச் சிவ பூதங் கள் எடுத்துப் பரவை மாளிகையில் நிறைவித்தன (3179).

/திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தென்கிழக்கில் 15 கி. மீ. இல் உள்ளது. /

**குரங்கணின் முட்டம்: (திருக்குரங்கணின்முட்டம்)**

தொண்டை நாட்டில் உள்ள ஊர். மணமிக்க மலர்கள் பூத்த நீர்நிலைகளுள்ள குரங்கணின்முட்டத்தைத் திருஞான சம்பந்தர் அடைந்தார் (2882). இங்கு இறைவனை வணங்கி 'விழுநீர்' என்ற பதிகம் பாடினார் (2883).

(குரங்கும் (வாலி), அணிலும், முட்டமும் (காகம்) இறைவனை வழிபட்ட ஊர் என்பதால் இப்பெயர் பெற்றது என்பர்.)

/காஞ்சிபுரம் நிலையத்திலிருந்து தெற்கே 10 கி. மீ. இல் உள்ளது./

**குரங்காடுதுறை:** **(திருக்குரங்காடுதுறை, தென்குரங்காடுதுறை)**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர். இன்று ஆடுதுறை என வழங்கப் பெறுகிறது (த. ஊ. பே. 1976, ப. 17) சம்பந்தர் காவிரி ஆற்றின் கரை வழியே சென்று இவ்வூரை அடைந்து 'பரவக் கெடும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2314). (செம்பியன் மாதேவி கற்றளி அமைத்தாள் த. ஊ. பே. 1976, ப. 150 சுக்ரீவன் வழிபட்ட இடம் மு. நா. ப. 188.)

(திருப்பழனத்திற்கு அருகே வாலி வணங்கிய வடகுரங் காடுதுறை ஒன்றுள்ளது. த. ஊ. பே. 1976, ப. 188. திருவை யாற்றிலிருந்து கிழக்கே 11 கி. மீ. இல் உள்ளது.)

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து தென்மேற்கில் 20 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**குருகாவூர்:** **(திருக்குருகாவூர்)**

சோழ நாட்டில் உள்ளது இவ்வூர். திருஞானசம்பந்தர், மணம் வீசும் பொழில் நிறைந்த குருகாவூர் சென்று இறை வன் மீது 'சுண்ண வெண்ணீறணி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2027).

இவ்வூர்க்கு வந்த சுந்தரர் (3309) வழியில் மிக்க பசி யால் வருந்திய போது இறைவன் தண்ணீரும், பொதி சோறும் தந்தார் (3313). பின்னர் மறைந்த இறைவனைப் புகழ்ந்து 'இத்தனையா மாற்றம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3317). இவ்வூர்க் கோவிலுள் சென்று, கோபு ரத்தை வணங்கி, உள்புக்கு, அன்புடன் வலங்கொண்டு வணங்கினார் (3318). (இங்குப் பாடிய பாடல் கிடைக்க வில்லை.)

(ஈசன் கோயில் கொண்ட இடம் வெள்ளடை த. ஊ. பே. 1976, ப. 211.

திருக்கடாவூர் என வழங்கப் பெறுகிறது.

சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977 ப. 6)

|சீர்காழி நிலையத்திற்குக் கிழக்கே 6 கி. மீ. இல் உள்ளது.|

குற்றாலம்: (திருக்குற்றாலம்)

காண்க: குறும்பலா.

பாண்டி நாட்டில் உள்ள ஊர்.

இங்குள்ள கோயில், குறும்பலா ஆகும்.

திருஞானசம்பந்தர் இவ்வூரின் இறைவனை வணங்கி 'வம்பார் குன்றம்' என்று குற்றாலச் சிறப்பையும் 'திருந்த மதி ஆடித் தெண்ணீர்' எனக் குறும்பலாவின் சிறப்பையும் பாடினார் (2784).

சேரமான் பெருமாளுடன் சுந்தரர், மலைச் சாரலில் நிறமுள்ள மணிகள் ஒளிவீசும் குற்றாலம் சென்றார் (3853). இறைவன் கழல் வணங்கிக் குறும்பலாவைத் தொழுது பதிகம் பாடினார் சுந்தரர் (3854). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

(இங்குள்ள சபை சித்திர சபை. த. ஊ. பே. 1976, ப. 204)

|தென்காசிச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 6 கி. மீ. இல் உள்ளது.|

குறுக்கை: (திருக்குறுக்கை)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ளது இவ்வூர்.

அட்ட வீரட்டங்களுள் ஒன்று. இங்கு இறைவன் மன்மதனை எரித்தான். திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தருடன் பலவூர்களை வணங்கிப் பின் விடை பெற்றுக் குறுக்கை வந்து இறைவனை, 'நீற்றனை' என்ற பதிகம் பாடித் துதித்தார் (1454). திருநேரிசை ஒன்றும் பாடியுள்ளார். (அதில் இரு பாடல்களே கிடைத்துள்ளன.)

திருஞானசம்பந்தர் இவ்வூரைச் சார்ந்து (2186) திரு வீரட்டானத்தமர்ந்த இறைவனைப் பாடி வணங்கினார் (2187).

(இப்பதிகம் கிடைத்திலது.)

(தீர்க்கவாகு என்ற முனிவர் ஆகாய கங்கை நீரால் இறைவற்குத் திருமஞ்சனம் செய்ய விரும்பித் தம் நீண்ட கைகளை உயர்த்த அவை குறுகின காரணத்தால் குறுக்கை எனப் பெயர் பெற்றது எனபர். (சிவஸ்தலமஞ்சரி, வ. த. சுப்பிர மணிய பிள்ளை. சென்னை, 1958 ப. 173. குறுக்கையர் குடியினர் பெயரால் அமைந்த ஊர் குறுக்கை. த. ஊ. பே. 1976, ப. 93)

/ மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 4 கி.மீ. இல் உள்ளது. /

**குறும்பலா:** காண்க: குற்றாலம்

பாண்டி நாட்டில் உள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று இறைவன் மீது 'திருந்தமதி' எனும் பதிகம் பாடி வணங்கினார் (2784).

(அகத்தியர், திருமாலுருவைச் சிவனுருவாக ஆக்கிய தலம் என்பர் தி. தொ. பு. V சு. உரை 1950, ப. 1110.)

/ தென்காசிச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 6 கி. மீ. இல் உள்ளது. /

**குறும்பொறையூர்:**

அதிகன் படை மடிய, முடி மன்னர் ஆகிய புகழ்ச்

சோழரின் படைகள் மலைக்காவல் உடைய அரணத் தோடு கணவாய்களையும் இடித்து நிரவிக் கொடிகளை யுடைய பெரிய மதில்களை உடைய குறும்பொறையூர் என் னும் குறிஞ்சி நிலத்துள்ள ஊரை முற்றுகை இட்டன (3968).

/ இதன் இருப்பிடம் தெரியவில்லை. /

# கூ

**கூடல்:** காண்க: **மதுரை**

பாண்டி நாட்டில் நான்மாடக்கூடல் என்னும் மதுரை யில் பாண்டியன் சங்கம் வைத்த செய்தி புலப்படும் (2742).

திருநீலகண்டயாழ்ப்பாணர் இறைவன் சீர்களை யாழி லமைத்துப் போற்றிய வண்ணம் பல ஊர்களை வணங்கிப் புகழ் விளங்கும் கூடலில் இறைவனை வணங்கச் சென்றார் (4215). இறைவனருளால் அன்பர்கள் அவரை இறைவன் கொண்டு செல்ல அவர்கள் முன்பு கூடல் முதல்வராம் சிவபெருமானைப் பாணர் பாடினார் (4218).

**கூடலையாற்றூர்: (திருக்கூடலையாற்றூர்)**

நடுநாட்டில் உள்ளது இவ்வூர். மணிமுத்தாறும் வசிட்ட நதியும் கூடிய பின் வரும் வடவெள்ளாறும் கூடும், இடத்தில் உள்ளது.

சுந்தரர் கூடலையாற்றூரைச் (3254) சாராமல் திருமுது குன்றை நோக்கிச் செல்லும் போது இறைவன் வேதியர் வடிவு தாங்கி அவர் முன் வந்தார் (3255). அவரிடம் சுந்த ரர் முதுகுன்றூர்க்கு வழி கேட்க அவர் 'கூடலையாற்றூர் ஏறச் சென்றது இவ்வழி' என்று வழித்துணையாய்ச் சென் றார் (3256). பின் அவரைக் காணாது சுந்தரர் 'வடிவுடை மழுவேந்தி' என்ற பதிகம் பாடித் துதித்தார் (3257). இவ்

ஊரில் சென்று இறை கழல் வணங்கி அருள் பெற்றார் (3257).

/விருத்தாசலம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 23 கி.மீ. இல் உள்ளது./

# கே

**கேதீச்சரம்:** (திருக்கேதீச்சரம்)

ஈழ நாட்டில் உள்ள மாதோட்டம் என்னும் நகரில் உள்ள இறைவன் கோயில்.

திருஞானசம்பந்தர் திருராமேச்சரத்தில் இருந்த வண்ணம், சந்திரனைப் புனைந்த மாடங்கள் நிறைந்த மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சர அண்ணலை வணங்கி 'விருது குன்ற மா' என்னும் பதிகம் பாடினார் (2788).

சேரமான் பெருமாளுடன் சென்ற சுந்தரர் இராமேச்சரத்து இறைவனை வணங்கினார். பின் தூரத்தே மாதோட்டத்துக் கேதீச்சரம் சார்ந்த இறைவன் மீது 'நத்தார் படை ஞானன்' என்ற பதிகம் பாடி வணங்கினார (3856)

/ஈழநாட்டில் தலைமன்னார் நிலையத்திற்குத் தென்கிழக்கே 34 கி. மீ. இல் உள்ளது./

# கை

**கைச்சினம்:** (திருக்கைச்சினம்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ்வூர். திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவன் மீது 'தையலோர் கூறுடையான்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2472).

(இந்திரன் மணலால் சிவலிங்கம் செய்து வணங்கிப் பின் அதை விதிப்படி ஒடுக்கி எடுக்க முயன்ற போது வராமல் அவன் கை அடையாளம் உருவத்தில் பட்டதால் இப் பெயர் வந்தது என்பர். இன்று 'கச்சியம்' எனவும் வழங்கப் பெறும். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 97).

[திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தெற்கே 14 கி. மீ. இல் உள்ளது.]

# கொ

**கொச்சைவயம்:** காண்க: **கழுமலம், காழி, சண்பை, சிரபுரம், சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.**

திருஞானசம்பந்தர் பிறந்த **காழிக்குரிய** பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று (1912).

(ஆற்றிடையே பராசரர், மச்சகந்தியைப் புணர்ந்ததால் உண்டான தீய நாற்றமும், பழியும் நீங்கப் பூசித்து வரம் பெற்றதால் இப்பெயர் வந்தது.)

[சீகாழி நிலையம் சிதம்பரத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது.]

**கொடிமாடச்செங்குன்றூர்:** காண்க: செங்குன்றூர்[2]

**கொடுங்குன்றம்:** (திருக்கொடுங்குன்றம்)

பாண்டி நாட்டில் உள்ள ஊர். **பிரான்மலை** என வழங்கப் பெறும் (த. ஊ. பே. 1976, ப. 128)

திருஞானசம்பந்தர், முறுக்குடைய கொம்புடைய கலைமான்களும் அவற்றுடன் இணைந்த மான்களும் கன்றுகளும் கூட்டமாகத் துள்ளிப் பாயும் காடுகளின் வழியைக் கடந்து

இறைவன் மகிழ்ந்த திருநெடுங்குன்றத்தை அடைந்தார் (2527). இந்த 'வானிற் பொலி வெய்தும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2528).

(பாரியின் பறம்பு நாட்டை அணி செய்தது. த. ஊ. பே. 1976, ப. 168)

/ காரைக்குடி நிலையத்திலிருந்து வடமேற்கில் 48 கி. மீ. இல் உள்ளது. /

**கொடுங்கோளூர்:** *(அஞ்சைக்களம், மகோதை)*

சேர நாட்டில் உள்ள ஊர்.

சுந்தரர் உயர்ந்த மாடங்கள் மலிந்த கொடுங்கோளூரைச் சென்றடைந்தார் (1712). இவ்வூர் மலை (சேர) நாட்டின் பழம்பதி. திருவஞ்சைக்களம் நிலவப் பெற்றது.

கோமன்னர் முடிசூடி வழிவழி ஆண்டு வரும் பெரிய தலைநகரம் ஆகும் (3748).

பாணனார் பத்திரனார், சங்கப் புலவராம் இறைவனின் திருமுகத்தை தலைமேற்கொண்டு பெரிய மதிலை உடைய கொடுங்கோளூரில் புகுந்தார்.

சேரமான் பெருமாளும் சுந்தரரும் ஆகிய இருவரும் வருதல் கேட்டு இவ்வூர் மக்கள் மகிழ்வுடன் வரவேற்றனர். அமைச்சர், சேனைப் பெருவெள்ளம், குதிரை வெள்ளம் யானை வெள்ளம், பிடி வெள்ளம், மேவும் சோற்று வெள்ளம் ஆகிய வெள்ளத்தைக் கண்டு கெடாத இன்ப வெள்ளத்தில் மூழ்கி இருவரும் கொடுங்கோளூர் அணைந்தார்கள் (3890).

இவ்வூரின் மதில் வாயில் அணிகளால் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. வீதிகளில் உயர்ந்த கோபுரங்கள், மாளிகைகள், நிலா முற்றங்கள், சாலைகள் திண்ணைகள், கோநகர், ஆடரங்குகள் என்பவற்றை மணிமாலைகள், கமுகு, தொங்க

விட்ட மாலைகள் முதலியவற்றால் அலங்கரிக்கப்பெற்று விளங்கியது (3891).

(சேரநாட்டில் சிறந்திருந்த முசிறி என்னும் பட்டினமும் இரு பாகங்களாகவே அமைந்திருந்தது அவற்றுள் ஊர் என்னும் பெயருடைய பாகம் கொடுங்கோளூர் எனவும், மற்றொரு பாகம் மகோதைப் பட்டினம் எனவும் வழங் கலாயின. த. ஞா. பே. 1976, ப. 35 ).

| கேரளத்தில் சாலக்குடி நிலையத்திலிருந்து தென் மேற்கே 15 கி. மீ. இல் உள்ளது.|

**கொடும்பாளூர்:**

தாமரை மலரில் தேனுண்ணும் வாவிகளில் குருகுகள் ஆணும், பெண்ணுமாய் இரையருந்திக் குளிர்ந்த வாடைக் காக மாதவிச் சோலையில் உறங்குகின்ற கோநாட்டுக் கொடி நகரம் கொடும்பாளூர் ஆகும் (4110).

இவ்வூர் இடங்கழிநாயனார் பிறந்தவூர் (4111).

(வேளிர்குலத்துடன் தொடர்புடையது. த. ஞா. பே. 1976, ப. 93).

| புதுக்கோட்டை நிலையத்திலிருந்து வடமேற்கே 40 கி. மீ. இல் உள்ளது. |

**கொடுமுடி:** (கறையூர், பாண்டிக் கொடுமுடி)

பாண்டிநாட்டில் உள்ள ஊர்.

காவிரியின் தென்கரையிலுள்ளது.

திருஞானசம்பந்தர் தம்முடன் வந்த அந்தணர்களுடன் இவ்வூரை அடைந்தார் (2235). இங்கு இறைவனை வணங்கிப் 'பெண்ணமர் மேனியினாரும்' என்ற பதிகம் பாடினார் (2236).

சுந்தரர் கொங்குநாட்டில் குராமலர்கள் அரும்பும்

சோலை உடைய பாண்டிக் கொடுமுடியை அடைந்தார். கறையூர்க் கொடுமுடி சென்றார் (3240). மற்றும் 'பற்றெனக்கின்றி' என்ற நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி வணங்கினார் (3241).

(கொடுமுடி பாண்டிக்கொடுமுடி என்றும் கொங்கு நாட்டிலுள்ள தலம் என்றும் கூறப்பெறும்.

இக்காலத்தில் கறையூர் என்னும் பெயர் மறைந்து கொடுமுடி என்னும் கோயிற் பெயரே ஊருக்கு அமைந்து விட்டது. த. ஊ. பே. 1976, ப. 213).

[கரூர் நிலையத்திலிருந்து வடமேற்கே 27 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**கொள்ளம்பூதூர்:** (திருக்கொள்ளம்பூதூர்)

சோழநாட்டில் காவிரியின் தென் கரையிலுள்ள ஊர். முள்ளிவாய்க் கரையை அடைந்த திருஞானசம்பந்தர் ஆற்று வெள்ளத்தில் சந்தனம், அகில், தேக்கு முதலிய மரங்களை உந்தி அலைத்துக் கொண்டு, மலர்க் குவியல்களில் வண்டொலிக்க அலைகள் மிகுந்து ஆள்கள் இயங்காதபடி ஆறு பெருகியதைக் கண்டார். அந்தத் துறையில் அணையும் ஓடத்தை நீர்வாழ்மக்கள் கரையில் நிறுத்தினர் (2795). அக்கரையில் உள்ள கொள்ளம்பூதூரை வணங்கச் சம்பந்தர் எண்ணி ஓடத்தின் கட்டவிழ்த்துத் திருத்தொண்டர் தம்மை ஏற்றி, நாவலமே கோலாகக் கொண்டு, 'கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்' என்ற ஈரடிமேல் வைப்புப் பாடினார் (2796). இறைவனருளால் ஓடம், கொள்ளம் பூதூரைச் சேரத் தொண்டருடன் சம்பந்தர் கோயில் வாயிலை அடைந்தார் (2797). கோபுரத்தை வணங்கி உள்புகுந்து வலங்கொண்டு இறைவனைப் பலவாறு போற்றி செய்தார் (2798).

[கொரடாச்சேரி நிலையத்திலிருந்து வடக்கே 5 கி. மீ. இல் உள்ளது.]

**கொள்ளிக்காடு:** (திருக்கொள்ளிக்காடு)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ்வூர். இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'நிணம்படு சுடலையின் நீறு' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2472).

(தீக்கடவுள் இறைவனைப் பூசித்ததால் இப்பெயர் பெற்றது.

இப்பொழுது தெற்குக்காடு என வழங்கும் த. ஊ. பே. 1976, ப. 159).

(திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 10 கி. மீ. இல் உள்ளது.)

# கோ

**கோகரணம்:** (திருக்கோகரணம்)

இது துளவ நாட்டில், மேற்குக் கடற்கரையில் உள்ள ஊர். இங்குள்ள இறைவன் திருமேனி பசுவின் காது போன்று உள் வளைந்துள்ளமையால் இப்பெயர் வந்ததென்பர்.

திருஞானசம்பந்தர் திருக்காளத்தி சென்ற போது அவ்விடத்திற்கு வடக்கிலும் மேற்கிலும் உள்ள நாடுகளில் அருந்தமிழ் வழக்கு நிகழாதது கண்டார். அதனால் மற்றப் பகுதிகள் சென்று பதிகம் பாடுவது போலப் பல பதிகங்களைப் பாடினார். அவற்றில் திருக்கோகரணமும் ஒன்று. 'என்று மரியான்' என்ற பதிகத்தால் இவ்வூர் இறைவனைப் பாடி வணங்கினார் (2925).

கயிலை யாத்திரை புறப்பட்ட திருநாவுக்கரசரும் திருத்தாண்டகம் பாடினார்.

(இலங்கையில் வணங்கும் பொருட்டுச் சிவனிடமிருந்து இராவணன் இலிங்கம் பெற்று வரும் போது, தேவர்கள்

வேண்ட, விநாயகர் அதனை வாங்கிக் கீழே வைத்தார். பின்னர் இராவணன் அதை எடுக்க முயன்றும் இயல வில்லை. எனவே அவ்விலிங்கம் இங்கேயே வேரூன்றியது என்பர் சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 151).

/சென்னை - பம்பாய் இருப்புப் பாதையால் கூப்ளி நிலையத்திலிருந்து தென்மேற்கே 168 கி. மீ. இல் உள்ளது./

**கோட்டூர்: (திருக்கோட்டூர்)**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது. இவ்வூர். திருஞானசம்பந்தர் செம்பொன் மதில் சூழ்ந்த இவ்வூரில் 'நீலமார்தரு கண்டனே' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2472).

/திருத்துறைப் பூண்டிச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**கோடி: (திருக்கோடி)**

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் இறுதியில் உள்ள ஊர். இது 'குழகர் கோயில்' எனவும் வழங்கப் பெறும்.

திருஞானசம்பந்தர், மேகங்கள் நிறைந்த மணற்குன்று கள் சூழ்ந்த இவ்வூரை அடைந்து தொண்டர்களுடன் இறைவனைத் தொழுதார் (2520). இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது).

சுந்தரர், சேரமான் பெருமாளுடன் இவ்வூர்க்குச் சென் றார். இங்குள்ள கோயிலின் அருகில் குடியிருக்கும் மக் களைக் காணாமல் உள்ளம் வாடிக் 'கடிதாய்க் கடற் காற்று' என்ற பதிகம் பாடிக் கண்ணீர் வடித்தார். இங் குக் காடுகாள் (கொற்றவை) இறைவனுடன் வீற்றிருக்கும் தன்மையையும் போற்றிப் பாடினார் (3836).

(தேவர்கள் பாற்கடல் கடைந்து கிடைத்த அமுதை

உண்டு எஞ்சியதை வாயுதேவன் கையில் கொடுத்தனர். அவன் அதை வானில் கொண்டு செல்லும் போது அது கீழே விழுந்து இவ்வூரில் சிவலிங்கமாய் அமைந்ததென்பர்.)

/திருத்துறைப்பூண்டிச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 46 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**கோடிகா:** (திருக்கோடிகா)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ளது இவ்வூர்.

இவ்வூரில் திருநாவுக்கரசர் ஆனைந்தும் ஆடும் சிவ பெருமான் மீது 'நெற்றி மேற் கண்ணினானே' என்ற திரு நேரிசையும், 'கண்டலஞ் சேர நெற்றி' என்ற திருத்தாண்டகமும் பாடி வணங்கினார் (1455).

இவ்வூரினை அடைந்த திருஞானசம்பந்தர் 'இன்று நன்று நாளை நன்று' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2190).

(மூன்று கோடி முனிவர்கள் பூசித்த தலம் என்பர்.)

/திருவாவடுதுறை நிலையத்திலிருந்து வடக்கே 4 கி. மீ. இல் உள்ளது./

**கோணமலை:** (திருக்கோணமலை, திரிகோணமலை)

ஈழ நாட்டில் உள்ள தலம் இது.

இராமேச்சரத்திலிருந்தவாறே திருஞானசம்பந்தர் 'நிரைசுழல்' என்ற பதிகம் பாடி இப்பதி இறைவனைப் பாடினார் (2788).

(மேருவின் சிகரங்களை அசைக்கவும், அசைக்காமல் காக்கவும் ஆதிசேடனும், வாயுதேவனும் தம்முள் மாறு பாடு கொண்டு மோதினர். வாயுவின் பலத்தால் வீழ்ந்த மூன்று பகுதிகளுள் இதுவும் ஒன்று. தி. தொ. பு. V. சு. உரை 1950, ப. 1127).

(திருக்கணாமலை எனவும் வழங்கும். மூவர் தேவாரம், திருப்பனந்தாள் பதிப்பு 1968, ப. 1063).

[ஈழ நாட்டில் கிழக்குக் கடற்கரையில் உள்ள நிலையம்.]

**கோத்திட்டை:** *காண்க:* **பரங்குன்றம்**

பாண்டி நாட்டு ஊர் இது.

மூவேந்தர்களுடன் இங்கு வந்த சுந்தரர் 'கோத்திட்டையம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3850).

**கோலக்கா:** (திருக்கோலக்கா)

சோழநாட்டில் உள்ள ஊர். காவிரியின் வடகரையிலுள்ளது. திருஞானசம்பந்தர் **காழியில்** அமர்ந்த இறைவனையும் இறைவியையும் வணங்கி அருள் பெற்றுத் திருக் கோலக்கா இறைஞ்ச விரும்பிச் சென்றார் (1998).

பெருகிய இரைச்சலிட்டு அலைகள் பொருந்திய காவிரி நீருடன் தேன் மலர்களையும், முத்தையும் சொரிய, மாலைகளைச் சூழ்ந்த வண்டுகள் பறந்து செல்ல, பெண்கள் குடைந்து குளிக்கும் வாவிகளுள்ள இவ்வூரை அடைந்து கோயில் வலம் செய்து (1999) இறைவனை 'மடையில் வாளைகள் பாய' என்ற பதிகத்தைக் கைகளால் அமைந்த தாளவொத்துச் செய்து சம்பந்தர் பாடினார் (2000). கையால் ஒத்தறுத்துப் பாடியது கண்ட இறைவன் அருள் புரிந்து சம்பந்தர் கையில் பொற்றாளம் அளித்தார் (2001). தம் கையில் தாளக்கருவி கண்டு முடிமேல் கொண்டு மனம் களிப்பப் பாடினார் (2002).

**காழியில்** திருஞானசம்பந்தருடன் தங்கிய திருநாவுக்கரசர் பொன்னி நாட்டுத் தலங்களைக் காணும் விருப்பத்தைத் தெரிவித்தார், அதைச் சம்பந்தரும் ஒப்புக் கொண்டு திருக்கோலக்காவில் பணிந்து விடை கொடுத்தார் (1454). இவ்வூரில் நாவுக்கரசர் பாடிய பதிகம் கிடைத்திலது.

சுந்தரர் திருவாரூர் செல்லும் விருப்பால் புறப்பட்டுத் திருக்கோலக்காவில் செந்தமிழ் மாலைகள் பாடினார் (260). (இப்போது அவை கிடைக்கவில்லை.)

பின்னொரு முறை சுந்தரர் இவ்வூரை அடைந்த போது இறைவன் எதிர்காட்சி கொடுத்தார் (3307). இறைவன் திரு ஞானசம்பந்தர்க்குத் திருத்தாளம் அளித்த சிறப்பைப் 'புற்றில் வாளர வார்த்த' என்ற பதிகத்தில் பாடினார் (3308).

(கோலம் என்பது இலந்தை மரத்தின் பெயர். எனவே கோலக்கா இலந்தைவனம் ஆகும். த. ஊ. பே. 1976, ப. 163).

/சீர்காழி நிலையத்திற்கு மேற்கே 1 கி.மீ. இல் உள்ளது/.

**கோவல்:** காண்க: **கோவலூர்**

இவ்வூரிலுள்ள வீரட்டக் கோயிலமர்ந்த இறைவனைத் திருஞானசம்பந்தர் 'படைகொள் கூற்றம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2866).

மெய்ப்பொருள் நாயனார் பிறந்த ஊர்.

/திருவண்ணாமலை நிலையத்திலிருந்து தென் கிழக்கில் 38 கி. மீ. இல் உள்ளது./

**கோவலூர்:** (**கோவல், திருக்கோவலூர்**)

நடு நாட்டில் உள்ள ஊர். சேதி நாட்டின் தலைநகரம். பெண்ணையாற்றின் தென்கரையில் அமைந்தது. அந்த காசுர சங்காரம் நிகழ்ந்த வீரட்டங்களில் ஒன்று. மெய்ப் பொருள் நாயனார் பிறந்த ஊர் (467). இவரைப் போரில் வெல்ல முடியாத முத்தநாதன் வெண்ணீறணிந்து சிவ வேடம் பூண்டு வஞ்சனையால் வெல்ல இவ்வூரைச் சேர்ந்தான் (472).

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவனை வணங்கிப் பாடினார் (1413) (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் கோவலூர் நகர் சேர்ந்து (2865), வீரட்டம் அமர்ந்த சிவனை வணங்கிப் 'படைகொள் கூற்றம்' எனற பதிகம் பாடி வணங்கினார்.

(இவ்வூரில் மேலூர், கீழூர் என இருபகுதிகள் உள்ளன. மேலூர், கோவலூர் என வழங்கப்படும். கீழூரில் கோயில் உளது.)

[திருவண்ணாமலை நிலையத்திற்குத் தென்கிழக்கே 38 கி. மீ. இல் உள்ளது.]

**கோழம்பம்:** (திருக்கோழம்பம்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது.

திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்து (2329) இறைவனை வணங்கி 'நீற்றானை நீள்சடை' என்ற பதிகம் பாடித் துதித்தார் (2330).

(இந்திரன் சாபத்தால் சந்தன் என்னும் வித்தியாதரன் குயிலுருவம் பெற்றான். அவன் இறைவனைப் பூசித்ததால் சாபம் நீங்கிய பதி இது என்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப.52. இதனைக் கொழம்பியம் என்பர்.)

[நரசிங்கன் பேட்டை நிலையத்திலிருந்து தென்கிழக்கே 3. கி. மீ. இல் உள்ளது.]

**கோளிலி:** (திருக்கோளிலி)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவனை 'நாளாய போகாமே' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2413).

பரவை மாளிகைக்கு நெல் மலையை எடுத்துச் செல்ல வேண்டிச் சுந்தரர் குண்டையூர்க்கு அருகிலுள்ள கோவிலுக்குச் சென்றார். இறைவன் மீது 'நீள நினைந்தடியேன்'

என்ற பதிகம் பாடி 'நெல்லிட ஆட்கள் வேண்டி' நினைந்து பாடினார் (3174).

(இந்நாளில் திருக்குவளை எனச் சிதைந்து வழங்குகிறது. த. ஊ. பே. 1976, ப. 269.)

/திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 15 கி. மீ. இல் உள்ளது./

# ச

**சக்கரப்பள்ளி:** (திருச்சக்கரப்பள்ளி)

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் செறிந்த சோலைகள் சூழ்ந்த தாமரைத் தண்டுகளின் முட்காடு எனப்படும் வாவிகள் மிக்க மருத நிலத்தில் சென்று திருச்சக்கரப்பள்ளியின் முன்பு எய்தினார் (2259). கோயிலுள் புகுந்து விருப்புடன் இறைவன் தாள் பணிந்து 'படையினார்' என்ற பதிகம் பாடினார் (2260).

(சக்கரவாகம் என்னும் நேமிப்புள் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றதென்பர். திருமால் வணங்கிச் சக்கரம் பெற்ற காரணமும் கூறுவர்.

இலிங்க புராணம், பிரமகைவர்த்த புராணம் போன்ற புராணங்கள் சிறப்பித்த ஏழு பதிகளுள் இதுவும் ஒன்று. தி.தொ.பு. IV சு. உரை 1949, ப. 443. சக்கரப்பள்ளி ஈசன் கோயில் கொண்ட இடம். த.ஊ.பே. 1976, ப.239)

/கும்பகோண நிலையத்திற்குத் தென்மேற்கில் 23 கி.மீ. இல் உள்ளது./

**சங்கமங்கை:** (திருச்சங்கமங்கை)

தொண்டை நாட்டில் உள்ள இவ்வூர் சாக்கிய நாயனார் பிறந்த ஊராகும் (3637).

[காஞ்சிபுரத்தை அடுத்துள்ளது]

**சண்பை:** காண்க:

கழுமலம், காழி, கொச்சைவயம், சிரபுரம், சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு' வேணுபுரம்.

திருஞானசம்பந்தர் பிறந்த ஊரின் பன்னிரு பெயர்களில் இதுவும் ஒன்று (1912).

சண்பை நகரில் (1924) திருஞானசம்பந்தர் பிறந்தருளிய சிறப்புடையது (1924). இது மூதூர் (209). இதன் வீதிகள் செல்வம் மிக்கன (1995).

வண்டுகள் ஒலிக்கின்ற (3088) பூம்பொழில் சூழ்ந்த நகராகும்.

அடியவர்க்குத் திருவமுது முதலான சிறப்பான செய்கை புரிவதால் சிவலோகம் என விளங்கியது (2009).

இவ்வூரின் அடிப்படையில், சம்பந்தர் பலவாறு போற்ற பெறுகிறார். சண்பையாளி (2811), சண்பை வள்ளலார் (2356), சண்பை அந்தணர் சூளாமணி (2445) எனப் போற்றப் பெறுகிறார். மேலும் அவர் இந்நகரின் அரசர் (2736) வேந்தர் (2469), மன்னர் (2022), புரவலர் (2634), காவலர் (2927), ஏந்தலார் (2244), நாதர் (2216) எனப் பலவகையில் புகழப் பெறுகிறார். (சமயத் தலைமகன் என்ற குறிப்பை இதனால் அறிய முடிகிறது.)

சண்பையைச் சுந்தரர் வலங்கொண்டு வணங்கினார் (3309). மணிமதில் சூழ்ந்த சண்பையாம் இவ்வூர்.

காழிக்குரிய பன்னிரு பெயர்களுள் இது பெரிதும்

ஆளப்படுவதுடன் சம்பந்தர் சிறப்பையும் இத்துடன் காட்டும்.

(கபிலமுனி சாபத்தால் தம் குலத்தில் உதித்த பிள்ளையாம் இருப்புலக்கையைப் பொடிசெய்து தூவிய தூள் சண்ணைப் புல்லாக முளைத்தது. அப்புல்லையே ஆயுதமாகக் கொண்டு போர் செய்து யாதவர் மடிந்தனர். அப்பழி தீரக் கண்ணனும் கபிலமுனியும் பூசித்ததால் இப்பெயர் பெற்றது. தி. தொ. பு. IV சு. உரை 1949, ப.24)

/சிதம்பரம் நிலையத்திற்குத் தெற்கே 17 கி.மீ. இல் உள்ள நிலையம்./

**சத்திமுற்றம்:**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

திருநாவுக்கரசர் இவ்வூரைச் சென்று சேர்ந்து (1457) இவ்வூர் இறைவனாம் சிவக்கொழுந்தைக் (1458) 'கோவாய் முடுகி' என்ற பதிகம் பாடினார். இங்கு இறைவன் இவரை 'நல்லூரில் வா வா' என்றருள் செய்தார் (1459).

இவ்வூர்ப்புறம் சார்ந்து திருஞானசம்பந்தர் (2288) இறைவி அருச்சித்து வணங்கிய சிவனைப் பணிந்தார் (2289) (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.).

(சிவனைப் பூசித்த சத்தி (இறைவி) தழுவி முத்தமிட்ட காரணத்தால் சத்திமுத்தம் எனப்பெற்றது. முத்தம் என்பது முற்றம் ஆயிற்று என்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 45)

/கும்பகோண நிலையத்திற்குத் தென்மேற்கில் 6 கி. மீ. இல் உள்ளது /

* **சதமகனகரம்:**

தேவர்களின் தலைவனாம் இந்திரனின் தலைநகரம் (553).

# சா

**சாத்தங் குடி:**

சோழநாட்டில் உள்ள ஊர்.

நாடு புகழும் தனிச் சிறப்புப் பெற்ற இவ்வூர்க்குச் சென்று திருஞானசம்பந்தர் பாடினார் (2471) (இங்குப் பாடிய பதிகம் கிடைக்கவில்லை.).

[திருவாரூர்ச் சந்திப்பிற்கு வடமேற்கில் 8 கி. மீ. இல் உள்ளது.]

**சாத்தமங்கை:** (திருச்சாத்தமங்கை, சாந்தை)

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ்வூர்.

இங்குள்ள கோயில் அயவந்தி எனப்படும்.

இங்குத் திருநீலநக்கநாயனார் பிறந்தார்.

பூத்த தாமரையின் பொகுட்டின்மேல் கயல்மீன்கள் துள்ளுகின்ற, செந்நெல் வயல் சூழ்ந்த சோழநாட்டில் மங்கலம் நிறைந்த மறையவர் வாழும் சிறப்புடைய முதற்பதி சாத்தமங்கை (1828).

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்றார் (1850). இங்கு நீலநக்கருடன் அன்பு மேலீட்டால் மீண்டும் வந்துறைந்தார் (1863).

நிறை செல்வச் சாத்தமங்கையில் சம்பந்தர் வரும் போது நீலநக்கர் வழி விளக்கி இடையே தோரணம், கமுகு வாழை, குடம், தூப தீபம் அமைத்து முறைமையில் வந்து எதிர்கொண்டார் (2358). இவ்வூரில் அயவந்திக் கோயி லில் அமர்ந்த இறைவனைத் 'திருமலர்க் கொன்றை மாலை' என்ற பதிகம் பாடிச் சம்பந்தர் நீதியால் நிகழ்கின்ற நீல நக்கர் தம் பெருஞ் சீர் திகழ வைத்து வணங்கினார் (2362).

இவ்வூர்க்குச் சென்ற திருநாவுக்கரசர் அயவந்திக் கோயிலமர்ந்த இறைவனை வணங்கி இன்புற்றார் (1505) (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.).

(இக்காலத்தில் செய்யாத்த மங்கை என வழங்கும் த. ஊ. பே. 1976, ப. 212)

[நன்னிலம் நிலையத்திலிருந்து தென்கிழக்கில் 13 கி.மீ. இல் உள்ளது.]

**சாத்தனூர்:**

இவ்வூர் சோழநாட்டில் உள்ளது.

ஒருசமயம் காவிரிக் கரையில் பசுக்குலங்கள் புலம்பு வதைத் திருமூலராம் முனிவர் கண்டார் (3573). அந்தணர் வாழும் சாத்தனூரில் ஆ மேய்க்கும் மூலன் என்பான் அப் பசுக்களை மேய்க்கும் போது பாம்பு கடித்து நிலத்தில் வீழ்ந்திறந்தான் (3574). அவன் உடம்பைச் சுற்றித் துயருற்று வருந்திய பசுக்களைக் கண்டு வருந்தி அவற்றைக் காக்க அவன் உடம்பில் திருமூலர் புகுந்தார். பின் அவற்றை நன்கு காத்து (3578) மாலையில் அப் பசுக்கள் சாத்தனூர் வந்து சேர அவற்றின் பின் போனார் (3579).

[மயிலாடுதுறைச் சந்திப்பிற்குத் தென்மேற்கில் 20 கி.மீ. இல் உள்ள திருவாவடுதுறையை ஒட்டித் தென்புறமாக உள்ளது.]

**சாந்தை:**

காண்க: சாத்தமங்கை

சாத்தமங்கை என்பதன் மரூஉப்பெயர். இங்குள்ள கோயில் அயவந்தி யாகும் (1505).

**சாய்க்காடு:** *(திருச்சாய்க்காடு, சாயாவனம்)*

*சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது இவ்வூர். இது காவிரிப்பூம்பட்டினத்தை அடுத்துள்ளதால் இதனைக் காவிரிப்பூம்பட்டினத்துச் சாய்க்காடு எனவும், புகார்ச் சாய்க்காடு எனவும் கூறுவர். இவ்வூர்க் கோயில் மாடக் கோயில்களுள் ஒன்று.*

*இயற்பகை நாயனார் தம் செயலைத் தடுக்க வந்த சுற்றத்தாரையெல்லாம் கொன்று சிவனாம் அருமறை முனிவருடன் தம்மனைவி செல்லுமாறு, காடு நீங்கும் வரை உடன்சென்றார் (428). மூவரும் சாய்க்காட்டின் பக்கம் சேர்ந்ததும் இயற்பகை நாயனாரை இறைவன் மீண்டு செல்லுமாறு கூறினார் (429).*

*திருஞானசம்பந்தர் இவ்வூரைத் தொழநினைத்து சென்றார் (2018). காவிரி சூழ் புகாரில் அருகிலுள்ள சாய்க் காட்டுக் கோயிலுள் சென்று 'மண்புகார் வான் புகுவர்' என்ற பதிகம் பாடி (2020) வணங்கினார்.*

*சங்க நிரையாம் வாத்தியத்துடன் அலை நுரைத் திவலையாம் தூபத்தையும், நவமணியாம் தீபத்தையும், முத்துக்களாம் பூவையும் அலைகளாகிய கைகளால் கொண்டு கடல் வழிபாடு செய்யும் திருச்சாய்க்காட்டினைச் சுந்தரர் அடைந்தார் (3301). இங்குப் பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (3302) (இப்பதிகம் கிடைத்திலது.).*

*[சீர்காழி நிலையத்திற்குத் தென்கிழக்கே 15 கி.மீ. இல் உள்ளது.]*

# சி

**சிரபுரம்:** *காண்க:* கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.

திருஞானசம்பந்தர் பிறந்த ஊரின் பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று (1912). இப்பெயர் பெரிய புராணத்தில் 16 இடங்களில் காணப் பெறுகிறது.

சேறணிந்த வயல் பழனக் கழனி சூழ்ந்தது இவ்வூர் (2783) எனப் புகழப் பெறும்.

இவ்வூரில் பிறந்ததால் சம்பந்தரைச் சிரபுரச் சிறுவர் (1952), பிள்ளையார் (2159), செல்வர் (2791), புரவலர் (3022) எனப் பலவாறு போற்றுவர்.

(தேவருடன் அமுதுண்ண வேறுருக்கொண்டு வந்திருந்த சிலம்பன் (சயிங்கேயன்) எனும் அசுரனைச் சூரியன் காட்ட அவன் தலையைத் திருமால் சட்டுவத்தால் வெட்டினார். அவன் சிரம் இராகுவாய் நின்று பூசித்ததால் பெற்றபெயர் தி. தொ. பு. IV சு. உரை: 1949, ப. 23)

[சிதம்பரம் நிலையத்திலிருந்து தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது].

**சிராப்பள்ளி:** (திருச்சிராப்பள்ளி)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ளது.

சிராப்பள்ளி மலை மீதுள்ள இறைவனை வணங்கிய திருநாவுக்கரசர் 'மட்டுவார் குழலாளொடு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (1567).

திருஞானசம்பந்தர் இம்மலையை அடைந்தார் (2241). செம்மணிகளை வாரிக் கொண்டு அருவி பாயும் இம்மலையில் எழுந்துள்ள இறைவன் மீது 'நன்றுடையானை' என்ற பதிகம் பாடி வணங்கினார்.

(இங்குத் திரிசிரன் என்பவன் இறைவனை வணங்கியதால் இவ்வூர்க்கு இப்பெயர் அமைந்தது. திரு என்னும் அடையைத் திரியாகத் திரித்தனர். அதனால் திருச்சிராப்பள்ளி, திரிசிராப்பள்ளி என்றும், திரிசிரபுரம் என்றும் வழங்கலாயிற்று. த. ஊ. பே. 1976, ப. 287.)

வாயுவுக்கும் ஆதிசேடனாம் பாம்பிறைவனுக்கும் நடந்த போரில் வாயு தகர்த்த மேருவின் மூன்று சிகரங்களுள் இதுவும் ஒன்று என்பர்.

வணிகப் பெண் கருவுயிர்க்கும் போது இறைவனே தாய் வடிவில் வந்து பிள்ளைப்பேற்றைப் பார்த்ததால் இவ்விறைவனைத் தாயுமானார் என உரைப்பர் (சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 37). சிரகிரி எனவும் வழங்கப் பெற்றது. இறுதியில் திரிசிரபுரம் ஆயிற்று (த. ஊ. பே. 1976, ப. 235). சிராப்பள்ளிக் குன்றத்திலும் சமண முனிவர்கள் இருந்ததாகத் தெரிகிறது. மு. நூ. ப. 337).

/புகைவண்டிச் சந்திப்பு/

**சிவபுரம்: (திருச்சிவபுரம்)**

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர். வலிய, வெண்பன்றி உருவில் செங்கண்மால் பணியும் சிவபுரத்தை அடைந்து திருஞானசம்பந்தர் 'புலம் வரி', 'இன்குரல் இசை கெழுமியாழ்', 'கலைமலி யகல்' என்று தொடங்கும் பதிகங்கள் பாடி வணங்கினார் (2302). சுந்தரர் இவ்வூர் இறைவனை வணங்கினார் (3220).

(சுவேத வராக கற்பத்தில் கடலுள் மூழ்கிய உலகைத் தம் கொம்பால் ஏந்தி நிலை நாட்டியத் திருமால் இங்கு இறைவனை வழிபட்டார் என்பர்.

இதற்குச் சண்பகவனம் என்ற பெயருமுள்ளது).

/கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கில் 5 கி. மீ. இல் உள்ளது./

## சீ

**சீகாழி:** *காண்க:* கழுமலம், காழி, கொச்சையம், சண்பை, தோணி

**புரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணு புரம்.**

*திருஞானசம்பந்தர் பிறந்த ஊர் (1854, 1864). இன்று சீர்காழி என வழங்கப் பெறுகிறது.*

*(ஸ்ரீ என்ற வடசொல்லே 'சீ' யாயிற்றென்பர் சிலர். சீர்காழி என்பதே சீ காழி யென வழங்கலாயிற்றென்பர் வேறு சிலர். தேவாரப் பாசுரத்தில் 'சீர் திகழ் காழி என்று குறிக்கப்பட்டிருத்தல் பின்னவர் கொள்கைக்கு ஆதார மாகும். த. ஊ. பே. 1976, ப. 291.)*

*[சிதம்பர நிலையத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது.]*

## சு

**சுழியல்:** *(திருச்சுழியல்)*

*பாண்டி நாட்டுப் பதிகளுள் ஒன்று.*

*திருஞானசம்பந்தர் இவ்வூர் சென்று இறைவனைப் போற்றி வணங்கினார் (2784).*

*(இவ்வூரில் இவர் பாடிய பதிகம் கிடைத்திலது).*

*சுந்தரர் சேரமான் பெருமாளுடன் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கி 'ஊனாய் உயிர்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3858). அன்று இரவில் சுந்தரர் கனவில் இறைவன் காளை வடிவில் கையில் பொற்செண்டும், திருமுடியில் சுழியமும் விளங்க எங்குமிலாத் திருவேடம் காட்டிக் (3859) 'கானப்பேர் யாம் இருப்பது' என்று கூறி மறைந்தார். தாம் கண்ட கனவைச் சேரமான் பெருமாளுக்குக் கூறிய சுந்தரர் இவ்வூர் இறைவனை வணங்கிப் புறப்பட்டார் (3861).*

/விருதுநகர்ச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 26 கி. மீ. இல் உள்ளது./

# செ

**செங்காட்டங்குடி:** (திருச்செங்காட்டங்குடி)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது. இவ்வூர் சிவன் மகிழ்ந்துறையும் ஊர். வயலில் கருங்கண் கடைசியர் களியாடல் காட்டும் சோழ நாட்டில் வளம் பொருந்திய ஊர் (3660).

சிறுத்தொண்ட நாயனார் பிறந்த ஊர் (3661). அவர்க்குச் சீராள தேவன் என்ற மகன் பிறக்க அக்குழந்தைக்குச் சிறப்புமிக்க நெய்யாடல் விழாவை இவ்வூர் மக்கள் கொண்டாடினர் (3677).

திருஞானசம்பந்தரைச் சிறுத்தொண்டர் எதிரேற்று மனமகிழத் தம் ஊரில் அழைத்து வந்தார் (2366). திருத்தொண்டராம் அவர் நண்பினை விரும்பிய சம்பந்தர் அவ்வூர்க் கோவிலாம் கணபதீச்சரத்துள் எல்லாப் பொருளையும் துறந்து பிச்சை ஏற்றுண்ணும் மெய்த்தொண்டர்களுடன் புகுந்தார் (2367). கோயில் வலங்கொண்டு சிவனடி வீழ்ந்து சிறுத்தொண்டர் தொழ இருநத தன்மை போற்றிப் 'பைங்கோட்டு மலர்ப்புன்னை' என்ற பதிகமும் 'நறை கொண்ட மலர்' என்ற பதிகமும் பாடினார். பின்னர்ச் சிறுத்தொண்டர் மனையில் சென்று அவர் மனம் மகிழ விரும்பி இருந்தருளினார் (2369).

அங்கிருந்து திருமருகல் சென்று பாம்பு தீண்டிய வணிகனைப் பதிகம் பாடி உயிர்த்தெழச் செய்தார் சம்பந்தர் (2380). அவ்வூரில் தங்கியிருந்த போது சிறுத்தொண்டர் மறுபடியும் வேண்ட மீண்டும் செங்காட்டங்குடி செல்ல நினைத்த போது திருமருகலிலுள்ள இறைவன், கணபதீச்சரத்தில் மேவும் காட்சி கொடுத்தருளினார் (2383).

உடனே 'அங்கமும் வேதமும்' என்ற பதிகத்தில் சம்பந்தர் கணபதியீச்சரவிருப்பினைப் பாடிச் சிறுத்தொண்டருடன் செங்காட்டங்குடி சென்று சில நாள் தங்கியிருந்தார் (2386).

இவ்வாறு சிறுத்தொண்டர் செய்யும் தொண்டின் மெய்த் தன்மையின் அன்பை நுகர்ந்தருளச் சிவபெருமான் வயிரவர் வேடத்தில் (3684) திருக்கயிலையிலிருந்து 'தமிழ் நாட்டுச் செங்காட்டங்குடி சேர்ந்தார் (3694). சிவபெருமான் சிறுத்தொண்டரிடம் சீராளனைப் பிள்ளைக்கறியாகத் தரக் கேட்டார். சிறுத்தொண்டர் தன் மகனைக் கறியமுதாக அளித்த பின் இறைவன் மேலும் பல சோதனைகள் செய்து அடியாரின் அன்புத் திறனைக் கண்டு மகிழ்ந்து உமை, முருகன் ஆகியோருடன் இவ்வூரில் காட்சி தந்து அருளினார் (3743).

(விநாயகர் கயமுகாசுரனை அழித்தார். அப்போது அவன் குருதி வெள்ளம் பரவிய காடாக இருந்ததால் இவ்வூர்க்குச் செங்காடு எனப் பெயர் வந்தது என்பர். அவ்வசுரனைக் கொன்ற பாவம் தீர இங்கு விநாயகர் இறைவனை வணங்கியதால் இவ்வூர்க் கோயிலுக்குக் கணபதீச்சரம் எனப் பெயர் வந்தது என்பர்.

சிறுத்தொண்டர் பல்லவ மன்னர் சேனையுடன் சென்று வடபுல வாதாவியை வென்று அங்கிருந்து கொண்டு வந்து வைத்த விநாயகர் வடிவு இவ்வூரில் 'வாதாபி கணபதி என்ற பெயர் பெற்று மக்களால் வணங்கப் பெறும் தெய்வ உருவாக உள்ளது.

செந்நிறக் காட்டின் இடையே அமைந்த குடியிருப்பு, செங்காட்டங்குடி என்று பெயர் பெற்றது போலும். த. ஊ. பே. 1976, ப. 68).

/திருவாரூர்ச் சந்திப்பிற்கு வடகிழக்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**செங்குன்றூர்[1] - (திருச்செங்குன்றூர்)**

சேரர்க்குரிய மலைநாட்டில் உள்ள ஊர்.

விறன்மிண்ட நாயனார் பிறந்த இடம். கடலில் தோன்றும் முத்தும், கரும்பில் தோன்றும் முத்தும், மூங்கிலில் விளையும் முத்தும், யானைக் கொம்பில் பிறக்கும் முத்தும் எனும் பல முத்துக்களை வெண்முத்து நகையாராம் பெண்கள் தெரிந்தெடுத்து முறையாகக் கோக்கும் சிறந்த மூதூர் செங்குன்றூர் (492).

இது உலகில் புகழ்மிக்க ஊர். அன்னம் பயிலும் வயலில் உழவு வளம் மிக்கது. உண்மை ஆய்ந்த மறை வழி நடந்து வரும் தூய குடித் திறத்தால் தலைசிறந்தோரும் குலத்திலே மறை கூறும் மரபில் பெரியோர்களும் வாழுமிடம் (493).

/கேரளாவில் கோட்டயத்திற்குத் தென்கிழக்கே 36 கி. மீ. இல் உள்ளது./

**செங்குன்றூர்[2]**

கொங்கு நாட்டில் உள்ளது இவ்வூர்.

'கொடிமாடச் செங்குன்றூர்' எனச் சிறப்புப் பெறும்.

மேகம் பயிலும் நீண்ட மதில்களுடைய இவ்வூரைத் திருஞானசம்பந்தர் அடைந்தார் (2222). இந்நகர் வாழ்வாரும் அடியவரும் தோரணம் முதலிய பல அணிகள் அமைத்துச் சம்பந்தர் முன் வந்து பணிந்து கோயிலுக்கு அழைத்துச் சென்றனர் (2223). அவர் 'வெந்த வெண்ணீறு' என்ற பதிகம் பாடி இவ்வூரில் இறைவனைத் தொழுதார் (2224).

இங்கிருந்து அருகிலுள்ள பலகோயில்களைப் பணிந்து திருநணாவினை வணங்கி மறுபடியும் செங்குன்றூர் வந்தார் (2225). இங்குச் சம்பந்தர் சிலநாள் தங்கிய போது மலைகளும் குளிரும்படி பனிப்பருவம் வந்தது (2226). அவருடன் வந்த பரிசனம் பலநாள் அந்நாட்டில் தங்கியதால் குளிர்ச் சுரநோய் வருவது போல் உள்ளதை (2230) உரைத்தனர். சம்பந்தர் இறைவனை 'அவ்வினைக்கிவ் வினையாம்' என்ற

பதிகம்பாடிச் 'சுரம் தீண்டாது' எனக் கூறினார் (2233). அந்நாளில் அத்தீய பிணி தீர்ந்தது (2234). பின்னர்ச் சில நாள் திருச்செங்குன்றூரில் சம்பந்தர் தங்கியிருந்தார் (2235).

(திருச்செங்கோடு என்றும் வழங்கப் பெறும்.

செங்குன்றில் உள்ள சிகரம் செங்கோடு என்னும் பெயர் பெற்றது. த. ஊ. பே. 1976, ப. 276)

/சங்ககிரிதுர்க்க நிலையத்திலிருந்து தென்கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது./

**செந்துறை:**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர். திருஞானசம்பந்தர் இவ்வூர்க்கு வந்து கோயிலில் இறைவனை வணங்கினார் (2240). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது).

/திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிற்கு மேற்கே 10 கி. மீ இல் உள்ளது./

**செம்பொன்பள்ளி: (திருச்செம்பொன்பள்ளி, செம்பொனார்கோயில்**

சோழநாட்டில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவன் மீது 'ஊனினுள்' என்ற நேரிசையும், 'கானறாத' என்ற திருக் குறுந்தொகையும் பாடி வழிபட்டார் (1455).

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று 'மருவார் குழலி' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2338).

சுந்தரர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கி னார் (3303).

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து கிழக்கே 13 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**செருவிலிபுத்தூர்:** காண்க: அரிசிற்கரைப்புத்தூர்.

புகழ்த்துணை நாயனார் பிறந்த ஊர் (4127).

[கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

# சே

**சேது:**

இராமேச்சுரத்தில் உள்ள கடற்கரை (2787).

இலங்கை செல்ல இராமன் கட்டிய அணையால் பெற்ற பெயர்.

(சேதுக்கரை எனவும் அழைப்பர்.)

**சேய்ஞலூர்:**

சோழநாட்டில் மண்ணியாற்றில் தென்கரையில் உள்ளது இவ்வூர். முன்னர்க் கிரவுஞ்சமலையைப் பிளந்து கூரிய வேல் நிலை காட்டித் தேவர் பகை வென்ற முருகன் கணையால் அளிக்கப்பெற்ற மறையோர்கள் வாழும் மூதூர். செல்வத்தில் சிறந்த ஊர் (1206). மறையோர்களும் மறைச் சிறுவர்களும் மடங்களில் வேதம் ஓதுவர் (1208). யாகங்களில் அவி உணவு உண்ண வரும் தேவர்களின் ஊர்திகள் இருப்பிடம் போலவும், கட்டுத்தறி போலவும் யூபத் தம்பங்கள் உள்ளன (1209). பசுக்கள் பால் ஒழுகிச் செல்லும் தெருக்கள், வேத மாணவர்கள் சமிதை கொண்டு செல்லும் தெருக்கள், குளித்துப் பின் மறையோர் மகளிர் புகும் தெருக்கள் என நீண்ட பல தெருக்கள் இங்கு உள்ளன (1210).

இவ்வூர் ஆற்றங்கரையில் யாக சாலைகள் உள்ளன. தேவர் ஏறும் விமானங்கள் நெருங்கி உள்ளன (1211).

மடையில் கழுநீர்ப் பூக்களும், வயலில் நெல்லும், கமுக மரத்தில் பூம்பாளைகளும், தாமரையில் துயிலும் கயல் மீன்களும், வழியில் படர்ந்த முல்லையும், காஞ்சிமரமும் இங்குள்ளன (1212). அனபாய சோழன் தோன்றிய பழைய மரபில் முடி சூட்டும் தன்மை நிலவும் ஐந்து ஊர் களில் இதுவும் ஒன்று (1215). பண்ணிசை, பாலின் சுவை, கண்ணின் பயனாம் ஒளி, கருத்தின் பயனாம் ஐந்தெழுத்து, விண்ணின் பயனாம் மழை, வேதப் பயனாம் சைவம் போல மண்ணின் பயனாம் இப்பதியின் பெருமை அளவற்ற தாகும் (1214).

இங்குச் சண்டீச நாயனார் பிறந்தார் (1217). பிறந்த ஊரின் பெருமை கருதி இவரைச் சேய்ஞலூர்ப் பிள்ளையார் என அழைப்பர் (1242, 1263.)

வயலில் சங்குகள் முத்து ஈனும் இவ்வூர்க்குத் திருஞான சம்பந்தர் வந்தார் (2140). இவ்வூர் மறையவர் ஊரை அலங்கரித்து, மறை ஒலிவிளங்க, எதிர் கொண்டனர் (2141). சண்டீசர் பிறந்த இடம் இது எனச் சம்பந்தர் முத்துச்சிவிகையிலிருந்து இறங்கி எதிர் வணங்கி எய்தினார் (2142). ாயிலுள் சென்று இறைவனைப் பணிந்து 'நூலடைந்த கொள்கையாலே' என்ற பதிகத்தில் சண்டீசர் தம் தந்தை தாளைத் தடிந்து அதனால் சிவன் மகனாகிய பரிசு பெற்றதைப் பாடிப் பரவினார் (2146).

(இந்நாளில் சேங்கனூர் என்று வழங்கும். த. ஊ. பே. 1976, ப. 30)

[கும்பகோண நிலையத்திற்கு வடகிழக்கில் 15 கி. மீ. இல் உள்ளது.]

**சேலூர்:** (திருச்சேலூர்)

சோழ நாட்டில் உள்ள ஊர்.

இங்குத் திருஞானசம்பந்தர் சென்று இறைவனை வணங்கினார் (2262). (இங்குப் பாடிய பதிகம் கிடைத் திலது).

*[தஞ்சாவூர்ச் சந்திப்பிற்கு வடகிழக்கே 9 கி. மீ. இல் உள்ளது.]*

**சேறை: (திருச்சேறை)**

*சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் இவ்வூர் உள்ளது.*

*இப்பெயரில் இருவூர்களிருப்பதால் இதனைத் தென்* **திருச்சேறை** *எனக் குறிப்பர். இவ்வூர்க்குச் சென்று திருநாவுக்கரசர் இறைவன் மேல் 'பெருந்திரு இமவான்' என்ற திருநேரிசையும், 'பூரியாவரும்' என்ற திருக்குறுந் தொகையும் பாடி வணங்கினார் (1481).*

*திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவன் மீது 'முறியுறு நிறமல்கு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2301).*

(*திருச்சேறைப்பதியில் அமைந்த கோயில் செந்நெறி என்று பெயர் பெற்றது. உடையார் கோயில் ஆயிற்று.* **த. ஞா. பே. 1976, ப. 2196**).

*[கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கே 15 கி. மீ. இல் உள்ளது.]*

# சோ

**சோற்றுத்துறை: (திருச்சோற்றுத்துறை)**

*சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது இவ்வூர். ஏழு பெருந் தலங்களில் இதுவும் ஒன்று.*

*திருநாவுக்கரசர் இவ்வூர் சென்று இறைவன் மீது 'பொய்விரா மேனி' என்ற நேரிசையும், 'காலை எழுந்து' எனும் திருவிருத்தமும், 'கொல்லை ஏற்றினர்' எனும் திருக் குறுந்தொகையும், 'மூத்தவனாய்' எனும் திருத்தாண்டகமும் பாடி வழிபட்டார் (1477).*

பொன்னி ஆற்றின் அலைகள் வலம்வரும் சோற்றுத் துறையைத் திருஞானசம்பந்தர் தொழச் சென்றார் (2251). இங்குள்ள சிவன் கோயிலை வலம் கொண்டு சிவன் மீது 'செப்ப நெஞ்சே' என்ற பதிகம் பாடி (2252) வணங்கினார் (2253).

சுந்தரர் இவ்வூர்க் கோயிலை வலம்செய்து (3223) 'அழனீ ரொழிகி யனைய' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3224). (சோற்றுத்துறை, சாதத்துறையாயிற்று. இன்று திருச்சாத்துறை என்று அது வழங்கப்படுகிறது. த. ஊ. பே. 1976, ப. 186)

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

# ஞா

**ஞாயிறு:**

தொண்டை நாட்டில் உள்ள ஊர்.

சங்கிலி அம்மையார் பிறந்த இடம் (3361).

[சென்னைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 20 கி. மீ. இல் உள்ளது.]

# த

**தக்கோலம்:** காண்க: **ஊறல்**

தொண்டைநாட்டுப் பதிகளில் இதுவும் ஒன்று.

திருஞானசம்பந்தர் இவ்வூரைச் சேர்ந்தபின் 'மாறிலவுணரரணம்' என்றபதிகம் பாடி வணங்கினார் (2903).

[அரக்கோணம் சந்திப்பிலிருந்து தெற்கே 6 கி. மீ. இல் உள்ளது.]

**தஞ்சாவூர்:**

சோழநாட்டில் வளப்பாற்றின் வடகரையில் உள்ளது இவ்வூர்.

தெளிந்த நீரலைகள் மதகுகள் தோறும் சேல், கயல் ஆகிய மீன்களையும், பல மணிகளையும் கொண்டு வருகின்ற காவிரியாறு பாயும் சோழநாட்டில் மருகல் நாட்டிற்குரிய தஞ்சாவூர் என்னும் ஊர் அகத்திலும் புறத்திலும் குல ஒழுக்கத்தில் தவறாத ஒருமை நெறி கொள்ளும் இயல்புடைய பழங்குடி முதலோர் நிறைந்த செல்வம் மிக்க சிறந்த ஊர் ஆகும் (4120). இவ்வூரில் செருத்துணை நாயனார் பிறந்தார் (4121).

(இது கீழைத் தஞ்சாவூர் என அழைக்கப்பெறும்)

[திருவாரூர்ச் சந்திப்பிற்கு வடகிழக்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**தண்டலை நீணெறி:**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

கோச்செங்கட் சோழன் அமைத்த மாடக் கோயில்களுள் (நீணெறி ஆலயம் த. ஊ. பே. 1976, ப. 196) இவ்வூர்க் கோயிலும் ஒன்று.

திருஞானசம்பந்தர் இவ்வூரில் உள்ள இறைவன் மீது 'விரும்பும் திங்களும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2473).

(கூர்மாவதாரத்தில் கடலைக் கலக்கிச் செருக்கித் திரிந்த திருமாலின் செருக்கை நீக்கி அந்த ஆமை ஓட்டினைச் சிவன் மார்பிலணிந்த ஊர் இது என்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், 1977, ப. 91).

*[திருத்துறைப்பூண்டிச் சந்திப்பிலிருந்து வடக்கே 4 கி.மீ. இல் உள்ளது.]*

**தருமபுரம்:**

*சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது.*

*மணங்கமழ் மலர் பூத்த வயல் நிறைந்த நாட்டில் பெரிய ஊர்களை அடைந்து வணங்கிப் பின் கொடி மதில் சூழ் **தருமபுரத்தைத்** திருஞானசம்பந்தர் அடைந்தார்* **(2341).**

*இவ்வூர், திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாய் பிறந்த இடம். அவருடைய சுற்றத்தார் வந்து சம்பந்தர் அடி வணங்கினர். பாணனார் அவர்களுக்குத் தம் நிகழ்ச்சி யைக் கூறிச் சம்பந்தர் அருளிய பதிகங்களை யாழிலிட்டுப் பயிற்றும் பேறு கூறினார் (2342). சுற்றத்தார் அது கேட்டுப் பதிகத்தை அவர் தம் யாழில் வாசித்ததால் உலகில் சம்பந்தர் பதிகங்களின் இசை நிகழ்வதாகக் கூறி னர் (2343). திருப்பதிக இசை யாழின் அளவுட்படாத வகையை யாவரும் உணரும்படி ஒரு பதிகம் பாடியருளத் திருஞானசம்பந்தரைப் பாணனார் வேண்டினார் (2344). அது கேட்டு நாத இசை முயற்சிகளால் அடங்காத வகை காட்ட 'மாதர் மடப்பிடி' என்ற யாழ்முரிப் பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2345). அதனைப் பாணனா ரால் யாழில் அமைத்திட இயலவில்லை (2346). அதனால் யாழினை முரிக்க முனைந்த போது, சம்பந்தர் பெரும் பாணரைத் தடுத்து இறைவன் அருளால் மறுபடியும் வாசிக்குமாறு கூற அவர் அதைத் தொழுது ஏற்றார் (2350).*

*(பாண்டவருள் தருமன் இறைவனை வழிபட்டதால் இப்பெயர் வந்தது என்பர்.)*

*[காரைக்கால் நிலையத்திலிருந்து மேற்கே 1 கி.மீ. இல் உள்ளது.]*

**தலைசை:** (திருத்தலைச்சங்காடு)

சோழ நாட்டில் உள்ள ஊர்.

கோச்செங்கண்ணன் அமைத்த மாடக் கோயிலுள் ஒன்று இவ்வூர்க் கோயில்.

இவ்வூர் அந்தணர்கள் திருஞானசம்பந்தரை அழைத்துச் செல்ல வந்தனர் (2015). பந்தரிட்டுக் கமுகும், வாழையும் நட்டுப் பூமாலை தொங்கவிட்டுப் பூரண கும்பம் ஏந்திக் கடைவீதிகளை அலங்கரித்துச் சம்பந்தரை வண்டுகள் சூழும் மலர்ச்சோலை சூழ்ந்த வளமிக்க தம் ஊரில் கொண்டு புகுந்தனர் (2016).

அவ்வூர்ப் பெருந் திருக்கோயில் அடைந்து அழகிய வலம்புரிச் சங்கின் முறை நெறியில் அமைக்கப்பட்ட அக் கோயிலில் இறைவன் சார்ந்ததை அருளிச் செய்தார் (2017).

/ஆக்கூர் நிலையத்திற்கு வடகிழக்கே 2½ கி. மீ. இல் உள்ளது./

**தலையாலங்காடு:** (திருத்தலையாலங்காடு)

சோழநாட்டில் சோழ சூடாமணி ஆற்றின் வடகரையில் உள்ளது இவ்வூர். நீர் சூழ்ந்த தலையாலங்காட்டிற்குத் திருஞானசம்பந்தர் வந்து இறைவனை வணங்கினார் (2471). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

(தலையுடையவர் கோயிற்பத்து என்னும் பெயரால் அப்பதி வழங்கும். தலைச்செங்காடு எனவும் வழங்கும்... தலைச்சங்காடு என்பது சாசனத்தால் விளங்கும். த. ஊ. பே. 1976, பக். 158, 164)

/திருவாரூர் நிலையத்திற்கு வடமேற்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**தலையூர்:** (திருத்தலையூர்)

நீர் மலர்த்தடங்களிலும், பெருவயல்களிலும் புகும் சோழநாட்டுக் குலத்தில் ஓங்கிய குறைவிலா நிறைகுடி நெருங்கி, ஊர்களில் உயர்ந்து விளங்கும் நன்மை உடையது திருத்தலையூர் (1031).

மறையவர் வேள்வித்தீ, மழையை அளிக்கும். சோலைகள் தேனை அளிக்கும். சிவனுக்கு ஆனினங்கள், ஐந்து பொருள்களை அளிக்கும். தருமமும் நீதியும் சால்பும் என்பவற்றை இவ்வூர் அளிக்கும் (1032). இவ்வூரில் உத்திர பசுபதி நாயனார் பிறந்தார் (1033).

(முசிறிக்கும் துறையூர்க்கும் இடைப்பட்ட வழியில் இவ்வூர் இருப்பதாகச் சிலர் கருதுவர். தி. தொ. பு. II, சு. உரை 1940, ப. 1353).

**தவத்துறை:**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

இங்குத் திருஞானசம்பந்தர் சென்று இறைவன் மீது தமிழ்மாலை பாடி வணங்கினார் (2245). (இப்பதிகம் கிடைத்திலது.)

(இதனை எழுவர் தவத்துறை என்பர். இப்போது லால்குடி என அழைப்பர். 'தவப்பள்ளியும், தவத்துறையும் ஒன்றெனின் இப்போது லால்குடி என வழங்கும் ஊரிலுள்ள சிவாலயம் அதுவாகும். த. ஊ. பே. 1976, ப. 240)

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 26 கி. மீ. இல் உள்ளது.]

# தி

**திங்களூர்:**

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

குளிர்ந்த நீர் வயல் சூழ்ந்தது (1782) இவ்வூர். அப்பூதி அடிகள் பிறந்த ஊர் ஆகும் (1465). திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்றார். அப்பூதியடிகள் தம் மக்களுக்கும், சாலை, கிணறு, குளம், தண்ணீர்ப்பந்தல் முதலியவற்றிற் கும் திருநாவுக்கரசு என்ற பெயரிட்டிருந்தார். அதை அறிந்து அவர் வீட்டிற்குத் திருநாவுக்கரசர் சென்றார் (1466). அவர் வீட்டில் அமுது செய்ய இசைந்தார் (1467). அப்பூதியடிகளின் மூத்தபிள்ளை அடியாருண்ண வாழைக் குருத்தரியும் போது பாம்பு கடித்து இறக்க, அவன் உடம்பை அப்பர் அறியாமல் மறைத்து வைத்து உணவுண்ண அவரை அப்பூதியடிகள் அழைத்தார் (1472). அப்போது இறை வன் அருளால் அதனை அறிந்து, 'ஒன்று கொலாம்' என்ற பதிகம் பாடி விடம் தீர்த்தார் (1473). பின், அமுதுண்டு திங்களூரிலிருந்து திருமறையோர் பின் செல்லத் திருநாவுக் கரசர் புறப்பட்டார் (1475).

(சந்திரனோடு தொடர்புடையது போலும் (த. ஊ. பே. 1976, ப. 273)

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து 12½ கி. மீ. இல் உள்ளது].

**திருத்துறையூர்: (துறையூர்)**

இவ்வூர் நடுநாட்டில் பெண்ணையாற்றிற்கு வடகரை யில் உள்ளது.

இங்குச் சென்ற சுந்தரர் பவநெறிக்கு விலக்காக 'மலையாரருவித்திரள்' என்ற பதிகம் பாடித் தம்மைத் தடுத்தாண்டிட இறைவனை வேண்டினார் (225). சுந்தரர் வேண்டியபடிப் புலன்கள் தத்தம் வழியில் செல்லாமல் தவ நெறியில் இடைவிடாமல் செல்லும் நெறியை இறைவன் அருளினார். பூ நிறைந்த நறுஞ்சோலைத் **திருத்துறையூர்** அமர்ந்த சிவனின் திருப்பாத மலரை மனத்தில் கொண்டு போற்றிசைத்தார் (226). இவ்வூரைப் பணிந்து புறப்பட் டார் (227).

(இவ்வூர் **திருத்தலூர்** எனவும், **திருத்தளூர்** எனவும் வழங்கப்பெறும்.)

[விழுப்புரம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 14 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**திருந்துதேவன்குடி:**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது இவ்வூர்.

அரும்புகள் நிறைந்த சோலை நிறைந்தது (2194). திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்தார் (2192). அவர் சிவன் கோயில் அடைந்து, காதலால் வணங்கிப் போற்றி 'மருந்து வேண்டில் இவை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2193).

(இவ்வூர் இறைவனை நண்டு பூசித்தது என்பர். இறைவன் திருமேனியின் முடியில் நண்டுருவம் காணப்படுகிறது. இப்போது இவ்வூர் இல்லை. சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 20-21.

இந்நாளில் வேப்பத்தூர் என வழங்கும் திருந்துதேவன் குடி. கோயில், அருமருந்து என்றும் பெயர் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. த.ஊ.பே.1976 ப. 213.)

[கும்பகோணத்திற்கு வடகிழக்கே 8 கி.மீ. இல் கோயில் உள்ளது.]

**தில்லை:** (திருத்தில்லை, புலியூர், திருப்புலியூர், பெரும்பற்றப் புலியூர்)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

தில்லை மரங்கள் நிறைந்த இடமாயிருந்ததால் இப்பெயர் பெற்றது.

தேன்மலர்ச் சோலை நிறைந்த தில்லையில் சிவபெருமான் நடனம் செய்கிறார் (2). இறைவன் நடம் புரியும் அம்பலம், சிற்றம்பலம் எனப்படும் (351). சிவன் இங்கு நிலைத்துள்ளதாகக் கொள்வர் (445). இவ்வூரிலுள்ள

அந்தணர் பெருமை பலவாறு போற்றப் பெறுகிறது.
(தில்லை வாழ் அந்தணர் புராணம்)

திருநீலகண்டக் குயவனார் பிறந்த ஊர் இவ்வூராகும் (360). மக்கள் தம் வழக்கைத் தீர்க்க இவ்வூர் அந்தணர் சபையை அணுகினர். இவ்வழக்கத்தை இறைவனே அடியார் வடிவில் வந்து திருநீலகண்டரிடம் தாம் தில்லை அந்தணர் சபையில் போய் வழக்கிட இருப்பதைக் கூறினார் (389). வழக்கைக் கண்டறிய இவ்வூர் அவையில் நல்லொழுக் கத்தில் சிறந்தவர்களும் நான்கு மறைகளில் கற்றுத் துறை போனவர்களும் இருந்தனர் (390).

இயற்பகை நாயனார் போன்றவர்களும் இறைவனைப் போற்றித் துதிக்கும் போது இவ்வூர் அம்பலத்தைப் போற் றினர் (435).

மதில் சூழ்ந்த இத்தில்லையின் எல்லையை அடையத் திருநாளைப் போவார் எனும் நாயனார் விரும்பினார் (1040). பல திருத்தொண்டு செய்துவந்த அந்நாயனார் அன்பு மேன்மேல் எழுந்த சித்தமுடன் தில்லை அம்பலத் தைச் சென்றிறைஞ்ச , உணர்வு பெருகியது (1060). அதனால் பாளைகளில் பூக்கள்நிறைந்த கமுக மரங்கள் சூழ்ந்த தில்லையின் அருகே சென்றார் (1062).

சோழன் அபயன் குலோத்துங்கன் தில்லைத் திரு எல் லையைப் பொன்னின் மயமாக்கினான் (1213). (இதைப் பொன்னம்பலம் என்பர். த. ஊ. பே. 1976, ப. 204).

தில்லை அம்பலத்தாரும் சிவனை வணங்கித் திருநாவுக் கரசர் புலிக்கால் முனிவர் பூசித்த இவ்வூர்ப் பக்கம் சென் றார் (1421). இவ்வெல்லையைச் சேர்ந்து மெய் நிலமுறத் தொழுதார். பொங்கியெழும் ஆசையுடன் சோலையில் மயில்கள் மகிழ்ந்து எதிர் எதிராடத் தாமரைத் தடங்கண்டு நிறைந்த மருதநில வயல் வழியே வந்தார் (1422). வயல் களில் வளர்ந்த கரும்புகள் சொரியும் முத்துக்கள் திருநாவுக் கரசரைக் கண்டு அன்பால் கண்ணீர் சொரிவது போல் விளங்கின (1423). அவர் வரவு கண்டு, 'பிறவிப் பகை நெறி

விடுவீர்! இருவினைப் பாசம் நீங்க இங்கே வருக' எனக் குயில்கள் கூவும் நந்தவனங்கள எதிரே இருந்தன (1424). அடியார் 'அரகர' என்பது போலச் சோலையிலுள்ள கிளி களும், பூவைகளும் அம்மொழிகளைச் சொல்லின (1425). இத்தகைய தில்லையின் மேற்குத்திசை மணிவாயிற்புறம அப்பர் வந்தார் (1426). அடியார்கள், சிவமே நிலவிய திரு வீதியில் வந்து அவரை எதிரேற்றனர் (1427).

மணிமாலைகளும், மலர் மாலைகளும் வீதிகளில் கட்டி னர். வீதியைக் கூட்டி நீர் தெளித்தனர் (1428). ஏழ்நிலைக் கோபுரத்தையும் உடல் நிலம் பொருந்தத தொழுது உள் புகுந்தனர் (1429). திருமாளிகை வலம் வந்து அன்பால் மேனி புளகமுறப் பொற்கோபுரம் புகுந்து நாயனார் பொன்னம்பலத்தில் சிவன் நடனத்தைக் கண்டார் (1430). 'ஒன்றியிருந்து நினைமின்கள்' என்ற திருவிருத்தத்தில் 'என்று வந்தாய்' என்னும் சிவபெருமான் திருக்குறிப்பைச் சுட்டிப் 'பத்தனாய்ப் பாடமாட்டேன்' எனும் திருநேரிசை பாடினார் (1430). மன்றிலிலும் வீதியுள்ளும் கூடிய பணி கள் செய்து கும்பிட்டார் (1435). 'அன்னம்பாலிக்கும்' என் னும் திருக்குறுந்தொகை பாடித் திருவுழவாரத் தொண்டு செய்தார் (1436). அருகிலுள்ள பல ஊர்களிலுள்ள இறை வனை வணங்கி மறுபடியும் தில்லையைக் காண நினைந தார் (1438). வழியில் வரும்போது 'பனைக்கை முமமத வேழம்' என்ற திருக்குறுந்தொகை பாடித் தில்லை சார்ந தார் (1439). 'அரியானை' என்ற பெரிய திருத்தாண்டகம் பாடிப் பொன்னம்பலம் மேவி, இறைவன் மீது மேலும் தமிழ்ப் பாடல் பாடினார் (1440). 'செஞ்சடைக் கற்றை' எனும் நேரிசை பாடிப் பணிந்து திருப்பணி புரிந்து வந் தார். அப்போது திருஞானசம்பந்தர் ஞானப்பாலுண்ட செய்தி கேட்டு அவரைக் காண, இறைவனை வணங்கி, வீதி புரண்டு வலம் வந்து, புவனங்களும் நிறைந்த திருப்பதியாம் தில்லை எல்லையை இறைஞ்சிப் புறப்பட்டார் (1444).

திருஞானசம்பந்தர் தில்லையுள் நடம்புரியும் இறைவ னைப் பணிந்திட விரும்பினார். அதனைத் தம் தந்தையி

டம் கூறினார் (2040). அவரும் இசைய இறைவனைத் தொழுது புறப்பட்டார் (2041). யாழ்ப்பாணர், அடியவர் கள் தம் தந்தையார் ஆகியோருடன் திருத்தில்லை வழிச் செல்லும்போது (2043) கொள்ளிட ஆற்றைக் கடந்தேறிச் (2044) செல்கதிப் பயன் காண்பர்போல் களிகூர்ந்தார். தேவர் முதல் எல்லா உயிரும் வணங்கினால் வேண்டிய வெல்லாம் நல்கும் தில்லையின் திரு எல்லையை அடைந்து பணிந்தார் (2045). பறவைகள் வாழ்த்தொலி எடுக்கத் தாமரை மொட்டுகள் கரம் குவித்து மலர்கள் முகம் காட் டிப் பொய்கைகள், சம்பந்தரை எதிர்கொண்டன (2046). அவரைத் தோகைமயில்கள் அழைத்தன. குளிர் காற்று எதிர்கொண்டது. வண்டுகள் ஆர்த்தன. தளிர்கள் குழைக ளாய் ஆடிட மலர்முகம் பொலிய மலர்க்கொம்புகள் ஆடல் மகளிர் போல் நின்றாடின (2047). சம்பந்தர்க்குப் பூந்தாது தூவி நெற்பயிர்கள் முகம் வணங்கின (2048). அவர் வந்த மகிழ்ச்சியால் கமுக மரங்கள் அசைந்து ஆடின (2049). தில்லை எல்லையில் மறையவர் வேள்விப் புகை பரவிய தால் வானம் நீல வெண் துகில் கட்டியது போலிருந்தது (2050).

மருத நிலத்தை நீங்கி நந்தனவனங்களைப் பணிந்து, மாட மாளிகை நெருங்கிய தில்லையைச் சூழ்ந்த நெடியமதி லின் தெற்குவாயிலின் பக்கம் வந்தார் சம்பந்தர் (2051). அவர் வரவு கேட்ட தில்லை அந்தணர்கள், எங்கும் மங்கல அணி அலங்கரித்து அவரை எதிர்கொள வந்தனர் (2052). தில்லை மூதூரின் தென் திசைத் திருவாயில் எல்லை நீங்கியுள் புகுந்து திருவீதிகளைத் தொழுது ஊரினுள்ளே சம்பந்தர் சென்றார் (2054).

கோபுரத்துள் சென்று திருமுற்றத்தின் அருகே செம் பொன் மாளிகை வலம் வந்து பேரம்பலம் தொழுது இறை வன் திருமுன்னுள்ள மணிவாயிலை அடைந்தார் (2056). சிவகணம் கூடி நிற்க, அடியவர் முனிவர் தொழும் திரு வணுக்கன் திருவாயிலில் ஆர்வம் பெருகக் கைகளைத் தலை மேல் குவித்துக் கண்ணீர் மல்கப் புகுந்தார் (2057).

இறைவன் ஆடிய அழகைச் சம்பந்தர் போற்றினார் (2058). தில்லைவாழ் அந்தணரை முன்வைத்துக் 'கற்றாங்கு எரியோம்பி' என்ற பதிகம்பாடி (2060) இறைவனை வணங்கினார் (2061). பொன்மாளிகை வலங்கொண்டு புறம்போந்தார் (2062). திருமுன்றிலைத் தாழ்ந்து தொழுது நான்கு திருவீதியும் தொழுது இங்குத் தங்குதற்குச் சம்பந்தர் அஞ்சினார் (2013). திருவேட்களத்தைத் தங்குமிடமாகக் கொண்டு தில்லை அம்பலவனைக் கும்பிட்டிருந்தார் (2014).

சம்பந்தர் பாடிய பதிகங்களை யாழில் வாசிக்கும் சிறப்பினைத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் பெற்றார். நாளும் தில்லை சென்று இறைவன் நடனத்தைப் போற்றிய சம்பந்தர், தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரவரும், இறைவன் அருளால் சிவகணநாதர்களாகத் தோன்ற அதனைத் திருநீலகண்ட யாழ்ப்பாணர்க்கும் காட்டினார் (2068). தில்லை அந்தணர்களும் சம்பந்தர் தம்மை வணங்கு முன் தாமும் வணங்கித் திருவீதியில் மருங்கணைய வந்தார்கள் (2069). திருமுடிமேல் கூப்பிய கையுடன், திருவாயிலுள் சம்பந்தர் புகுந்தார் (2070). பேரம்பல மருங்கு கும்பிட்டுத் திருக்களிற்றுப்படிக் கீழ்ச் சென்று தாழ்ந்தார் (2071). 'ஆடினாய் நறுநெய்யொடு' என்ற பதிகம் பாடித் தில்லை அந்தணரைக் கண்டநிலையைப் பாடினார் (2072). பொன்னம்பலத்தைத் தாழ்ந்து வணங்கிப் புறமுன்றில் அடைந்தார் (2073). திருவாயில் தொழுது எழுந்தபோது அவரிடம் பெரும்பாணர் தம்முடைய ஊர் முதலிய தலங்களைத் தொழுதற்கு வேண்டினார். சம்பந்தர் அதற்கு உடன்பட்டார் (2074).

மற்றொரு முறை சம்பந்தர் தம் தந்தையாரிடம் காழியில் வேள்வி வேட்டு இறைவனைத் தொழுது இருக்கக் கூறினார். தம்முடன் வாராதவர்க்கெல்லாம் விடை கொடுத்துப் பின்வந்த தொண்டர்களுடன் இறைவனை வழிபட்டுப் புறப்பட்டார். செல்வம் நிறைந்த தில்லை மூதூரில் இறைவன் திருநடம் ஏத்திப் பணிந்தார் (2860)

பின்னர் ஒரு முறை இறைவனின் பலபதிகளை வணங்கி அலைகடல் சூழ்ந்த திருத்தில்லையைச் சம்பந்தர் அடைந் தார் (3033). சம்பந்தர் வருகையை அறிந்த தில்லை வாழந் தணர்களும் திருத்தொண்டர்களும் வந்து வணங்கினர். முத்துச் சிவிகையிலிருந்து சம்பந்தர் இறங்கித் தில்லை எல்லையைப் பணிந்து வடதிசை வாயிலை வணங்கி மறை ஒலி நிறைந்த மாடவீதியை அடைந்தார் (3035). வீதியைப் பணிந்து எழுந்து, திருவாயிலைத் தொழுது பொன்னம் பலத்தை வலம் வந்து, பேரம்பலத்தை வணங்கினார்(3036). இறைவன் பெருங்கூத்தைக் கும்பிட்டார். தொண்டர்கள் பிரியாத் திருக்களிற்றுப் படியை வணங்கிச் சிவானந்தத் தில் அலைந்து எல்லையற்ற பேரின்பம் அடைந்தார் (3038).

சம்பந்தர் தில்லையிலுள்ளார் என அறிந்து, அவர்தம் தந்தையாம் சிவபாதவிருதயர் தம்முடன் காழி அந்தணர், அடியார்கள் சூழ இங்கு வந்தார் (3040). தம் தந்தையும் மற்றவரும் தில்லைவாழ் அந்தணர்களுடன் வரச் சம்பந்தர் அவர்களை வரவேற்று, அழைத்துச் சென்று, சிற்றம்பலம் பணிந்தார் (3041). தில்லையின் எல்லையைப் பணிந்து புறம்போந்தார் (3043).

சுந்தரர், யாழ்ஒலி முழவினொலி, வேத ஒலி, அரம்பை யர் இசைஒலி எப்போதும் முழங்கும் தில்லையின் எல் லையை அடைந்தார் (237). தாமரை மலர்கள் அசையக் கயல் எதிர்பாயும். வண்டுகளும், நீர்ப்பறவைகளும் ஒலிக் கும் வாவியின் அலைகளால் சங்குகளும், மலங்கு மீன்களும் பரந்த வயல்கள் சூழ்ந்திருந்தன. தொழுபவரின் மும்மலங் களைப் போக்கி வீட்டினை அருளும் தில்லையின் எல்லையை வணங்கினார் (238). பல மரங்கள் நிறைந்த சோலைகளில் குயில்கள் பாடப் புறம்பணையைக் கடந்து உட்புகுந்தார் (239). பலமலர்கள் பூத்த நந்தன வனங்களைப் பணிந்து சென்றார் (240). இடப்பக்கம் சிவகாமி காண உலகம் உய்ய நடமாடும் சிலம்பொலியைப் போற்றும் நான்மறைப் பதியை நாளும் கடல் வலம் கொள்வது போல் மதிற்புறத்து அகழியைக் கண்டு சுந்தரர் மகிழ்ந்தார் (241). தாமரை

மலரிலுள்ள வண்டுகள், தாழைமலரின் மகரந்தம் படிந்த மேனி பெற்றதால் நீறு பூசிய அடியார் போல் தோற்றம் பூண்டு முரலும் காட்சியைக் கண்டார். அதனால் சிந்தையில் அன்பு மிக மேற்சென்றார் (242). தில்லையின் திரு வாயில்கள் நான்முகனின் திருமுகங்கள் போல் விளங்கின. அவற்றின் வடக்குத் திருவாயில் முன் சுந்தரர் சென்றார் (243). அவரைத் தொண்டர்கள் எதிர் கொண்டு வணங்கிட மாளிகை நிறைந்த திருவீதியில் புகுந்தார் (244).

அங்கு மறைகள் முழங்கின. ஆடல் மகளிரரங்கம் முழங்கின. அத்திரு வீதியில் மறை முழக்கம் ஆடல் முழக்கம் தொண்டர் போற்றிசைக்கும் ஒலி முழக்கம் ஆகிய பல ஒலிகள் நிறைந்திருந்தன (245). மாளிகைகள் குபேரன் பட்டணம் போல் விளங்கின. கொடிகள் மின்னல் போல் விளங்கின (246). மயில்கள் கோபுரங்களின் மேல் ஆடின. யாகங்களில் நெருப்பு வளர்ந்தது. வீதியின் இரு பக்கமும் மாலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. திண்ணைகளில் மங்கலக் கலசம் விளங்கின. தேர்க்கூட்டங்களால் ஒளி மிகுந்திருந்தன. அன்னசாலைகளில் சோற்றுமலைகள் குவிந்திருந்தன. தண்ணீர்ப்பந்தர்களில் குளிர்ந்த தண்ணீர் இருந்தது. அயலிடங்களில் தேவர் கூட்டம் நெருங்கியது (247). உலகின் அழகெல்லாம் இப்பகுதியில் வந்ததென மங்கல வளம் நிறைந்திருந்தது. இங்கு அடியவர்கள் புகழ்ந்து பாடும் திருவம்பலம் சூழ்ந்த பொன்வீதியைச் சுந்தரர் வணங்கித் (248) திருவாயில் இறைஞ்சிப் புகுந்தார் (249). பேரம்பலத்தை வலம் கொண்டு, சிற்றம்பலத்தில் திருவணுக்கள் திருவாயிலை அடைந்தார் (250). அம்பலத்தில் ஆடும் இறைவனைத் திருக்களிற்றுப்படி அருகே சென்று தொழுதார் (251). மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார் (252.) மனிதப் பிறவியில் பெறும் இன்பத்தைப் பதிகத்தில் பாடினார் (253). (இப்போது இப்பதிகம் கிடைத்திலது.) 'ஆருரில் நம்பால் வருக' என்று வானில் இறை ஒலி கேட்டுணர்ந்து சுந்தரர் எழுந்தார் (254). இறைவன் பணியை மேற்கொண்டு, அம்பலத்தை வலம்வந்து, கோபுரத்தைக் கடந்து நின்று, அதனை நிலனுறப் பணிந்து, திருவீதியை

வணங்கினார். இறைவன் செல்வ வீதியில் சென்று, அவ்வூரின் தென்திசை கடந்து சென்று, திருஎல்லையை இறைஞ்சினார் (256). சுந்தரர் திருத்தொண்டர் பெருமையைப் பாடும்போதும் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என இவ்வூர்ப் பிறப்பின் சிறப்பையே முதலில் போற்றியுள்ளார் (345). மச்சம் வெட்டிய பொன்னை மணிமுத்தாற்றில் போட்ட சுந்தரர் தில்லை மன்றுள் ஆடும் இறைவனை வணங்க எண்ணி இவ்வூர்க்குச் செல்லும் வழியில் புறப்பட்டார் (3264). தில்லை மூதூர் அடைந்து வாயில் புகுந்து மாடவீதி சார்ந்தார் (3265). கோயில் வாயிலை அடைந்து மண்மேல் வணங்கினார் மாளிகை சூழவந்து, கோபுரம் புகுந்து பொன்னம்பலத்தில் ஆடும் திருவடியைப் போற்றினார் (3267) திருப்படியை ஐந்தங்கம், எட்டங்கம் என்ற முறையில் வணங்கி பேருநிற் கண்ட காட்சியைக் கருத்துள் கொண்டு 'மடித்தாடு மடிமைக்கண்' என்ற பதிகத்தில் பாடித் துதித்தார் (3269).

அருள்பெற்றுப் புறம்போந்து அந்தணர் போற்ற வைகிப் பின் அப்பொற்பதியை வணங்கிப் புறப்பட்டார் (3270).

பின்னர்ப் பல பதிகளைத் தொழுத சுந்தரர் திருத்தில்லையை வந்தடைந்தார் (3320). திருவீதி புகுந்து திருமன்றுள் எடுத்த சேவடி வணங்கி 'உலகம் வளர மறை வளர்க்கும் அப்பதியில் பணிந்து தங்கினார் (3321).

சுந்தரரின் தோழராம் சேரமான் பெருமான் நாயனார் 'அரசின் பயனும், தவமும், பொருளும், துணையும் ஆகிய எல்லாம் தில்லைச் சிற்றம்பலத்துள் ஆடும் கழலே' எனத் தெளிந்து, அர்ச்சனை மேற்கொண்டார் (3770). தில்லையில் பொன்னம்பலத்துள் நடம் போற்றும் அன்பில் புறப்பட்டு இம்மூதூர் எல்லையை வணங்கினார். சேரமானை அந்தணர்கள் வரவேற்றனர். அப்போது அவர் எதிர் வணங்கித் திருவீதியை இறைஞ்சி, எழுநிலைக் கோபுரத்தை அடைந்தார் (3800) மாளிகை வலம் வந்து, திருப்பேரம்பலத்தை வணங்கிச் சிற்றம்பலத்தின் முன் சென்றார்.

இறைவன் நடனம் கண்டு வழுத்தினார் (3802). திருக் களிற்றுப்படிக் கீழ் 'பொன்வண்ணத்தந்தாதி' பாடினார் (3803). இறைவன் அதற்குப் பரிசிலெனச் சிலம்பொலி எதிரே கேட்பித்தார் (3804). அதுகேட்டுக் கும்பிட்டுப் புறம்போந்து திருமாளிகைப்புறத்துச் சேரமான் தங்கினார் (3805). யாவரும் பரவும் தில்லை வட்டத்துள் தங்கித் திருக் களிற்றுப்படியின் கீழ் இரவும் பகலும் பணிந்தேத்தி இன்பம் பெற்றார் (3806). சுந்தரரைக் காணத் திரு வாரூர்க்குச் சேரமான் செல்ல எழுந்தார் (3807). அறிவின் எல்லை ஆய திருத்தில்லை எல்லையினை வணங்கிப் புறப் பட்டார் (3808).

சிவன் கோயிலில் விளக்கெரித்து வறுமையடைந்த கணம்புல்ல நாயனார் தில்லையை அடைந்து (4057) புலீச் சரத்துள் தம்முடியையே விளக்காய் எரித்துச் (4058) சிவப் பேறு பெற்றார்.

மகப்பேறின்மையால் சோழ மன்னன் சுபதேவனும் அவன் மனைவி கமலவதியும் தில்லையில் வழிபட்டனர் (4203). முற்பிறவியில் வலைபின்னிப் பணிபுரிந்த சிலம்பியை அவர் களுக்குச் கோச்செங்கண்ணன் எனும் மகனாகப் பிறக்க இறைவன் அருள்புரிந்தார் (4204). எல்லாக் கோயில்களிலும் சிவனுக்கு அமுதுபடி முதலானவற்றை அமைத்துத் தில்லை யைக் கோச்செங்கண்ணன் அடைந்தான் (4211). தில்லைப் பொன்னம்பலத்தில் நடம்புரியும் இறைவனை வணங்கித் தில்லைவாழ் அந்தணர்க்கு மாளிகைகள் கட்டினான் (4312). அவ்வாறு கோச்செங்கண்ணன் சிவப்பணி செய்ததால் தில்லை வேந்தனாம் சிவனடி சேர்ந்தார் (4213). அப்பூதி அடிகளும் தில்லையில் ஆடும் சிவனடி சேர்ந்ததாகவே பெரிய புராணம் கூறும் (1826).

தில்லைவாழ் அந்தணர் சிறப்பு பலவாறு காணப் பெறும் (1068, 1074). கூற்றுவ நாயனார் இவர்களைத் தனக்கு முடிசூட்டுமாறு வேண்டியபோது அதனைச் செய்ய மறுத்துத் தில்லையை விட்டுச் சேரநாடு சென்றனர் (3933). ஆயின் ஒரு குடியை மட்டும் தில்லையில் சிவப்பணி செய்ய

விட்டுச் சென்றனர் (3934). ஐயடிகள் காடவர் கோமான், தில்லைச் சிற்றம்பலத்தில் இறைவன் மீது வெண்பாப் பாடிப் பணிந்தார் (4050).

வடநாட்டிலிருந்து வந்த முனிவர் (திருமூலர்) இறைவன் நடம்ஆடும் பொற்பதியாம் தில்லை வந்தடைந்தார் (3569). இறைவனைக் கும்பிட்டு ஆராமையால் விரும்பித் தங்கினார் (3570).

'தென்திசையின் புண்ணியம் யா' தென முனிவர்கள் தம்மிடம் வினவிய போது உபமன்னிய முனி 'புலிக்கால் முனிவர்' (வியாக்கிர பாதர்) எனும் என் தந்தை அருச்சிக்கப் பெற்றுள்ளது; எல்லாப் பெருமையும் சேர்ந்த பெரும்பற்றப் புலியூர் (தில்லை) ஓங்கி விளங்கும் (41). அங்குச் சிவகாம சுந்தரியுடன் இறைவன் எப்போதும் காணவிருப்புடன் திருவம்பலத்தில் திருக்கூத்து ஆடுகிறான் (42) எனக் கூறியது பெரிய புராணத்தின் தொடக்கத்தில் தில்லையின் சிறப்பைப் புலப்படுத்தும்.

**தில்லை:**

**எல்லை: (திருவெல்லை)**

தில்லைக் கோயிலுக்கு நாற்புறமும் ஒரு காத தூரத்தில் அமைந்தது. சைவ சமய அடியார்கள் ஒவ்வொருவரும் இத்திரு வெல்லையைப் பணிந்து போற்றிய பின் தில்லையுள் சென்றனர் (238).

திருநாவுக்கரசர் (1422,1426,1444) திருஞானசம்பந்தர் (2045, 2054, 3035, 3048) சுந்தரர் (238, 256, 3800) ஆகிய அடியார்கள் இவ்வெல்லையைக் கடந்து தில்லை சென்ற போதும், தில்லையை நீங்கிப் பிற தலங்கட்குச் சென்ற போதும் இதனை வணங்கி சென்றனர்.

திருநாளைப் போவாரும் இத்திருவெல்லையை வலம் வந்தார் (1065).

(தில்லை என்பது ஒருவகை மரம். த.ஊ.பே.1976, ப.40)

/சிதம்பரம் நிலையம் மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடக்கே 37 கி.மீ. இல் உள்ளது./

**திலதைப்பதிமுத்தம்:** (திருத்தலதைப்பதிமுத்தம்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் இவ்வூர் உள்ளது. இவ்வூர்க்கு வந்த திருஞானசம்பந்தர் 'பொடிகள் பூசிப்பல' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2447).

(இராம இலக்குவர் தம் தந்தைக்குத் தில தருப்பணம் செய்த பதி ஆதலால் இதனைத் திலதைப்பதி என்பர். இறைவனைச் சந்திரன் வணங்கியதால் **மதிமுத்தம்** என்ற பெயரும் உளது. சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 65.)

/திருவாரூர்ச் சந்திப்பிற்கு வடக்கே 19 கி.மீ. இல் உள்ளது./

**திணைநகர்:** (திருத்திணைநகர்)

நடுநாட்டில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவனைப் பாடி வணங்கினார் (1402). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் தொண்டர்கள் எதிர்கொள இவ்வூர் இறைவனைப் பாடி வணங்கினார் (2860). (இப்பதிகம் கிடைத்திலது.)

சுந்தரர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கி 'நீறுதாங்கிய திருநுதலானை' என்ற பதிகம் பாடினார் (237). மற்றொருமுறை இந்நகருள் புகுந்து (3321) இங்குள்ள இறைவனைப் பணிந்து சென்றார் (3322). (இம்முறை வந்தபோது பாடிய பதிகம் கிடைத்திலது.)

(பெரியான் எனும் அடியார் திணைப்புனம் உழுத

போது இறைவன் வந்து சோறு கேட்டார். சோறு பெற ஊர் சென்ற பெரியான் திரும்புதற்குள் தினை முற்றி விளைந்த காரணத்தால் இப்பெயர் வந்தது என்பர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 119.)

(தீர்த்தநகரி என மருவி வழங்கப்பெறும். த. ஊ. பே. 1976, ப. 290)

|புதுச்சத்திர நிலையத்திற்கு வடமேற்கில் 5 கி.மீ. இல் உள்ளது.|

# து

**துருத்தி:** (திருத்துருத்தி)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று 'பொருத்திய குரம்பை' என்ற பதிகம்பாடி இறைவனை வணங்கினார் (1455).

திருஞானசம்பந்தர் பொய்யாது வரும் நீர் வளமுள்ள காவிரி மேவும் தூய்மையான திருத்துருத்தியில் திருவேள்விக் குடியில் காணும் இறைவனின் திருமணவாளக் கோலத்தைப் பகலில் காணுமாறு அருளினார். இரவில் இவ்வாறு வேள் விக்குடியில் விளங்கும் கோலத்தையும் சேர்த்து 'ஓங்கிமேல்' என்ற பதிகத்தில் பாடினார் (2189). மீண்டும் காவிரிக் கரையிலுள்ள இவ்வூரை அடைந்து இவ்வூர் இறைவராம் சொன்னவாறறிவாரைத் தொழுதார் (2333). 'வரைத் தலைப் பசும்பொன்' என்ற பதிகம் பாடிச் சென்றார் (2334).

சுந்தரர் வேள்விக்குடி அடைந்து இறைவனைப் பாடும் போது 'மூப்பதுமிலை' என்ற பதிகத்தில் துருத்தியும் கூட்டிப் பாடிப் பணிந்தார் (3275). பின்னும் ஒரு முறை வந்து தம் பிணிவருத்தமொழிய வேண்டினார் (3451). (அப்

பதிகம் கிடைத்திலது.) இறைவன் சுந்தரர் பிணி நீங்க 'வட குளத்துக்குள்' என்றார். அத்தீர்த்தத்தில் இறைவனைத் தொழுது முழுகியதும் பிணி நீங்கி ஒளிமிக்க திருமேனியைச் சுந்தரர் பெற்றார் (3453). கரையேறிக் கோயிலை அடைந்து 'மின்னுமா மேகங்கள்' என்ற பதிகம் பாடித் துதித்தார் (3454). இதிலும் திருத்துருத்தி, திருவேள்விக் குடியை இணைத்தே பாடியுள்ளார்.

(குத்தாலம் என்று இன்று வழங்கப் பெறுகிறது. இதற்கு நேரெதிரே காவிரியின் வடகரையில் வேள்விக்குடி உள்ளது. இவ்விரு தலங்களையும் ஒரே தலமாகக் கணிப்பது மரபு. திருத்தொண்டர் திருவந்தாதி 23.)

/மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 9 கி.மீ. இல் உள்ள நிலையம்./

**துவரை:**

வடநாட்டில் உள்ள இவ்வூர் துவாரகை எனப்படும். இதன் அரசனாக யாதவனாம் கண்ணன் ஆண்டு வந்தான் (24).

/கத்தியவாரில் அகமதாபாத்திற்குத் தென்மேற்கே 360 கி.மீ. இல் உள்ளது./

**துறையூர்:** (திருத்துறையூர்)

நடுநாட்டில் உள்ள ஊர்.

சுந்தரர் இவ்வூரை அடைந்து 'மலையாரருவித் திரள்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (225). புலன் ஒன்றும்படி தவம் புரியும் நெறி கொடுத்தருள நறுஞ் சோலைகளுள்ள இவ்வூர் இறைவனடி மலர்களைப் போற்றி சைத்து வணங்கினார் (226). பின் இவ்வூரை வணங்கி மற்ற இடங்களைப் பணியப் புறப்பட்டார் (227).

(இப்போது திருத்தலூ(ரு)ர் என்று வழங்கி வரு கிறது.)

/விழுப்புரம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 14 கி.மீ. இல் உள்ள நிலையம்./

# தெ

**தெங்கூர்:**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் இவ்வூர் உள்ளது.

இங்குத் திருஞானசம்பந்தர் சென்று 'புரைசெய் வல் வினை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2472).

(மரத்தால் பெயர் பெற்ற பதி. த. ஊ.பே.1976,ப.29. தேங்கூர் எனவும் வழங்கப் பெறும்.)

/திருநெல்லிக்காவல் நிலையத்திலிருந்து தென்மேற்கே 2 கி.மீ. இல் உள்ளது./

**தெளிச்சேரி: (திருத்தெளிச்சேரி)**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

சீர் நிலவும் இவ்வூர்க்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'பூவலர்ந்தன' எனும் பதிகம் பாடி வணங்கினார் (2802).

(கோயிற்பத்து என வழங்கப் பெறும். இப்போது காரைக்கோயில்பத்து எனப்படும்)

/காரைக்கால் நிலையத்திற்கு வடக்கே 1 கி. மீ. இல் உள்ளது./

**தென்திருப்புத்தூர்:** காண்க: **அரிசிற்கரைப் புத்தூர்**

சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள இவ்வூர்க் குச் சென்ற திருஞானசம்பந்தர் 'மின்னுஞ் சடை மேல்' என்ற பதிகம் பாடி தென்கரைமேற்புத்தூர் என்ற பெயர் விளங்கப் பாடியுள்ளார் (2301).

[கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

# தே

**தேவூர்:** (திருத்தேவூர்)

சோழநாட்டில் காவிரித் தென்கரையிலுள்ளது இவ்வூர். இங்கு மாடக்கோயில் உள்ளது.

இவ்வூர்க்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'பண்ணிலாவிய' என்ற பதிகமும், 'காடுபயில்' என்ற பதிகமும் பாடி இறைவனை வணங்கினார் (2472).

(தேவர்கள் இறைவனைப் பூசித்து மந்திரம் உபதேசிக்கப் பெற்றதால் இப்பெயர் வந்தது என்பர்).

[கீழ் வேளூர் நிலையத்திலிருந்து தெற்கே 3 கி. மீ. இல் உள்ளது.]

# தோ

**தோணி:** *காண்க:* கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சீகாழி, தோணிபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.

காழியின் பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று. ஊழிப் பெருவெள்ளத்தில் உலகமெல்லாம் அழியப் பிரணவமாகிய தோணி மிதந்து தன்னுள் சிவபெருமான் அம்மையுடன் இருந்ததால் இப்பெயர் பெற்றது (1912).

தென்திசையில் நாடுதனை விளக்கிய தோணிபுரத்தில் சிவ பூசைக்கு ஏற்ற இடம் பல உள (46). தோணியில் உள்ள இறைவனைத் தோணியப்பர் என வழிபடுவர்.

இங்குள்ள கோயில்பற்றிக் கூறும் போது தோணிபுரத் தோணிச் சிகரக் கோயில் எனப் போற்றுவர் (2004). சிவ பெருமான் கயிலையில் வீற்றிருந்தது போல இதனில் வீற்றி ருந்தார் (2041). தோணிப் பொற்கோயில் என இக்கோயில் புகழ்ப்பெறும் (2170) வேதங்களின் மிகுதியின் வடிவம் இத்திருத்தோணி என்பர் (2173). கடலால் சூழப்பட்ட திருத்தோணியில் இறைவன் அமர்ந்தருளினான் (4224). இறைவனைத் திருத்தோணிபுர நாயனார் என்பர் (3924).

இங்குப் பிறந்த திருஞானசம்பந்தரை இவ்வூரில் சிறப்பு விளங்கத் தோணிபுரத்தரசர் (1532), தோணிபுர அந்தணர் (2303), தோணிபுரத் தோன்றலார் (2351) எனவும் போற்று வர்.

/சிதம்பரம் நிலையத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது./

**தோணிபுரம்:** காண்க: **தோணி**

சீகாழிக்குரிய பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று (1912).

**நணா:** **(திருநணா)**

கொங்கு நாட்டில் உள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று இறைவன் மீது 'பந்தார் விரன்மடவாள்' என்ற பதிகம் பாடிப் பரவினார் (2225).

(இவ்விடத்தில் பவானி ஆறும், காவிரியும் கூடுகின்றன. வழிபடுவோர்க்கு எத்தகைய தீங்கும் நண்ணாது என்பது விளங்க இப்பெயர் அமைந்தது என்பர்.

**பவானி** என வழங்கப் பெறும்.)

/ஈரோடு சந்திப்பிலிருந்து வடமேற்கே 10 கி. மீ. இல் உள்ளது./

**நல்லம்:** (திருநல்லம்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது.

திருஞானசம்பந்தர் நையும் உள்ளத்துடன் இவ்வூரை அடைந்தார் (2331).

நிலைபெற்ற மாளிகையுள்ள இவ்வூர் இறைவன் அடி இறைஞ்சிக் 'கல்லானிழன் மேய' என்ற பதிகம் பாடித் துதித்தார் (2332).

கோனேரிராசபுரம் என வழங்கும். செம்பியன் மாதேவி திருநல்லத்தில் கற்கோயில் கட்டினாள். அக்கோயிலுக்குத் தன் கணவராகிய கண்டராதித்தர் பெயரை அமைத்தாள் த. ஊ. பே. 1976, ப. 261).

[திருவிடைமருதூர் நிலையத்திற்குத் தென்கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**நல்லூர்:** (திருநல்லூர், திருநலூர்)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

அமர்நீதி நாயனார் இவ்வூரில் திருவிழாவைக் கண்டு வணங்கி அன்பர்கள் அமுது செய்யத் தக்க திருமடம் அமைத்தார் (505). அடியார் அமுது செய்திட அருள் வேண்டி மகிழ்ந்துறைந்தார் (506). அமர்நீதியார்க்குக் கோவணப் பெருமை காட்ட இவ்வூர் இறைவன் பிரமசாரி வடிவம் தாங்கி வந்தார் (507). கோவணமிட்ட துலைத் தட்டுத் தாழ்ந்த போது, தாமிட்ட பொருள்களெல்லாம் தக்க நிறையாக அமையாததால் இவ்வூர் இறைவனை வணங்கி அமர்நீதியார் அஞ்செழுத்தோதித் துலைத்தட்டில் ஏறினார் (544).

திருநாவுக்கரசர் திருச்சத்திமுற்றத்தில் இறைவனை வணங்கிய போது 'நல்லூரில் வாவா' எனவே அருள் செய்தார் (1459). அவ்வருள் வழியே வந்து நல்லூரில் இறைவனை வணங்கினார் அப்பர். அப்போது அவர் முடி மீது பாதமலர் சூட்டினார் இறைவன் (1460). இச்செயல் புலப்

பட 'நினைந்துருகுமடியாரை' என்ற திருத்தாண்டகம் பாடினார். இறைவனின் திருப்பணிகள் நாளும் செய்து வநதார் (1462). கருகாவூர் போன்ற திருத்தலங்கள் சென்று மறுபடியும் இவ்வூர்க்குத் திரும்பி வந்து பிரியாது உள்ளுரு கிப் பணிந்தார் (1463). மீண்டும் பல ஊர்கள் சென்று திருப்பழனத்தில் பல நாள் தங்கியிருந்து காவிரியின் தென் கரை ஏறிச் சென்று மணிமாடத் திருநல்லூர் அடைந்தார் (1478). 'அட்டுமினில் பலி' என்ற திருவிருத்தம் பாடி வணங்கினார் (1479). இவ்வூர் இறைவன் அருள்பெற்றுப் பின புறப்பட்டார் (1480).

திருஞானசம்பந்தர், மணமுள்ள அழகிய வயல் சூழ்ந்த (2264) இவ்வூரை அடைந்தார். நல்லூர் அந்தணர்கள் மங் கல வினையால் எதிர்கொள்ளப் பொன் ஒளியுடைய முத் துச் சிவிகையின் மேல் பொலிவுறச் சேர்ந்தார் (2264). சிவி கையிலிருந்து இறங்கி அந்தணர் குழாம் முன்செல்லப் பின் செல்லும் பத்தரும் பரிசனமும் பரவச் சிவன கோயிலை அடைந்தார் (2265). கயிலை மலை போன்ற இக்கோயிலை வலமாக வரும்போது இன்பவெள்ளம் மெய் பொழிய மாடக்கோயில் மேல் ஏறிச் சென்று 'வண்டிரிய' என்ற பதி கம் பாடி வணங்கினார் (2267). மேலும் சில நாள் தங்கிப் பல பதிகம் பாடினார். (பல பதிகங்கள் கிடைக்கவில்லை.) இவ்வூர் இறைவன் அருள் பெற்று அகன்றார் (2269).

பல ஊர்களுக்குச் சென்று இறைவனை வணங்கிய பின் மீளவும் நல்லூரை வந்தடைந்து (2275) திருமறைகள் விளங்கும் இப்பதி இறைவன் அடியை வணங்கினார் (2276).

திருநாவுக்கரசர்க்குத் திருவடியளித்த திருநல்லூரைச் சுந்தரர் அடைந்தார் (3222). இவ்வூர் இறைவர் அடிபோற்றி வணங்கினார் (3223). (இங்குப் பாடிய பதிகம் கிடைத் திலது)

(இவ்வூரிலமைந்த கோயில், பெருமணம் ஆகும். த. ஊ. பே. 1976, ப. 213)

[சுந்தரப் பெருமாள் கோயில் நிலையத்திலிருந்து தென் மேற்கே 3 கி. மீ. இல் உள்ளது.]

**நல்லூர்ப்பெருமணம்:** (திருநல்லூர்ப் பெருமணம், நல்லூர், பெருமணம்)

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர்க்கு மணம் செய்ய இவ்வூரில் நம்பாண்டார் நம்பி மகளை மணம் பேச எண்ணி (3059) மரங்கள் நிறைந்த குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த இவ்வூரைச் சம்பந்தரின் தந்தையும் மறையவர்களும் (3060) அடைந்தனர் (3061). நம்பாண்டார் நம்பி அவர்களை வரவேற்று மணம் செய ஒப்பினார் (3065). மணக் கோலத்துடன் சம்பந்தர் இவ்வூரைச் சேர்ந்தார் (3104). இங்குள்ள கோவிலுள் சென்று பதிகம் பாடி இறைவனை வணங்கிக் கோயிற் புறத்தில் ஒரு மடத்துள் புகுந்தார் (3106). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.) திருமணம் முடிந்த பின் தம்மைச் சேர்ந்தார். அனைவரும் இறைவனை அடைய விரும்பி இவ்வூர்க் கோயிலாம் திருப்பெருமணத்தை அடைந்தார் (3141). 'கல்லூர்ப் பெருமணம்' என்ற பதிகம் பாடினார் (3143). இறைவனருளால் எழுந்த சோதியில் எல்லோரும் புகுமாறு 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' என்ற நமச் சிவாயப் பதிகம் அருள் செய்தார் (3146). மணங்காண வந்த அனைவரும் சிவச்சோதியில் புகுந்து வீடுபேறு பெறச் செய்தது இப்பதி.

(சம்பந்தரின் மனைவி ஊர் ஆதலால் ஆச்சாள் புரம் - ஆச்சாபுரம் என வழங்குவர்.)

[சிதம்பரம் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**நலூர்:** காண்க: நல்லூர்

**நள்ளாறு:** (திருநள்ளாறு)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

திருஞானசம்பந்தர் யாழ்ப்பாணருடன் இங்கு வந்தார் (2352). தொண்டர் குழாம் இவர்களை வரவேற்றனர். சம்பந்தர் கோயிலை வலம் வந்து உணர்வுமிக்கவராகி இறைவன் முன் வணங்கினார் (2353). உடம்பெல்லாம் மயிர்ப் புளகமுற ஆனந்தக் கண்ணீர் பெருக்கிப் 'போக மார்த்த' என்ற பதிகம் பாடினார் (2354). இப்பாடலை யாழிலிடச் சம்பந்தர் யாழ்ப்பாணரைப் பணித்தார் (2355). பதிகத்தைக் கேட்டு அவ்வூர் மக்கள் மிக மகிழ்ந்தனர் (2357). (மதுரையில் அமணர்களுடன் அனல் வாதமிட்ட போது நள்ளாறு போற்றுமிப் பதிகமே சம்பந்தர் கையில் வந்தது (2680).) பாண்டியன் முன் அமணரோடு ஏற்ற வாதில் எரியில் வேவாப் பதிகம் கொண்ட திருநள்ளாற்றி றைவனை வணங்க அன்பர்களுடன் மற்றுமொரு முறை சென்றார் (2799). 'பாடக மெல்லடி' என்ற பதிகம் பாடி வணங்கிச் (2800) சென்றார் (2801).

சுந்தரர் பணிசெயும் பரிசனங்களுடன் பலபதிகள் தொழுத பின் நள்ளாற்றைத் தொழுவதற்கு நினைந்து சென்று தொண்டர்கள் எதிர்கொளச் சேர்ந்தார் (3297). ('செம்பொன் மேனி' என்ற பதிகம் பாடி வணங்கினார்.)

(நளன் என்னும் மன்னவன் ஈசனை வழிபட்டுக் கலி நீங்கப் பெற்ற இடம் **நள்ளாறு** என்பர். த. ஊ. பே. 1976, ப. 178.)

/காரைக்கால் நிலையத்திற்கு வடமேற்கே 3 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**நறையூர்:** (திருநறையூர்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ் வூர். இவ்வூர்க் கோயிற் பெயர் சித்தீச்சரம் (த.ஊ.பே.1976, ப. 247).

திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவன் அடியைப் பரவினார் (1481).

நாடிய சிறப்புடைய இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர்

சென்று 'ஊருலாவு பலி', 'பிறைகொள் சடையர்', 'நேரியனாகும்' எனும் பதிகங்கள் பாடினார் (2301).

'செழுமை மிக்க நீர் வளமுடைய இவ்வூரில் உள்ள சித்தீச்சரக் கோயிலைச் சுந்தரர் வணங்கி 'நீரும் மலரும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3215).

/கும்பகோண நிலையத்திலிருந்து தென்கிழக்கே 9 கி. மீ. இல் உள்ளது./

**நன் னி பள்ளி:** **(திருநன்னிபள்ளி)** *காண்க:* **நனிபள்ளி**

**நன்னிலம்:** **(திருநன்னிலம்)**

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது இவ்வூர். இங்குள்ள கோயில் மாடக்கோயில்.

சுந்தரர் இவ்வூரடைந்து வலமாக வந்து கோயிலுள் இறைவனை வணங்கித் 'தண்ணியல் வெம்மையினான்' என்ற பதிகம் பாடினார் (3210). சிலநாள் இங்குத் தங்கினார் (3211).

(நன்னிலத்தில் உள்ள பெருங்கோயில் செங்கணான் செய்தது. த. ஊ. பே. 1976, ப. 216.

**மதுவனம்** எனவும் வழங்கப் பெறும்.)

/மயிலாடுதுறைச் சந்திப்பிற்குத் தெற்கே 25 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**நனிபள்ளி:** **(திருநனிபள்ளி, நன்னிபள்ளி, திருநன்னிபள்ளி)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது.

காணும் தகைமையுடைய இவ்வூர்க்கு வந்து திருநாவுக்கரசர் இறைவனடி பணிந்து 'முற்றுணை யாயினானை' என்ற பதிகம் பாடிப் பணிந்தார் (1454).

திருஞானசம்பந்தரின் தாயார் பகவதியம்மையார், தன்னிடம பிறக்கத் தவம் செய்த ஊர் இது. இவ்வூர் மறையவர் மங்கலக் கருவிகள் முழங்க வேதம் ஓதிக் காழியில் சம்பந்தர் அடியை வணங்கினர் (2007). செழித்த முத்துக்கள் அளிக்கும் காவிரி சூழ்ந்த இவ்வூரார், இறைவனைத் தங்கள் பதியில் கும்பிட்டருளச் சம்பந்தரை வேண்டினர் (2010). இவ்வூரை அடைதற்கு முன் 'வானம் அளவும் மலர்ச் சோலைப் பதி எது' எனக் கேட்டார். அது கேட்ட அவர் தந்தை 'நீல மலர்கள் பூக்கும் திருநனிபள்ளி' என்றார். உடனே 'காரைகள் கூகை முல்லை' என்ற பதிகம் பாடி இவ்வூரை நினைத்தவர் பேரிடர் கெடுதற்கு ஆணையிட்டு இவவூரின் பெருமையை விளங்கச் செய்தார் (2013).

கோயில் வாயிலை அடைந்து பணிந்து அருள் பெற்றார் (2014). இவ்வூர்த் திருக்கோயிலைச் சுந்தரர் சென்றடைந்தார் (3302). 'ஆதியன் ஆதிரையன்' என்ற பதிகம் பாடி இறைவனடி வணங்கினார் (3303).

(புஞ்சை எனவும் வழங்கப் பெறும். த. ஊ. பே. 1976, ப. 236).

/மயிலாடுதுறைச் சந்திப்புக்கு வடகிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது./

# நா

**நாகப்பட்டினம்:** (நாகை)

சோழநாட்டில் உள்ளது இவ்வூர்.

நாகைக் காரோணம் எனக் குறிப்பர் (1556). காரோணம் இவ்வூரிலுள்ள இறைவன் கோயிலாகும். திருநாவுக்கரசர், உலகில் விளங்கிய நாகைக் காரோணம் சென்று 'மனைவி தாய்' எனும் திருநேரிசையும், 'வடிவுடை மாமலை' எனும் திருவிருத்தமும், 'பாணத்தான் மதில்' எனும் திருக்

குறுந்தொகையும், 'பாரார் பரவும்' எனும் திருத்தாண்டகமும் பாடி இறைவனைப் பணிந்தார்.

'கற்றவர் வாழும் கடல் நாகைக் காரோணத்து' இறைவனைத் திருஞானசம்பந்தர் கைதொழுது (2364) 'புனையும் விரி கொன்றை', 'கூனற்றிங்கள்' எனும் பதிகங்கள் பாடினார். பின்னர் உப்பங்கழிச் சோலைகள் அமைந்த கடற்கரையிலுள்ள நாகையை நீங்கினார் (2365).

சுந்தரர் நாகைக் காரோணம் சென்று பாடிப் பொன், மணிப்பூண், நவமணிகள், ஆடை, சாந்தம், குதிரை, பொற் சுரிகை முதலானவை பெற்றுத் திருமபினார் (2810). பின்னர்ச் சேரமான் பெருமாளுடன் கடற்கழிக் கானலில் மலர்கள் விளங்கும் பொழில்களுடைய நாகை புகுந்து காரோணம் பணிந்தார் (3831).

இவ்வூரில் நீதிபதி என்ற வணிகன மைந்தனுக்குக் காரைக்காலம்மையாரை மணம் பேச விடுத்தார் (1723). மணமுடிந்த பின் பொங்கொலி நீர் நாகை போகாமல் காரைக்காலிலே அம் மணமக்கள் வாழ்ந்தனர் (1728).

கதிரவன் குலத்தில் தோன்றிய சோழரின் நாடெனும் கற்பகக் கொடியில் மலர் போல் நன்மை நிறைந்தது நாகப் பட்டினத் திரு நகரம் (3992). பெரிய யானைகள் மதநீர் சொரியச் செல்வம் பொழியும் மரக்கலங்கள் வந்து சேரும் கடல்துறைமுகப்பட்டினமாம் இவ்வூரில் (3991) அதிபத்த நாயனார் பிறந்தார்.

முத்து மாலைகளின் கோவைகள் சரிந்திட மலர்களைக் கூந்தலில் சூடிய பெண்கள் பந்தாடும் மேடைகளுள்ள பொற்சுடர் மாளிகைகளை மலையென மயங்கிக் கரிய மேகங்கள் பக்கத்தில் ஏறும் (3993).

பேரொலி நிறைதலாலும், திருமகள் சேரும் இடம் ஆதலாலும் வேண்டும் பொருள் யாவும் தகுதலாலும் இந்நகர் கடலினும் பெரிதாக விளங்கியது. அலை போல் யானை, குதிரை, மணி, துகில் ஆகியவற்றை மரக்கலங்கள் கொண்டு வந்து சேர்க்கும் (3994).

பதினெட்டு நிலங்களிலும் நிறைந்த பெருமை கொண்ட பல பொருள் மக்கள் பெருகியிருப்பதாலும், கோடியளவில் பெருகிய செல்வர்களுடன் பொலிவதாலும், இவ்வுலகம் முழுதும் தன்னுள் அடங்கக் காட்டும் கண்ணாடி மண்டலம் போன்றது (3995).

(ஆதிசேடன் என்ற பாம்பு பூசித்ததால் நாகை எனப் பெயர் பெற்றது. புண்டரீக முனிவரை இறைவன் தம் உடலில் ஏற்றருளினமையால் காயாரோகணம் எனப் பெயர் பெற்றது. இதனால் நாகைக்காரோணம் என்பர். முசுகுந்தச் சோழன் கொண்டுவந்து நிலை நாட்டிய ஏழு விடங்கத் தலங்களுள் ஒன்று.

நாகப்பட்டினத்தில் பௌத்த மதத்தைச் சார்ந்தோர் பலர் இருந்தனர். த. ஊ. பே. 1976, ப. 346.)

[திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து கிழக்கே 24 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**நாகேச்சுரம்: (திருநாகேச்சுரம்)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென் கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவன் மீது 'கச்சை சேரரவர்' என்ற திருநேரிசையும், 'தாயவனை' என்ற திருத்தாண்டகமும் பாடி வணங்கினார் (1457).

திருஞானசம்பந்தர் இவ்வூரில் 'பொன்னேர் தரு மேனியனே', 'தழை கொள் சந்தும்' எனும் பதிகங்கள் பாடி மாநாகம் அருச்சித்த இறைவனின் தாள் வணங்கி, நாளும் பரவும் அடியவர் பிணி தீர்க்கும் நலம் போற்றி வணங்கினார் (2309, 2310).

சுந்தரர் இவ்வூரை வலம் வந்து இறைவனடி வணங்கினார் (3219). 'பிறையணி வாணுதலாள்' என்ற பதிகம் பாடி அங்கிருந்து சென்றார் (3220).

(நாகேச்சுரம் நாளடைவில் கோயிற் பெயரே ஊர்ப் பெயராயிற்று. சேக்கிழாருடைய உள்ளம் கவர்ந்த கோயில்

திருநாகேச்சுரம். தாம் வாழ்ந்த தொண்டை நாட்டுக் குன்றத்தூரில் ஒரு நாகேச்சுரம் கட்டுவித்தார்-திருத்தொண்டர் புராண வரலாறு, 19. த. ஊ. பே. 1976, ப. 242)

[கும்பகோண நிலையத்திலிருந்து கிழக்கே 5 கி. மீ. உள்ள நிலையம்.]

**நாகை:** *காண்க:* **நாகப்பட்டினம்**

**நாட்டியத்தான்குடி: (திருநாட்டியத்தான்குடி)**

தலம் பெருகும் சோழநாட்டு நாட்டியத்தான்குடியில் கோட்புலியார் வந்துதித்தார் (4134).

சுந்தரர் உலகில் பரவிய புகழ் மிக்க கோட்புலி நாயனாரின் நாட்டியத்தான்குடியைச் சேர்ந்தார். ஊரை அலங்கரித்து எதிர்கொண்டு அழகிய மாளிகைக்குக் கோட்புலியார் அழைத்துச் சென்றார் (3187).

கோட்புலியாரின் இரு பெண்மக்களையும் தம் பெண் மக்களாகச் சுந்தரர் ஏற்றருளினார். இவ்வூர் இறைவன் மீது 'பூணாணாவ தோரரவம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3195).

[திருவாரூர்ச் சந்திப்புக்குத் தெற்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**நாரையூர்: (திருநாரையூர்)**

சோழநாட்டில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவன் மீது 'வீறுதானுடை' என்ற திருக்குறுந்தொகையும் 'சொல்லானை' என்ற திருத்தாண்டகமும் பாடி வணங்கினார் (1444).

இறைவனை நலம் திகழ் நாரையூரில் கும்பிடும் விருப்புடன் திருஞானசம்பந்தர் 'காம்பினை வென்று', 'கடலிடை

வெங்கடு நஞ்சம்', 'உரையினில்' என்ற பதிகங்கள் பாடி வணங்கினார் (2151).

[சிதம்பரம் நிலையத்திற்குத் தென்மேற்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**நாலூர்:** (திருநாலூர், திருநாலூர் மயானம்)

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

இது நாலூர் எனவும், நாலூர் மயானம் எனவும் இரண்டு பதிகளாக உள்ளது. திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கினார் (1481). (இவ்வூர்ப் பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று 'பாலூரும்' என்ற பதிகம் பாடி இறைவனை இறைஞ்சினார் (2301).

[கும்பகோண நிலையத்திலிருந்து தென்கிழக்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**நாவல்:** காண்க: **நாவலூர்**

**நாவல் நகர்:** காண்க: **நாவலூர்**

**நாவலூர்:** (திருநாவலூர், நாவல், நாவல் நகர்)

நடுநாட்டிலுள்ள ஊர். சுந்தரர் பிறந்த இடம்.

திருமுனைப்பாடி நாட்டில் வைதிக நெறி உலகில் ஓங்கச் சுந்தரர் தோன்றுதற்குரிய தவம் செய்த வளம் மிக்க பதி; வாய்மை குன்றாத மறையவர்கள் நிலைத்து வாழும் திருநாவலூர் (148).

சுந்தரரை வேதியர் வடிவில் வந்த சிவபெருமான் ஆட்கொண்டபின் மலர்கள் மலரும் பொய்கையுடைய திரு

நாவலூர்க்குச் சுந்தரர் சென்று பதிகம் பாடி வணங்கினார் (224). கயல்கள் பாய்வதற்கிடமாகிய வாவிகள் சூழ்ந்த ஊர் இது (233). இந்நாவலூர் வந்த சைவ நற்றவக் களிறாகச் சுந்தரரைத் திருவாரூர் மக்கள் போற்றினர் (332).

சிவபெருமான் உறையும் பல பதிகளை வணங்கிய சுந்தரர், பொருத்த மிகும் திருத்தொண்டர் போற்றும் இவ்வூரினை மனத்தில் அன்பால் எண்ணி இங்குச் சென்றார் (3322). அவர் வரவு கேட்டு இவ்வூராரும் தொண்டரும் 'பெருவாழ்வு வரும் நாள்' எனத் தம் நகரை அலங்கரித்து எதிர்கொண்டனர். அவர்களுடன் சுந்தரர் இவ்வூர்க் கோயிலுட் புகுந்தார். இறைவனைப் போற்றிக் 'கோவலன் நான்முகன்' என்ற பதிகம் பாடிக் கும்பிட்டார் (3324).

இவ்வூர் மதில்கள் உயர்ந்திருந்ததால் மேகங்கள் இதில் தவழ்ந்தன (3424). செந்நெலும், கரும்பும் நிறைந்த கழனிகள் சூழ்ந்துள்ளன (4226).

சுந்தரர் இவ்வூரன் எனவும் (182) இவ்வூரின் அரசர் எனவும் (227, 2868) போற்றப் பெறுவர்.

(இது மரத்தால் பெயர் பெறுவர் ஊர்.

நாவலூரில் தொண்டீச்சுரம், அகத்தீச்சுரம் கோயில்கள் உள்ளன. த. ஊ. பே. 1976, பக். 29. 254.)

/பண்ருட்டி நிலையத்திலிருந்து தென்மேற்கே 19 கி.மீ. இல் உள்ளது./

## நி

**நியமம்:** (திருநியமம்)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று போற்றிப் பின் திருக்காட்டுப்பள்ளியை அடைந்தார் (2247).

/தஞ்சாவூர் நிலையத்திலிருந்து வடமேற்கே 25 கி. மீ. இல் உள்ளது./

**நின்றவூர்:** (திருநின்றவூர்)

தொண்டை நாட்டிலுள்ள ஊர்.

பூசலார் நாயனார் பிறந்த ஊர் (4171). நலமிகு சிறப்பில் மிகுந்த நான்மறைகள் விளங்கும் மூதூர். குல முதல் ஒழுக்கம் குறையாத மறையவர் தம் கொள்கை நிலவிய செல்வம் பெருகிய ஊர் (4172).

பூசலார் இவ்வூரில் கோயில் திருப்பணி செய்ததால் அவரை வணங்க வேண்டுமென்று காடவர் கோமான் சோலைகள் சூழ்ந்த **நின்றவூர்** வந்து சேர்ந்தான் (4181) இப்பதியில் அவர் தம் மனத்தில் கோயில் கட்டி வழிபட்ட பெருமையை அரசன் உணர்ந்தான்.

(இவ்வூர் **தின்னனூர்** என வழங்கி வருகிறது.)

/சென்னையிலிருந்து மேற்கே 29 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**நின்றியூர்:** (திருநின்றியூர்)

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று 'கொடுங்கண் வெண்டலை' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (1454).

திரு நீடும் இவ்வூரில் திருஞானசம்பந்தர் இறைவனடி ஏத்திக் காதலால் போற்றிச் 'சூலம் படை' என்ற பதிகம் பாடினார் (2185).

சுந்தரர் இவ்வூரை அடைந்தார் (3303). இங்குள்ள இறைவனை நேயத்தால் ஒன்றிய அன்பினால் உள்ளுருகினார். உலகம் துன்பத்தில் நீங்கி இன்பம் அடையத் திருநாவுக்கரசர் பாடிய 4900 பதிகம் பற்றிப் பாராட்டிப்

போற்றித் 'திருவும் வண்மையும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3304).

(திருமகள் இறைவனைப் பூசித்த தலம் என்பர். சோழ அரசன் பூசித்து வந்த போது அவன் கொணர்ந்த திரி நின்றிட ஒளி தோன்றிய ஊர் என்றும் கூறுவர். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 9)

[ஆனந்ததாண்டவபுரம் நிலையத்திலிருந்து வடகிழக்கே 3 கி. மீ. இல் உள்ளது.]

# நீ

**நீடூர்:** (திருநீடூர்)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இறைவனை வணங்கிப் 'பிறவாதே தோன்றிய பெம்மான்' என்ற பதிகத்தில் இவ்வூரையும் குறித்துள்ளார் (1454).

நாடும் சிறப்பை உடைய இவ்வூர் வந்து திருஞான சம்பந்தர் இறைவனை வணங்கினார் (2184). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

உலகில் புகழுடைய இவ்வூரைப் பணியாமல் சுந்தரர் சென்றார். அப்போது ஒப்பரிய உணர்வினால் நினைந்து சென்று தொழுதார் (3305). 'ஊர்வதோர் விடை' என்ற பதிகம் பாடி இறைவன் அடி வணங்கி மயிர்ப்புளகம் மிகப் பணிந்து இங்குத் தங்கினார் (3306).

சிறப்புப் பொருந்திய இவ்வூரில் முனையடுவார் நாயனார் பிறந்தார். பகைமையை வென்று உலகைக் காக்கும் சோழரின் காவிரி பாயும் தேன் கமழும் சோலைகளில் மலர் விரிந்து பொழியும் செழுந்தேன் ஆற்றின் வழியே பெருக்கெடுத்து ஓட அவ்வெள்ளத்தால் சேறாக்கிய வயலில் உழவர் உழும்போது சேறு[1] நறுமணம் கமழும். இத்தகைய செல்வம் நீடிய ஊராகும் இவ்வூர் (4089).

(ஊழிக்காலத்தும் அழியாது நீடியிருப்பதால் இப பெயர் பெற்றதென்பர்.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 4 கி. மீ இல் உள்ள நிலையம்.]

**நீலபருப்பதம்:** காண்க: இந்திரநீலபருப்பதம்

# நெ

**நெடுங்களம்:** (திருநெடுங்களம்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று (2246) 'மறையுடையாய்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2247).

(இப்பொழுது திருநெடுங்குளம் என வழங்குகின்றது த. ஊ. பே. 1976, ப. 67)

[திருவெறும்பூர் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**நெய்த்தானம்:** (திருநெய்த்தானம்)

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர். (ஏழு தலங்களுள் ஒன்று.)

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவன மீது 'காலனை வீழச் செற்ற', 'பாரிடம் சாடிய', 'கொல்லியான்', 'வகையெலாம்', 'மெய்த்தானத்து' என்ற பதிகங்கள் பாடி வணங்கினார் (1651).

திருஞானசம்பந்தர் திருநெய்த்தானத்தை அடைந்து மனம் பொருந்த வணங்கி, 'மையாடிய கண்டன்'. என்ற பதிகம் பாடி வணங்கினார் (2203). மற்றுமொரு முறை இவர் காவிரியில் இறங்கிச் சென்று வடகரையில் நிலை

பெற்றுள்ள நெய்த்தானத்தில் இறைவனை வணங்கினார் (2847).

(தில்லைத்தானம் என்று வழங்கப் பெறும். த. ஊ. பே. 1976, ப. 290)

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**நெல்லிக்கா:** (திருநெல்லிக்கா)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் இறைவன் மீது 'அறத்தாலுயிர் காவல்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2472).

(நெல்லிவனத்தில் ஈசன் காட்சியளித்தமையால் திருநெல்லிக்கா என்னும் பெயர் அமைந்தது. இப்பொழுது திருநெல்லிக்காவல் என வழங்கும். த. ஊ. பே. 1976, பக். 157, 163).

[திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து தெற்கே 14 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**நெல்வாயில்:** (திருநெல்வாயில், அரத்துறை)

நடுநாட்டில் உள்ள ஊர். நிவா நதியின் வடகரையில் உள்ளது. இங்குள்ள கோயில் அரத்துறை எனப்பெறும்.

திருஞானசம்பந்தர் இங்கு வந்த போது முத்துச் சிவிகை, முத்துக் குடை, முத்துச் சின்னம் ஆகியவற்றை இறைவன் அருளினார் (2093). சிவனேவலால் மறையவர் அவற்றைக் கொண்டு திருஞானசம்பந்தரிடம் சென்றனர். கனவில் அதனை முன்னமே அறிந்த அவர் அவற்றை ஏற்று 'ஏந்தையீசன் எம்பெருமான்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2112).

(தேவாரத்தில் திருநெல்வாயில் என்று குறிக்கப்பட்ட ஊர் இன்று சிவபுரியாயிருக்கிறது. இப்பொழுது நெல்வா

யிலும் அரத்துறையும் தனித்தனி ஊர்களாகக் காணப்படு கின்றன. நெல்வாயில் என்ற பழம் பெயர் நெய்வாசல் எனவும் திருஅரத்துறை என்பது திருவடத்துறை எனவும் மருவி வழங்கும். த. ஊ. பே. 1976 பக். 50, 193)

/பெண்ணாடத்திலிருந்து மேற்கே 10கி.மீ. இல் உள்ளது./

**நெல்வெண்ணெய்:** (திருநெல்வெண்ணெய்)

நடுநாட்டிலுள்ள ஊர்.

இங்குச் சென்று திருஞானசம்பந்தர் 'நல்வெணெய் விழுதுபெய் தாடுதிர்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2127).

(இப்போது நெய்வெண்ணெய் என்று வழங்குவர்.)

/உளுந்தூர்ப்பேட்டை நிலையத்திலிருந்து வடமேற்கில் 7 கி. மீ. இல் உள்ளது./

**நல்வேலி:** (திருநெல்வேலி)

பாண்டிநாட்டிலுள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இங்குச் சென்று இறைவனை வணங் கினார் (1675). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்தார் (2784). 'மருந்தவை மந்திரம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2785).

சுந்தரர் சேரமான்பெருமாள் நாயனாருடன் நெல்வேலி யிலுள்ள இறைவனைப் பாடி பணிந்தார் (3855). (இப் பதிகம் கிடைத்திலது.)

சம்பந்தரால் சைவ நெறியில் புகுந்த நின்றசீர் நெடு மாறன்நாயனார் போர் வேண்டி வந்த மன்னர்க்கு எதிரே திருநெல்வேளத்தில் போர்க்களத்தில் படைக்கடலையும், குதிரை வெள்ளத்தையும், யானை வரிசையையும் பரப்பிப் போரை வென்றார் (4071).

(வேதசருமர் எனும் அடியார் இறைவன் திரு அமுதுக் கெனக் கட்டி வைத்திருந்த நெல்லினை வெள்ளம் கொண்டு செல்லாமல் இறைவனே வேலியிட்டுக் காத்தலால் இப் பெயர் வந்தது என்பர். வேணுவனம் என்ற பெயருமுளது. இங்குள்ள சபை தாமிரசபை. த. ஊ. பே. 1976, ப. 204)

/இச்சந்திப்பு மதுரைச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 163 கி. மீ. இல் உள்ளது./

**நெறிக்காரைக்காடு: (திருக்கச்சிநெறிக்காரைக்காடு)**

தொண்டை நாட்டில் உள்ள ஊர். கச்சி நகர்க்குக் கீழ் கோடியிலிருப்பதால் அப்பெயருடன் சேர்த்துக் கூறப் பெறும்.

இங்குச் சென்று, திருஞானசம்பந்தர் இறைவனை வணங்கி 'வாரணவு முலை மங்கை' என்ற பதிகம் பாடி னார் (2898).

(இங்குக் காரைமரம் நிறைந்திருப்பதாலும், சேர்ந்த வர்க்குச் சித்தி தருவதாலும் இப்பெயர் பெற்றது என்பர்.

இதற்குச் சத்தியவிரதத் தானம் என்ற பெயருமுளது.

சிவி என்ற இந்திரன் தன் வாழ்வில் வெறுப்புக் கொண்டு வியாழ பகவானின் சொற்படி இங்கு வந்து இறைவனை வணங்கி வீடு பேறு பெற்றான் என்பது புராணக் கதை.)

/செங்கல்பட்டுச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 35 கி. மீ. இல் உள்ளது./

# ப

**பட்டீச்சரம்: (திருப்பட்டீச்சரம்)**

சோழநாட்டில் உள்ள ஊர். திருஞானசம்பந்தர் விருப்

புற்று இவ்வூர் இறைவனை வணங்கிச் செல்லும் போது (2289) முதுவேனிற் கால வெயில் கொடுமை செய்தது. அப்போது இறைவனருளால் சில பூதம் சம்பந்தர் முடிமீது முத்துப்பந்தர் எடுத்து இறைவன் அருளை இயம்பின (2290). அது கேட்டு மெய்யில் புளகமுற்று நிலத்தில் விழுந்து சம்பந்தர் இறைவனை எண்ணி வணங்கினார் (2291). அம்முத்துப்பந்தரைப் பரிசனங்கள் கைக்கொண்டனர் (2292). அந்நிழலில் வந்த சம்பந்தர் இறைவனின் அருட் கருணைத் திறம் போற்றி மகிழ்ச்சியுடன் தொண்டர் சூழத் திருப்பட்டீச்சரம் சேர்ந்தார் (2294). வாயில் புறத்தில் வணங்கி உட்சென்று கோயில் வலங் கொண்டு இறைவன் அடிகள் கண்டு தொழுது விழுந்தெழுந்து 'பாடன்மறை சூடன்மதி' என்ற பதிகம் பாடினார் (2295).

(தேவராவின் கன்று பூசித்ததால் இப்பெயர் பெற்றது என்பர்.)

[கும்பகோண நிலையத்திற்குத் தென்மேற்கில் 6 கி. மீ. இல் உள்ளது.]

**பந்தணைநல்லூர்: (பந்தணைநலூர், திருப்பந்தணைநல்லூர்)**

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர்.

இவ்வூரைத் திருஞானசம்பந்தர் அடைந்து இறைவன் மீது 'இடறினார் கூற்றை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2148). மற்றுமொரு முறை இங்கு வந்து இறைவன் மீது வேதத் தமிழால் பாடல் இசைத்தார் (2187).

(உமையம்மை ஆடிய பந்து இங்கு வந்து அணைந்த தால் இப்பெயர் பெற்றது என்பர். **பந்தநல்லூர்** என்றும் அழைக்கப்பெறும்.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 14 கி. மீ. இல் உள்ளது.]

**பரங்குன்று: (திருப்பரங்குன்று, கோத்திட்டை)**

பாண்டிய நாட்டில் மதுரைக்கு அருகில் உள்ள ஊர். இங்குள்ள குன்று, பரங்குன்று எனச் சங்கப் பாடல்களில் போற்றப் பெறும்.

இங்குச் சென்று திருஞானசம்பந்தர் இறைவன் மீது 'நீடலர் சோதி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2782).

மூவேந்தர்களுடன் சுந்தரர் இங்குச் சென்று கோயில் வலம் கொண்டு புகுந்து உள்ளிறைஞ்சி இறைவனடிக் கீழ் ஆட்செயும் அருமை நினைந்து 'கோத்திட்டையும்' என்ற பதிகம் பாடினார் (3850).

(முருகனுக்குரிய படைவீடுகளில் முதலாக வைத்துப் போற்றப்படுவது **திருப்பரங்குன்றம்.** பரம்பொருளாகிய ஈசன் கோயில் கொண்டமையால் இது **பரங்குன்றென்னும்** பெயர் பெற்றது என்றும் தோன்றுகின்றது. த. ஊ. பே. 1976, ப. 171).

[மதுரைச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 7 கி. மீ. உள்ள நிலையம்.]

**பராய்த்துறை:** (**திருப்பராய்த்துறை**)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். திருநாவுக்கரசர் இங்குள்ள கோயிலுக்குச் சென்று 'கரப்பர் காலமடைந்தவர்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (1567).

திருஞானசம்பந்தர் பொன்னி நதியின் தென்கரையிலுள்ள இடங்கள் பலவற்றைப் பணிந்தபின் பராய்த்துறையுள் புகுந்தார் (2238). இவ்வூர்க் கோயிலை அடைந்து 'நீறு சேர்வதொர் மேனியர்' என்ற பதிகம் பாடி வணங்கினார். பராய்மரச் சோலையின் இடையிலே அமைந்திருந்தமையால் இப்பெயர் பெற்றது போலும். இந்நாளில் இத்துறை **திருப்பலாத் துறை** என்று வழங்கும். த. ஊ. பே. 1976, ப. 184).

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 21 கி.மீ. இல் உள்ள நிலையம்.]

**பரிதிநியமம்:** (**திருப்பரிதிநியமம், பரிதிநன்னியமம்**)

காவிரிக்குத் தென்கரையில் இவ்வூர் உள்ளது.

இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் இறைவனைப் பணிந்து 'விண்கொண்ட தூமதி சூடி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2273).

(சூரியன் இறைவனைப் பூசித்த இடம் என்பதால் இப் பெயர் வந்தது என்பர். பரிதி நியமம் என்பது சூரியன் கோயில் ஆகும். பரிதியப்பர் கோயில், பருத்தியப்பர் கோயில் என மருவி இப்பொழுது பருத்திச் செடியோடு தொடர்பு கொண்டுள்ளது. த. ஊ. பே. 1976, ப. 272)

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**பருப்பதம்:** (திருப்பருப்பதம், ஸ்ரீசைலம், ஸ்ரீபர்வதம், மல்லிகார்ச்சுனம்)

வடநாட்டுப் பதிகளுள் ஒன்று.

கயிலைமலையைக் காண விரும்பி வடநாடு சென்ற திருநாவுக்கரசர் (1612) பெருமலைகளையும், காட்டு ஆறுகளையும், பல நாடுகளையும் கடந்து சென்று சிவன் மேவு திருப்பருப்பதம் அடைந்தார் (1613). விஞ்சையர், வானநாடர், இயக்கர், சித்தர்கள், கின்னரர், நாகர், தம் விருப்பப்படி உலவும் தேவர்கள், சிவஞானிகள் நாளும் வந்து வணங்கி நலம் பெறும் இடமாம் அம்மலைப்பதி இறைவனைக் 'கன்றினார் புரங்கள்' எனும் பதிகம் பாடித் துதித்தார் (1614).

திருக்காளத்தி சென்ற திருஞானசம்பந்தர் வட திசையில் தமிழ் வழக்கு நிகழாதது கண்டு இறைவன் இடந்தோறும் சென்று தமிழிசை பாடுவது போலத் திருப்பருப்பதத்தின் கொள்கையைப் பாடும்போது 'சுடுமணியுமிழ் நாகம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2925).

சுந்தரரும் காளத்தி சென்று இறைவனை அங்கிருந்தபடியே, பருப்பதம் சென்று 'மானும் மரையினமும்' என்ற பதிகம் பாடி வணங்கியதாகப் பாடினார் (3352).

திருமூலர் கங்கையாற்றில் குளித்துக் காசியை வணங்கி மேகங்கள் தங்கும் விந்த மலையைக் கடந்து பருப்பதத்தை வணங்கினார் (3567).

(முதல் மருது இத்தலம். இடை மருது சோழ நாட்டில் உளது. புடை மருது பாண்டி நாட்டில் உளது. சிலாதர் என்ற முனிவர் தவம் செய்ததால் சைலம் என்ற பெயர் வந்தது. சிலாதர் மகன் நந்தி தேவர் இம்மலையுருவில் இறைவனைத் தாங்குவதால் இப்பெயர் வந்தது. (தி. தொ. பு. III. சு. உரை 1943, ப. 589.)

[ஆந்திர மாநிலத்தில் நந்தியால் நிலையத்திற்கு வட கிழக்கில் 105 கி.மீ. இல் உள்ளது.]

**பல்லவனீச்சரம்:** (திருப்பல்லவனீச்சரம்)

சோழ நாட்டில் உள்ள தலம். திருஞானசம்பந்தர் இங்குச் சென்று இறைவனைத் தலையால் வணங்கி 'அடையார்', 'பரசு பாணியர்' என்ற பதிகம் பாடித் துதித்தார் (2019).

(பல்லவ அரசன் ஒருவனால் கட்டப்பட்ட கோயில், த. ஊ. பே. 1976, ப. 258. இது காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் எனப்படும்.)

[சீர்காழி நிலையத்திற்குத் தென்கிழக்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**பழமண்ணிப்படிக்கரை:** (திருப்பழமண்ணிப்படிக்கரை)

காவிரியின் வடகரையில் உள்ளது இவ்வூர். இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் இறைவனுறையும் இவ்வூர்க் கோயிலை வணங்கிப் பதிகம் பாடினார் (2186). (அப்பதிகம் கிடைத்திலது.)

(இப்போது இலுப்பைப்பட்டு என வழங்கப்படுகிறது.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**பழயனூர்**: *காண்க:* **பழையனூர்**

*தொண்டை நாட்டில் உள்ளது இவ்வூர்.*

*பழயனூர்த்* **திருவாலங்காடென** *இறைவன் கோயில மைந்துள்ள இடத்தைக் குறிப்பர் (2905).*

*[அரக்கோணம் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 10 கி. மீ இல் உள்ளது.]*

**பழனம்**: **(திருப்பழனம்)**

*சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஏழு தலங்கள் எனச் சிறப்பிக்கப் பெற்ற தலங்களுள் ஒன்று.*

*திருநாவுக்கரசர், வாளைகள் பாயும் நீர்ச் சிறப்புள்ள திருப்பழனத்தை அடைந்து இறைவன் அடி வணங்கும் பேறு பெற்றார் (1464). அப்பூதியடிகளைத் திருநாவுக்கரசர் கண்டபோது இறைவனைத் திருப்பழனத்தில் வணங்கி வருவதைக் கூறினார் (1793). அப்பூதியடிகளின் சிவ ஒழுக்கத்தைச் சிறப்பித்துச் 'சொல்மாலை' என்ற பதிகம் பாடினார் (1476).* **திருச்சோற்றுத்துறை** *முதலிய பல இடங்கள் சென்று பதிகம் பாடிப் பின் செழிப்புடைய திருப்பழனத்துக் கோயில் திருத்தொண்டு செய்திருந்தார் (1477).*

*திருஞானசம்பந்தர்* **பழனத் திருப்பதியை** *அடைந்தார் (2196). இவ்வூர்க் கோவிலை அடைந்து இறைவனை வணங்கி 'வேத மோதி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2197). மேலும் பல தலங்கள் சென்று இறைவனை வணங்கிப் பிறர் போற்றும் பல பதிகளையும் வணங்கச் சென்றார் (2848).*

*[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 14 கி. மீ. இல் உள்ளது.]*

**பழூவூர் (திருப்பழுவூர்)**

*சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது இவ்வூர்.*

இங்குள்ள கோயில் ஆலந்துறை (த. ஊ. பே. 1976, ப. 194). இங்குத் திருஞானசம்பந்தர் சென்று இறைவன் கோயிலின் எழிற் கோபுரத்தைத் தொழுதார். பின் நீண்ட விமானத்தைச் சூழ்ந்து இறைவனடியைப் பணிந்தார் (2134). உலகில் சிறந்து விளங்கும் அந்தணர் குலத்தில் உதித்த மலையாளர் தொழுது எண்ணற்ற சிறந்த பணிகள் செய்து துதிக்கும் வகையைச் சிறப்பித்து 'முத்தன் மிகு மூவிலை நல் வேலன்' என்ற பதிகம் பாடினார் (2135).

/அரியலூர் நிலையத்திலிருந்து தெற்கே 11 கி. மீ. இல் உள்ளது./

**பழையனூர்:** (பழயனூர்)

தொண்டை நாட்டில் உள்ள ஊர். நல்ல திறம்புரியும் இவ்வூர் வேளாளர்கள் தம்மேல் குற்றம் வந்த போது தங்கள் உயிரையும் வணிகன் ஒருவனுக்கு ஒரு முறை கொடுத்தச் சொல்லின் மெய்ம்மையையும் ஒப்பிட்டுத் தாம் கூறிய சொல்லையே காக்கத் தம் உயிரைவிட்ட (*) சிறந்த ஊராகும் (1080).

இங்ஙனம் மெய்ம்மை நிலை வழுவாத வேளாளர் வாழும் **பழையனூர்** திருவாலங்காட்டைத் திருநாவுக்கரசர் அடைந்து இறைவனை வணங்கினார் (1607).

**பழையனூர்த் திருவாலங்காட்டின்** அருகே திருஞான சம்பந்தர் சென்றார். காரைக்காலம்மையார் தலையாலே

---

* பரத்தை வயப்பட்ட வணிகன் ஒருவன் தன் மனைவியைக் கொன்றான். அப்பழியை மனத்தில் கொண்டு அவள் நீலி எனும் பேயாகி அவனை அலைத்தாள். ஒரு நாள் அவன் பழையனூர்க்கு வந்தான். பேய் நீலியும் பெண்வடிவில் வணிகனைப் பின்தொடர்ந்தது. அவ்வணிகன் இவ்வூர் எழுபது வேளாளரிடம் தன்னைப் பேயிலிருந்து காக்க வேண்டினான். எது உண்மை என அறியாத வேளாளர் இரவில் அவர்களை ஓரிடத்தில் தங்கச் செய்தனர். அவனுக்குக் கேடுவரின் எழுபது பேரும் உயிர் ஈவதாக வாக்குக் கொடுத்தனர். அன்றிரவு பேய் நீலி வணிகனைக் கொன்று விட்டது. மறுநாள் அதனை அறிந்த வேளாளர் தம் சொற்காக்கத் தீ வளர்த்து அதில் மூழ்கி இறந்தனர்.

நடந்து போற்றிய மூதூரை மிதிக்க அஞ்சி அருகிலுள்ள ஊரை அடைந்தார் (2906). சம்பந்தர் கனவில் இறைவன் வந்து, பாட மறைந்ததை அருளவே (2907) 'துஞ்ச வரு வாரும்' என்ற பதிகத்தில் பழையனூரார் கூறிய மொழி காத்ததைச் சிறப்பித்துப் பாடினார் (2908).

சுந்தரர் தாமரைப் பூந்தடங்களும் வயல்களும் சூழ்ந்த பழையனூரின் பக்கம் சென்று காரைக்கால்அம்மை தலையால் வலங்கொண்ட திருவாலங்காட்டினருகில் 'முத்தா' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3437).

[அரக்கோணம் சந்திப்பிலிருந்து வட கிழக்கே 10 கி.மீ. இல் உள்ளது.]

**பழையாறு:** காண்க: **பழையாறை**

**பழையாறை:** (பழையாறு)

இவ்வூர் ஆறை எனவும் வழங்கப் பெறும். இவ்வூரில் ஆறை, ஆறை வடதளி, ஆறை மேற்றளி எனப் பல கோயில்கள் உள்ளன.

சோழ நாட்டில் மேகம் அமைந்த, களி வண்டு மொய்த்த, மலர்ச் சோலை சூழ்ந்து தேர்கள் மேவிய மணி வீதிகளில் சிறந்து உலகில் பெருமை சேர்ந்த ஊர் பழையாறை (502). இங்கு அமர்நீதிநாயனார் பிறந்தார் (503).

திருநாவுக்கரசர், மணம் நிறைந்த நல்ல மலர்கள் மலர்ந்த சோலைப் பழையாறையை அடைந்தார் (1457). இவ்வூரிலுள்ள இறைவனின் பல கோயில்களில் சென்று வணங்கினார் (1480). பின்னர் ஒரு முறை இவ்வூரைச் சார்ந்தார். இவ்வூரினுள் செல்லும் போது அமணர்கள் மறைத்த திருப்பழையாறை வடதளியில் உள்ள இறைவனைக் கைகூப்பித் தொழுத அளவில் திருவுள்ளத்தில் ஒருணர்வு எழுந்தது. தாம் கண்ட விமானம் அமணர்கள் வஞ்சனையால் செய்த விமானம் எனக் கேட்டு உள்ளம் பொறாது

புழுங்கினார் (1559). அவ்விமானத்தின் அருகில் இறைவனடியை நினைந்து அமணர் வஞ்சனையை அழிக்க வேண்டிப் பணிந்தார் (1560). 'கோயிலுள் இறைவன் திருமேனியைக் காணாமல் போகேன், அமுதும் செய்யேன் என இருந்தார். அரசன் கனவில் இதனை இறைவன் சில அடையாளக் குறி காட்டியருளினார் (1562). அரசன் இவ்விடம் வந்து அமணர் வஞ்சனையை வெளிப்படுத்தித் திருநாவுக்கரசர் அடி வணங்கினான் (1563). இறைவர்க் விமானம் அமைத்திட்டுப் பூசனைக்கு வேண்டியவற்றை அரசன் செய்திட்டான். அப்போது திருநாவுக்கரசர் 'தலையெலாம்' என்ற திருக்குறுந்தொகை பாடி வணங்கினார் (1565).

திருஞானசம்பந்தர் அடியார்களுடன் நடந்தருளி வானளாவிய நீண்ட மதில் சூழ்ந்த பழையாறை மேற்றளியை அடைந்தார் (2287). அக்கோயிலுள்ள இறைவன மீது பதிகம் பாடி வணங்கினார் (2288). (இப்பதிகம் கிடைத்திலது.)

(சுந்தரரும் இவ்வூரைச் சிறப்பித்துத் திருப்புறம்பயத் தேவாரத்தில் 'அங்க மோதி யோராறை மேற்றளி' என்று இவ்வூர் மேற்றளியைப் பாடியுள்ளார். மூவர் தேவாரம் - தலமுறை, 1968, ப. 339.)

பிற்காலத்தில் முடி கொண்ட சோழபுரம் என்னும் பெயர் இதற்கமைந்தது. த. ஊ. பே. 1976, ப. 178.

[கும்பகோண நிலையத்திற்குத் தென்மேற்கே 8 கி. மீ இல் உள்ளது.]

**பறியலூர்:** (திருப்பறியலூர்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர். வீரட்டங்களில் ஒன்று. தக்கயாக சங்காரமாம் வீரம் நிகழ்ந்த ஊர்.

இவ்வூரில் திருஞானசம்பந்தர், இறைவன் விரும்பி நீடு

வீற்றிருக்கும் திரு வீரட்டக் கோயிலைப் பணிந்தார் (2339). இறைவன் மீது 'கருத்தன் கடவுள்' என்ற பதிகம் பாடிப் பரவினார் (2340).

பறசலூர் என வழங்கி வருகிறது. (இந்நாளில் பரசலூர் என வழங்கும் த. ஊ. பே. 1976, ப. 203).

(தக்கயாகத்தில் உடனிருந்த தேவர்களின் பாவங்களைத் தண்டனையால் பறித்ததால் இப்பெயர் பெற்றது. தி. தொ. பு. IV சு. உரை, 1949, ப. 536).

|மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து கிழக்கே 12 கி. மீ. இல் உள்ளது.|

**பனங்காட்டூர்: (திருப்பனங்காட்டூர், திருவன்பார்த்தான் பனங்காட்டூர்)**

தொண்டைநாட்டில் உள்ளது இவ்வூர்.

செல்வம் நிறைந்த இவ்வூர்க்குச் சென்ற சுந்தரர் 'விடையின் மேல் வருவானை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3348).

(இவ்வூர்த் தலமரம் பனைமரம். எனவே இப்பெயர் பெற்றது. வன்பார்த்தான் என்ற சிற்றூரை அடுத்துள்ளது. தி. தொ. பு. VI சு. உரை, 1953, ப. 221).

|காஞ்சிபுரம் நிலையத்திற்குத் தென்மேற்கே 15 கி. மீ. இல் உள்ளது. |

**பனந்தாள்: (திருப்பனந்தாள்)**

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையிலுள்ளது இவ்வூர். பனை தலமரம்ஆதலாலும் பனையடியில் (தாளில்) இறைவன் எழுந்தருளியிருப்பதாலும் பனந்தாள் என்று ஊர்ப் பெயர் அமைந்தது.

இவ்வூர்க் கோயிலிலிருக்கும்இறைவன் திருமேனி நிற்கும் தன்மை கண்டு கும்பிட அரசன் ஆசை பொங்க யானை

முதலியவை எல்லாம் பூட்டவும் இறைவன் திருமேனி நேர் நிற்கவில்லை. அரசன் இரவும் பகலும் தீராக் கவலையில் ஆழ்ந்தான் (853). குங்குலியக்கலய நாயனார் அரசனின வருத்தம் கேட்டு இறைவனை வணங்க வந்து செழுமலர்ச் சோலை சூழ்ந்த திருப்பனந்தாளை அடைந்தார் (855). இறைவன் திருவுருவை நேர் நிறுத்தத் தாமும் இறைவன் திருமேனியிற் பூண்டகயிற்றைத் தம் கழுத்தில் பூட்டி இழுக்க இறைவன் திருவுருவம் நேரே நின்றது (858).

திருஞானசம்பந்தர், உலகில் நிலைபெற்ற இவ்வூர் இறைவனைக் 'கண் பொலி நெற்றியினான்' என்ற பதிகம் பாடி வணங்கினார்.

(திருப்பனந்தாள் என்னும் பழம்பதி பனங்காட்டில் எழுந்த ஊராகத் தெரிகிறது. த. ஊ. பே. 1976, ப. 70.

கோயிலினகத்தே உள்ள பனை மரத்தின் அருகே இறைவன் தலை சாய்த்தருளினார். அக்கதை தாடகை மாலை சாத்தும் போது ஆடை நெகிழ அதனை இரு முழங்கையாலும் இடுக்கிக் கொண்டு மாலை சாத்த இயலாத போது இறைவன் திருமுடிசாய்த்து மாலையை ஏற்றனன் என்பதாம். தி. தொ. பு. II சு. உரை, 1940, ப. 1110.

இக்கோயிலுக்குத் தாடகையீச்சரம் எனவும் பெயருளது. மூவர் தேவாரம் – தலமுறை 1968, ப. 313.)

[கும்பகோண நிலையத்திற்கு வடக்கே 15 கி. மீ. இல் உள்ளது.]

**பனையூர்: (திருப்பனையூர்)**

சோழநாட்டில் காவிரித் தென்கரையில் உள்ள ஊர் தலமரம் பனை ஆதலால் இப்பெயர் பெற்றது.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க் கோயிலுள் இறைவனைப் பணிந்து 'அரவச் சடை மேல்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2417).

சுந்தரர் இறைவனிடம் பெற்ற பொற்கட்டிகளை உடன்

கொண்டு திருப்பனையூர் சென்றார் (3206). இவ்வூரின் புறத்திலே இறைவன் திருவருட் கூத்தினொடு எதிர்காட்சி காட்டி அருளினார். பெருகிய விருப்பினால் நிலமுற விழுந்து வணங்கி 'மாடமாளிகை' என்ற பதிகத்தில் 'ஆடுமாறு வல்லார் அவரே அழகியரே' என்று பாடி அருள் பெற்றுடன் சென்றார் (3207). வளமிக்க சீர்ப்பனையூர் மக்கள் துதிக்கத் திருவாரூர்க்குச் சுந்தரர் சென்றார் (3208).

[திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

# பா

**பாச்சில்:** *காண்க:* **பாச்சிலாச்சிராமம்**

**பாச்சிலாச்சிராமம்:** **(திருப்பாச்சிலாச்சிராமம், பாச்சில்)**

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் இவ்வூர் உள்ளது. இங்குத் திருஞானசம்பந்தர் வணங்கச் சென்ற போது (2208) இந்நகரில் கொல்லி மழவன் பெற்ற பெண், முயலகன் என்ற நோயால் வருந்த அவளை அவ்வூர்க் கோயில் இறைவன் திருமுன்பு இட்டு வைத்தான் (2210). அப்போது திருஞானசம்பந்தர் எழுந்தருளும் செய்தி கேட்டு மகளை அவ்விடத்தே விட்டு அவரை வரவேற்க விரைந்து சென்று (2211) ஊரை அலங்கரிக்க ஆணையிட்டு முன்னர்ச் சென்று சம்பந்தரைத் தொழுதான் (2212). அவரை மணி வீதியில் கொண்டு சென்றான் (2213). வீதி கடந்து கோயில் கோபுரத்துக்கருகில் முத்துச் சிவிகையிலிருந்து சம்பந்தர் இறங்கி வாயிலைப் பணிந்து இறைவன் கோயிலை வலம்வந்தார் (2214). கொல்லி மழவனின் பெண் உணர்வின்றி நிலத்தில் கிடந்ததைப் பார்த்துக் கேட்க மழவன் கூறச் சம்பந்தர் யாவும் அறிந்து 'துணிவளர்'. என்ற பதிகம் பாடினார். அக்கன்னியை விட்டுப் பிணி நீங்கியது (2217).

இவ்வூர்க்குச் சுந்தரர் தொண்டர்களுடன் சென்றார் (3232). சென்று, திருக்கோபுரம் இறைஞ்சி முன்றில் வலம்வந்து இறைவன்முன் பொருள் பெறும் காதலினால் விருப்பம் பெருகத் துதித்தார். இறைவன் பொன் அருளாத தால் திருமுன்பு நின்று (3233) திருத்தோழமைப் பணி யால் வருந்தித் தொண்டர்களிடம் முறையிடுவது போல 'வைத்தனன் தனக்கே' என்று பாடி வணங்கினார் (3235). கடைக்காப்புப் பாடியவுடன் இறைவன் நிதிக்குவை அளித் தார். இறைவன் கருணையை எண்ணி வணங்கி அவ்வூரில் தங்கியிருந்து அருகிலுள்ள பலபதிகளையும் வணங்கி வந் தார் (3236).

(திருவாசி என இவ்வூர் வழங்கப் பெறும்.)

/திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிற்கு வடமேற்கே 12 கி.மீ. இல் உள்ளது./

**பாசூர்: (திருப்பாசூர்)**

தொண்டை மண்டலத்தில் உள்ளது இவ்வூர். மருத நிலத்தில் இவ்வூர் அமைந்துள்ளது.

திருநாவுக்கரசர் இங்குச் சென்றார் (1603). அவர் சிந்தையில் விருப்பார்வம் மிக இறைவனை (1604) 'முந்தி மூவெயிலெய்த' என்ற திருக்குறுந்தொகையும், 'விண்ணாகி' என்ற திருத்தாண்டகமும், திருநேரிசையும் பாடி இறை வன் அருள்பெற்றார் (1605). (இங்குப் பாடிய நேரிசை கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்றார் (2909). இச்செழும்பதியோர் வரவேற்றனர். இறைவன் கோயிலைச் சம்பந்தர் விருப்புடன் வலங்கொண்டு தாழ்ந்து வணங்கி எழுந்த போது மேனி முகிழ்ப்பச் 'சிந்தையிடையார்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2910). இப்பதியில் தங்கியிருந்தார் (2911).

(சந்திரன் வணங்கி அருள் பெற்ற தலம், கரிகாலன்

மீது சமணர் ஏவிய பாம்பை இறைவன் தடுத்து ஆட்டிய தாகக் கூறுவர். தி. தொ. பு. II சு. உரை, 1940, ப. 1431).

[திருவள்ளூர் நிலையத்திற்கு வடமேற்கே 7 கி. மீ. இல் உள்ளது.]

**பாடலிபுத்திரம்:**

**திருப்பாதிரிப்புலியூர்க்குப்** பக்கத்திலிருந்த இவ்வூர் அழிந்துவிட்டது. இதனுள் சமணர் பள்ளி, பாழி முதலியன இருந்தன. திருநாவுக்கரசர் இவ்வூரை அடைந்து சமண் பள்ளியில் மெய்யுணர்வு பெறச் சேர்ந்தார் (1303). பின்னர் அவர் திருநாவுக்கரசர் சிவநெறி அடைந்து சிவனருளால் பேரிடர் நீங்கியதை இந்நகர்ச் சமணர் கேட்டுப் பொறாது (1344) மருண்டார். இச்சமணர் மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த பல்லவ மன்னன் **திருவதிகையில்** இறைவனுக் குக் குணபரவீச்சரம் எடுக்க, இவ்வூரிலிருந்த சமண்பள்ளி களையும்.பாழிகளையும் இடித்தான் (1411).

(அசோக மன்னன் ஆண்ட **பாடலிபுத்திரத்தின்** பெய ரால் இப்பெயர் அமைந்தது என்பர். தி. தொ. பு. III சு. உரை, 1943 ப. 50)

[திருப்பாதிரிப்புலியூர் கடலூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 3 கி. மீ. உள்ள நிலையம்.]

**பாண்டிக் கொடுமுடி**: காண்க: **கொடுமுடி**

**பாதாளீச்சரம்**: (**திருப்பாதாளீச்சரம், பாம்பணி**)

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். (கோயிலின் பெயர் ஊர்க்காயிற்று என்பர்.)

இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'மின்னியல் செஞ் சடை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2794).

(இன்று **பாமணி** என வழங்கப் பெறும். மூவர் தேவாரம், திருப்பனந்தாள் மடப்பதிப்பு, 1968. ப. 980).

[நீடாமங்கலம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கில் 8 கி. மீ. இல் உள்ளது.]

**பாதிரிப்புலியூர்:** (திருப்பாதிரிப்புலியூர்)

தொண்டை நாட்டில் உள்ளது இவ்வூர். கல்லைப் பூட்டிக் கடலில் பாய்ச்சிய திருநாவுக்கரசரை கடலரசனாம் வருணன் இவ்வூர்ப் பாங்கில் கொண்டு சேர்த்தான் (1396). மெய்யடியார் கூட்டம் திருநாவுக்கரசரைக் கண்டு மகிழ்ச்சி யால் 'அர' ஒலி எழுப்பினர் (1397). தொண்டர்முன் இவ் வூர் இறைவனை வணங்கி அருணெறி விளங்க (1398) 'ஈன்றாளுமாய்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (1399).

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்கு வந்து (2860) இறை வன் மீது 'முன்ன நின்ற' என்ற பதிகம் பாடி வணங்கி னார் (2861).

[கடலூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 3 கி.மீ. இல் உள்ள நிலையம்.]

**பாம்பணி:** (திருப்பாம்பணி, பாதாளீச்சரம்)

சோழ நாட்டில் உள்ளது இவ்வூர்.

சுந்தரர் இவ்வூர்க்குச் சென்று இங்குள்ள பாதாளீச் சரம் என்ற கோயிலுள்ள இறைவனை வணங்கினார் (3866,3867). **பாம்புணி** என்று முற்காலத்தில் பெயர் பெற் றிருந்தது. இப்பொழுது அப்பெயர் **பாமணி** என மருவி யுள்ளது. த. ஊ. பே. 1976, ப. 348.)

[நீடாமங்கலம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 8 கி.மீ. இல் உள்ளது.]

**பாம்புரநகர்:** காண்க: **பாம்புரம்**

**பாம்புரம்:** (திருப்பாம்புரம், பாம்புரநகர்)

சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது.

இவ்வூர். திருஞானசம்பந்தர் இங்கு வந்து இறைவனைப் பணிந்து 'சீரணி திகழ்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2436).

[பேரளம் சந்திப்பிலிருந்து வடமேற்கே 7 கி. மீ. இல் உள்ளது.]

**பாலைத்துறை: (திருப்பாலைத்துறை)**

சோழ நாட்டில் உள்ள ஊர்.

இங்குச் சென்ற திருநாவுக்கரசர் 'நீலமாமணிகண்டத்தார்' என்ற திருக்குறுந்தொகை பாடி இறைவனை வணங்கினார் (1463). திருஞானசம்பந்தர், துதித்துச் சொல்லப் பெறும் இவ்வூரிற்குச் சென்று இறைவனைப் பணிந்து சென்றார் (2262).

(இங்குச் சம்பந்தர் பாடிய பதிகம் கிடைத்திலது.)

பாலை மரங்கள் நிறைந்த துறையாக இது முற்காலத்தில் இருந்ததாகத் தோன்றுகிறது. த. ஊ. பே. 1976, ப. 184).

[பாபநாசம் நிலையத்திலிருந்து வடகிழக்கே 2 கி. மீ. இல் உள்ளது.]

**பாற்றுறை: (திருப்பாற்றுறை)**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர். திருஞானசம்பந்தர் அடியார்களுடன் இவ்வூர்க்குச் சென்று 'காரார் கொன்றை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2246).

(மார்க்கண்டேயர் தம் சிவபூசைக்குப் பால பெறாது இறைவனை வேண்டச் சிவனருளால் பால் பெருகியதால் இப்பெயரை இவ்வூர் பெற்றது. தி. தொ. பு. IV க. உரை. 1949, பக். 426-427)

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 14 கி. மீ. இல் உள்ளது.]

# பி

**பிடவூர்:** (திருப்பிடவூர்)

சோழ நாட்டில் உள்ளது இவ்வூர். திருக்கயிலையில் சேரமான் பெருமாள் பாடிய 'திருவுலாப்புற'த்தை உடனிருந்து மாசாத்தனார் கேட்டார். அதனை இவ்வுலகில் வேதியர்கள் வாழும் இவ்வூரில் வெளிப்படக் கூறி இவ்வுலகில் விளங்கிட நிலை நாட்டினார் (4280).

(இப்போது இவ்வூர் திருப்பதட்டுர் என வழங்கப் பெறும். இக்கோயிலிலுள்ள கல்வெட்டுக்களிலிருந்து இது 'பிடவூர் நாட்டுப் பிடவூர்' என அறியலாம். தி. தொ. பு. VII சு. உரை. 1954, ப. 634 காண்க: புறநானூறு, 395 பக். 19-21).

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 32 கி. மீ. இல் உள்ளது.]

**பிரமபுரம்:** காண்க: **கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சிரபுரம், சீகாழி, தோணிபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.**

(சீ) காழிக்குரிய பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று (1912). பிரமன் பூசித்ததால் இப்பெயர் வந்தது (மூவர் தேவாரம் - தல முறை 1968, ப. 81) திருஞானசம்பந்தர் பிறந்த ஊர். 'தோடுடைய செவியன்' என்ற பதிகம் பாடிச் சம்பந்தர் தம் தந்தைக்குப் பிரமபுர மேவிய இறைவனின் அடையாளங்கள் சொன்னார் (1974). கரும்பும், செந்நெல்லும், வாழையும், கமுகும் உடன் வளரும் மருத நிலம் நிறைந்தது இவ்வூர் (2154). இவ்வூரில் இறைவன் விரும்பி அமர்ந்துள்ளான் (2157).

[சிதம்பரத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

# பு

**புக்கொளியூர்:** (திருப்புக்கொளியூர், அவிநாசி)

இவ்வூர் கொங்கு நாட்டில் உள்ளது.

சுந்தரர் தம் நண்பராம் சேரமான் பெருமானைக் காணவிரும்பிச் சோழ நாட்டை விட்டகன்று கொங்கு நாடடைந்து அங்கு இறைவனின் செல்வம் நிறைந்த திருப்புக் கொளியூரை அடைந்தார் (4232). மறையோர் வாழும் இப்பதியின் மாடவீதி அடைந்தார். இங்கு எதிரெதிராக இருந்த இரு மனைகளில் ஒன்றில் அழுகை ஒலி எழுந்தது. மற்றொன்றில் மங்கல ஒலி எழுந்தது. இரண்டும் உடன் நிகழ்வதன் காரணத்தைச் சுந்தரர் அறிந்தார். ஐந்து வயது நிரம்பிய இரு அந்தணச் சிறுவன் மடுவில் குதித்தபோது ஒருவனை முதலை விழுங்கியது. தப்பிப்பிழைத்த பிள் ளைக்கு முந்நூல் அணிந்தது மங்கல ஒலி எழுந்த மனை ஒன்றாகும். இழந்த பெற்றோரின் அழுகை எழுந்த மனை மற்றொன்றாகும் (4234). இதனை கேட்ட சுந்தரர் தம்மை வணங்கியவர்கள் பிள்ளையை இழந்த பெற் றோர் (4235) என அறிந்தார். அவர்களுடைய துன் பம் போக்க அம்மடுவிற்குச் சென்று 'எற்றான் மறக் கேன்' என்ற பதிகம் பாடி (4239) முதலை உண்ட பிள்ளையை அழைப்பித்துப் பெற்றோர்களித்துப் பின் இறைவனை வணங்கிச் சென்றார் (4242).

(அம்பிகை தவஞ்செய்து இறைவனை மணந்து வலப் பாகம் பெற்றாள் என்பது இத்தல வரலாறு. 'காசியில் வாசி அவிநாசி' என்பது கொங்கு நாட்டில் வழங்கும் பழ மொழி இவ்வூர்ச் சிறப்பை உணர்த்தும். இவ்வூர் இறை வன் பெயர் அவிநாசி. இப்பொழுது பழைய பெயர் மறைந்து அவிநாசி என்பதே ஊர்ப் பெயராக வழங்கி வருகிறது. தி. தொ. பு. VII சி. உரை. 1954, ப. 605)

[திருப்பூர் நிலையத்திலிருந்து வடமேற்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

புகலி: (திருப்புகலி)

காண்க: கழுமலம், காழி, கொச்சைவயம். சண்பைநகர்,

**சிரபுரம், தோணிபுரம், பிரமபுரம், புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.**

திருஞானசம்பந்தர் பிறந்த ஊர்க்குரிய பன்னிரண்டு பெயர்களில் இதுவும் ஒன்று (1912). இவ்வூரில் பெரியநாயகி அம்மையுடன் திருத்தோணியில் இறைவன் அமர்ந்துள்ளார் (1918). இவ்வூரில் சம்பந்தர் பிறந்ததால் 'புகலித் திருஞான சம்பந்தர்' என மக்கள் போற்றினர் (1899). மேலும் புகலியின் அண்ணலார் (2629), ஆண்டகையார் (1523), சிவக் கன்று (3833), செம்மலார் (2871), செல்வர் (2952), ஞான புங்கவர் (2752), ஞானபோனகர் (2198), பிரான் (2395), பிள்ளையார் (1029), புண்ணியனார்(2162), புனிதர் (2107), பெருந்தகையார்(2895), வள்ளலார் (1544), வாணர் (3012) எனப் போற்றினர். மேலும் அவர் பிறந்த இவ்வூரையும் குடியையும் சேர்த்து அந்தணர் (1660), கவுணியர் (1536), பூசுரர் (2392), மறையவர்(2238), வேதியனார்(2346),வைதிக சேகரர் (2554) எனப் புகழ்ந்தனர். இவ்வூரின் அரசர் போலப் போற்றப் பெற்றுக் கோ (1529), காவலனார் (2117), மன்னர் (1546), வேந்தர் (1549) எனவுங் கொண் டாடினர். இவற்றில் 'புகலி வேந்தர்' என்ற தொடரே பெரிதும் வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

திருநாவுக்கரசர் இங்குச் சென்று (1445) பின் பலவூர் களுக்குச் சென்று திரும்பவும் இவ்வூர்க்கே வந்து சேர்ந் தார் (2173).

கணநாதர் என்னும் நாயனார் இவ்வூரில் பிறந்தார் (3929).

தில்லையை விட்டுப் புகலியை அடைந்து இறைவனை வணங்கச் சேரமான் பெருமாள் சென்றார் (3808).

பிள்ளையார் திருவவதாரம் செய்த பெரும் புகலியை மிதிக்க அஞ்சிப் புறத்தே வணங்கி வலம் வந்தார் சுந்தரர் (258).

(சூரபதுமன் தந்த துன்பம் பொறுக்க முடியாமல் முருகனைத் தந்தருளுமாறு தவம் கிடந்த தேவர்கள் இறை

வனைப் புகலடைந்ததனால் பெற்ற பெயர் இது என்பர். தி. தொ. பு. IV சு. உரை, 1949, ப. 23)

[சிதம்பரம் நிலையத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது.]

**புகலூர்: (திருப்புகலூர், பூம்புகலூர்)**

சோழ நாட்டில் உள்ள இவ்வூர், காவிரியின் தென் கரையில் உள்ளது. பிறவிக்கஞ்சிய உயிர்கள் புகலடையத் தக்கது ஆதலால் **புகலூர்** எனும் பெயர் வந்தது என்பர். (தி. தொ. பு. II சி. உரை. 1940, ப. 1334).

முகில் சூழ்ந்த நறும் சோலைகளில் நெருங்கிய ஒளி பொருந்திய மாட வீதிகளையுடையது இவ்வூர் (1016). சிவ பெருமான் விரும்பும் ஊர் இது. சோழர் பொன்னி நாட்டில் மலர் நிறைந்த பெரிய சோலையும் பொய்கையும் சூழ்ந்த ஊர் (1017). புகழ் மிக்க பழைமையான ஊர். நல்லடியார் மனம் போல் அணிந்த திருநீற்றொளியால், இரவுமட்டு மன்றிக் கருவண்டுகளும் களங்கமின்றி விளங்கும் (1018). சோலையில் வண்டுகள் பூமரக் கிளைகளின் பக்கத்தில் பறத் தலால் மலர்களிலிருந்து தேன் பொழியும். குளிர்ந்த சோலை களில் நாகணவாய்ப்புட்கள் திருப்பதிகங்களாம் இனியதேனி னைப் பொழியும். வண்டுகள் பாடக் குளத்துத் தாமரை மலர்களில் கண்ணீர் (கள் + நீர்) அரும்பும். இறைவன் திருப் பாடல்களைக் கேட்டு அன்பர் முகத் தாமரையும் கண்ணீர் அரும்பும் (1020). இத்தகு பெருமையும் வளமும் சிறந்த ஊரில் முருக நாயனார் பிறந்தார் (1021). தாமரை இலை மேல் நண்டுகள் துயில, வயலின் மடை மேல் கயல் மீன் துள்ளும் இவ்வூரில் நிலையாகத் தங்கி வாழ்ந்தார் (1022). இங்கு இறைவனை வர்த்தமானவீச்சரம் என்ற கோயிலில் பூசித்து வந்தார் (1028).

திருநாவுக்கரசர் இவ்வூரிலமர்ந்தருளும் இறைவனைக் கும்பிட்டேத்தும் விருப்புடன் மிகுந்த காதல் வேட்கை கூரத் **திருவாரூரிலிருந்து** புறப்பட்டார் (1495). அப்போது

திருஞானசம்பந்தர் இங்கு வந்து முருகநாயனார் மடத்தில் தங்கியிருந்தார் (1496). இவ்வூர்க்குத் திருநாவுக்கரசர் எழுந் தருளும் செய்தி கேட்டு அவரை எதிர்கொள்ள விரும்பித் தொண்டர் குழுவுடன் சென்று வரவேற்றார் (1497). இரு வரும் ஒன்றாகக் கலந்து மகிழ்ந்தனர் (1498). திருவாரூர்க்குத் திருஞானசம்பந்தர் செல்லத் திருநாவுக்கரசர் இம்மூதூரின் இறைவனை எண்ணி அன்பு நிறையக் கண்ணீர் உடலினை நனைக்கப் பணிந்தார் (1503). 'பகைத்திட்டார்', 'செய்யர் வெண்ணூலர்' என்ற பதிகங்கள் பாடி வணங்கிக் காலந் தோறும் விரும்பிக் கும்பிட்டுத் திருப்பணி பல செய்து பல நாள் இங்குத் தங்கினார் (1504). சிலநாள் கழித்த பின் திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குத் திரும்பி வந்தார் (1506). சிலநாள் முருக நாயனார் மடத்தில் சிறுதொண்ட நாயனார் திருநீலநக்க நாயனார் ஆகியோருடன் தங்கித் திருத்தொண்டின் நிலை உணர்ந்தார் (1508). பிறபதிகள் தொழப் பொன்மணிமாடப் **புகலூரைத்** தொழுது புறப் பட்டார் (1510). செந்தமிழ் நாட்டில் பல தலங்கட்கும் சென்று இறைவனைப் பணிந்து பொய்ப்பாசம் போக்க இவ்வூர்க்குத் திரும்பவும் அப்பர் வந்து சேர்ந்தார் (1677). பொய்கை சூழ்ந்த **பூம்புனலூர்** இறைவனை வணங்கி நையுமனப் பரிவோடு திருமுன்றிலின் உழவாரப் பணி செய் தார் (1675), 'நின்ற' திருத்தாண்டகமும், தனித்தாண்டக மும், இறைவன் பதிகளைத் துதிக்கும் திருத்தாண்டகமும், குறைந்த திருநேரிசையும், தனித்திரு நேரிசையும் பாடி வணங்கினார் (1679). ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத் திருப்பதிகம், பாவநாசப் பதிகம், வினாவிடைத் திருத் தாண்டகம் போன்ற பிறவும் பாடினார் (1680). திருக் கைப் பணி செய்யும் போது முன்றிலில் உழவாரம் நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும், மணியும் பொலிந்திலங்க இறைவன் அருள் செய்தார். அவற்றைப் பருக்கைக் கல்லா கக் கருதித் தாமரைக் குளத்தில் வீசி எறிந்தார் (1682). மேலும் அப்பரைச் சோதிக்க அவர் முன் இவ்வூரில் தேவ மகளிர் வந்து ஆடினர். அப்போது அவர் மனங்கலங்காது இறைவன் பணியிலீடுபட்டிருந்தார் (1687). இந்நிலைமை யில் ஏழுலகமும் பரவச் சிலநாள் இவ்வூரில் தங்கியிருந்தார்

(1690). 'தன்னைச் சரணென்று' என்ற பாடலில் தம்மை இறைவன் சேவடிக் கீழ் இருத்திடும்படி உருகிப் பாடினார் (1691). பின் 'எண்ணுகேன்' என்ற பதிகம் பாடி இறைவனடி சேர்ந்தார் (1692).

தாமரைப் பூந்தடங்கள் சூழ்ந்த வயல்கள் நிறைந்த புகலூரைத் திருஞானசம்பந்தர் தொழவந்தார் (2385). உலகில் பெருகி நிறைந்த செல்வமிகும் புகலூர்ப் பக்கத்தில் சென்றார் (2386).

இவ்வூர்த் திருத்தொண்டரொடு முருக நாயனாரும் மெய்ம்மகிழ்ந்து விருப்புடன் சம்பந்தரை எதிர் கொண்டு அழைத்தனர். கோயிலை அடைந்து மலை போன்ற கோபுரத்துப் புகுந்து அழகிய முன்றிலின் பக்கத்தில் வலமாக வந்து ஒன்றுபடு சிந்தையுடன் கோயிலுள் சென்றார் (2387). தாழ்ந்து வீழ்ந்து எழுந்து நெக்குருகும் சிந்தை அன்பு பொங்கக் கண்ணீர் வீழ இறைவன் மீது 'வெங்கள் விம்மு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2388). இப் பதியிலமரும் நாளில் இறைவனின் வர்த்தமானீச்சரம் வணங்கிப் 'பட்டம்' எனும் பதிகம் பாடி முருக நாயனார் தொண்டினைச் சிறப்பித்தார் (2389). இப்பதியில் தங்கியிருந்தபோது அப்பர் தம்தொண்டர் குழாத்துடன் வந்தார் (2390). தங்களன்பின் முறைமையால் தனித்தனியே தாழ்ந்து வணங்கி நல்வரவின் வாய்மை கேட்டு மகிழ்ந்தனர் (2392). அப்பர், திருப்புகலூர் வந்தருளும் பேரருளைப் போற்றி அவர் வாயிலாகத் திருவாரூர்ச் செல்வம் கேட்டு அது காணச் சம்பந்தர் சென்றார் (2394). திருவாரூரில் தங்கியதால் சில நாள் செல்ல அப்பரை விரும்பிப் பொங்கும் சிறப்புடைய புகலூர் தொழ, அருளினால் சம்பந்தர் எண்ணினார் (2415). தாமரைப் பொய்கைகள் சூழ்ந்த புகலூர்க்கு எழுந்தருளினார் (2418).

அப்பரும் முருக நாயனாரும், திருத்தொண்டர்களும் சம்பந்தரை எதிர்கொண்டழைத்துக் கொண்டு கோவிலை அடைந்தனர் (2419). இறைவனை வணங்கிய பின் சம்பந்தர்

முருக நாயனார் திருமனையில் தங்கினார். பல தொண்டர்களுடன் அளவளாவிக் கலந்தருளினார் (2421). 'குறிகலந்தவிசை' என்ற பதிகத்தில் நன்னிலமை சால் புகலூரின் பெருமை கூறிப் பின் ஏனைப் பதிகளையும் தொழ விரும்பினார் (2422).

சுந்தரர், இறைவன் விரும்பும் இவ்வூரைப் பணிந்து இறையருளை நினைத்து திருவாரூர் அடைந்தார் (263). ஒரு சமயம் பங்குனி உத்திரத் திருநாள் வரவும் சுந்தரர் தம் மனைவி பரவையார் கொடைக்குப் பொன்பெற விரும்பித் திருப்புகலூர் இறைவனைப் பணியச் சென்றார் (3200). கோயில் மணிமுன்றில் வலம்கொண்டு இறைவன் முன் வீழ்ந்து அன்பில் துதித்துப் பதிகம் பாடினார் (3201) (இப்பதிகம் கிடைத்திலது). புறம் சென்று திருமுற்றத்தில் ஒரு பக்கமாக இருக்க இறையருளால் சுந்தரர் துயின்றார் (3202). எழுந்த போது சிவனருளால் சுடுமண் கல்லே பொற்கல்லானது கண்டு இறைவனருள் போற்றித் (3204) தலைமேல் கைகூப்பிக் கோயிலுட் புகுந்து காதல் அன்பு பெருகத் 'தம்மையே புகழ்ந்து' எனும் பதிகம் பாடி வணங்கினார் (3205).

(இவ்வூர்க்கு **அக்கினீசம், சரண்யபுரம், புன்னைவனம்** என்ற பெயர்கள் உள).

[நன்னிலம் நிலையத்திலிருந்து கிழக்கே 7 கி. மீ. இல் உள்ளது.]

**புகார்: (பூம்புகார், காவிரிப்பூம்பட்டினம்)**

சோழநாட்டில் உள்ள ஊர்.

மேகங்கள் தங்கும் உயர்ந்த மாடங்கள் நீடிய அழகிய புகார் நகரமாகும் (403). காவிரி ஆறு மிக்க நீர் பரந்து கடலைப் புனிதமாக்கும் தீர்த்தமும் உடைய நகரம் (404). இவ்வூரில் வணிகர் குலத்தில் இயற்பகை நாயனார் பிறந்தார் (405).

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று, 'பரசுபாணியர்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2019). இவ்வூரை அடுத்துத் திருச்சாய்க்காடு உள்ளது. காவிரிப்பூம் பட்டினத்துப் பல்லவனீச்சரம் எனவும் அழைக்கப் பெறும். மாடக் கோயில் அமைப்புடையது.

(காவிரிப்பூம்பட்டினம் என்னும் புகார் முற்காலத்தில் சோழர் தலைநகரமாகும். பட்டினப்பாலை (185, 192), சிலப்பதிகாரம் (வஞ்சினமாலை) போன்ற நூல்களில் இதன் சிறப்பை விரிவாகக் காணலாம்.)

/சீர்காழி நிலையத்திற்குத் தென்கிழக்கே 16 கி. மீ. இல் உள்ளது./

**புத்தூர்:**

(புதியனவாகத் தோன்றும் ஊர்கள் புத்தூர் என்று பெயர் பெறும். த. ஊ. பே. 1976, ப. 31)

1. தொண்டை நாட்டிலுள்ளது இவ்வூர்.

சுந்தரர்க்கு இவ்வூரில் வாழ்ந்த சடங்கவி சிவாசாரியர் மகளை மணம் பேச முதியோர்களைச் சுந்தரர் தந்தை சடையனார் அனுப்பினார் (153).

வாத்தியங்கள் ஒலிக்கவும், தாமரைகள் மேலே கிளர்ந்து வரவும், பெருங்குடைகள் நெருங்கிச் செல்லவும், நெருங்கிய கொடிகள் ஆடவும், சுந்தரர் மணம் வந்த அன்று மறை யோர் வாழும் புத்தூர் 'மணம் வந்த புத்தூர்' என்ற பெயர் பெற்றது (169). சிவபெருமான் சுந்தரரை அடிமையென்று வழக்கிட்டதால் புத்தூர் மணம் தடைப்பட்டது (223). எனவே இப்போது இது 'மணம் தவிர்ந்த புத்தூர்' என வழங்கப் பெறுகிறது.

/விருத்தாசலம் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 33 கி. மீ. இல் உள்ளது./

2. (திருப்பத்தூர்) பாண்டி நாட்டில் உள்ள ஊர் இங்குள்ள கோயில் திருத்தளி எனப்படும். இங்குச் சென்ற திருநாவுக்கரசர் இறைவனைப் பணிந்து (1667)'மின்காட்டுங் கொடி மருங்குல்' என்ற பதிகம் பாடினார்.

திருஞானசம்பந்தர், செங்கண் இடபக்கொடி உயர்த்திய இறைவனின் இவ்வூரைச் சார்ந்து சிலநாள் தங்கியிருந்தார் (2783). இங்கு 'வெங்கள் விம்மு வெறியார்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கிப் பின் பணிந்து சென்றார் (2784).

இவ்வூர்க்குச் சென்ற சுந்தரர் இறைவனை வணங்கிச் சென்றார் (3837) (இங்குப் பாடிய பதிகம் கிடைக்க வில்லை.) (இப்போது திருப்பத்தூர் என வழங்குவர்.).

[மதுரைச் சந்திப்பிற்கு வடகிழக்கே 61 கி. மீ. இல் உள்ளது.]

3. சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையிலுள்ள ஊர்.

(காண்க: அரிசிற்கரைப்புத்தூர்)

இவ்வூர்க்குச் சுந்தரர், தொண்டர்கள் எதிர்கொள்ளச் சென்று 'மலைக்குமகள்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3215).

[கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கில் 10 கி. மீ. இல் உள்ளது.]

புலியூர்: (திருப்புலியூர், தில்லை, பெரும்பற்றப்புலியூர்)

(முனிவர் தேவர் முதலிய எல்லார்க்கும் பெரும்பற்றாக உள்ள ஊர் என்பதால் பெரும்பற்றப்புலியூர் எனவும் கூறப்பெறும்.)

ஒப்பற்ற தவம் செய்த புலிக்கால் முனிவர் (வியாக்கிர பாதர்) என்பவரால் அருச்சிக்கப் பெற்றது. எல்லாப் பெருமைகளும் வந்து சேரும் பெரும்பற்றப்புலியூர் எனும்

**புள்ளிருக்கும் (திரு) வேளூர்: (திருப்புள்ளிருக்கும் வேளூர்)**

சோழ நாட்டில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவனை வணங்கி 'வெள்ளெருக்கு', 'ஆண்டானை' எனும் பதிகங்கள் பாடி வணங்கினார்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்கு வந்து இறைவன் கோயிலை அடைந்தார். தக்க பேரன்புடன் வணங்கிக் கழுகரசர்களான சம்பாதி, சடாயு என்போர் போற்றிச் செய்த பூசனையை எடுத்துப் பாராட்டிக் 'கள்ளார்ந்த பூங்கொன்றை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2184).

(சடாயுபுரி, சம்பாதிபுரி எனக் கழுகரசர்களின் பெயருடன் சேர்த்து இவ்வூர்ப் பெயரை வழங்குவர். இராமாயணக் கதைத் தொடர்கள் பதிகத்தில் காணப்பெறும் (மூவர் தேவாரம், தலமுறை, 1968, ப. 213-218).

(இப்போது இவ்வூர் வைத்தீசுவரன் கோயில் என வழங்கப்படுகிறது.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 14 கி. மீ. இல் உள்ளது.]

**புறம்பயம்: (திருப்புறம்பயம்)**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்றார் (2138). இவ்வூர் இறைவன் மீது வண்ணமிகுந்த இசையுடன் 'மறம்பய மலைந்தவர்' எனும் பதிகம் பாடி வணங்கினார் (2139).

இவ்வூரைப் பணிதற்கு உள்ளம் மிக்கெழ 'அங்க மோதி' என்ற பதிகத்தில் 'செல்வப் புறம்பயந்தொழப் போதுமே என்ற குறிப்புடன் பாடிச் சென்றார் (3250). இத்தலத்தில் அமர்ந்த சுந்தரர் வெண்ணெய்நல்லூரில் வேதியனாய் வந்து ஓலை காட்டித் தம்மை ஆண்டவர் இப்பதியில் வந்தது

என்ன தவமோ என எண்ணி இறைவன் கோயில் வாயிலைச் சேர்ந்தார் (3251). கோபுரம் முன் வணங்கித் தொண்டரோடு உள்புகுந்து இறையடி போற்றிக் கைகூப்பித் தொழுது நின்று மலர்தூவி எட்டு அங்கத்தாலும், ஐந்து அங்கத்தாலும் வணங்கும் முறைப்படி நிலத்தின் மேல் விழுந்து பலமுறை வணங்கினார் (3252). இறைவன் அருள் பெற்று, அடி பணிந்து, மீண்டும் புறத்தே சென்று சேர்ந்தார் (3253).

(ஊழி வெள்ளம் உள்ளே வராமல் தலைப்பட்டுப் புறத்தே நின்றதால் இப்பெயர் பெற்றது எனபர். தி. தொ. பு. IV சு. உரை. 1949, ப. 273).

[கும்பகோண நிலையத்திற்கு வடமேற்கே 10 கி.மீ.இல் உள்ளது.]

புறவம்: காண்க: கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சிரபுரம், சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, பூந்தராய், வெங்குரு, வேணுபுரம்.

திருஞானசம்பந்தர் பிறந்த ஊர் இது. இவ்வூர்க்குரிய பன்னிரு பெயர்களில் இதுவும் ஒன்று (1912).

ஊழியின் நீர்ப்பெருக்கால் சூழப்பெற்று மிதந்த ஊர் (260). புன்னை மரங்களின் மணங்கமழும் இடம் (3045).

(சிபியின் யாகத்தில் அவனைச் சோதிக்க இந்திரன் பருந்தாகவும், தீக்கடவுள் புறாவாகவும் வந்தபோது, புறாவின் எடைக்குச் சமமாகச் சிபி தன் தசையை அரிந்து தரவும் போதாதது கண்டு தானே துலையேறினான். அந்தப் பாவம் போகப் புறா வடிவில் வந்த தீக்கடவுள் இங்குப் பூசித்ததால் இப்பெயர் வந்தது (தி.தொ.பு. IV சு. உரை 1949, பக். 23-24).

[சிதம்பரத்திற்குத் தெற்கே 17 கி.மீ. இல் உள்ளது.]

**புறவார்பனங்காட்டூர்: (திருப்புறவார்பனங்காட்டூர்)**

*நடுநாட்டுள் உள்ள ஊர்.*

*இவ்வூர்க்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'விண்ண மர்ந்தன' என்ற பதிகம் பாடி வணங்கிப் பின் மற்ற பதி களைக் கண்டு வணங்கச் சென்றார் (3033).*

*(இப்போது* **பனையபுரம்** *என வழங்கப் பெறுகிறது. புறாவிற்காகத் தன் தசையை அரிந்திட்ட சிபிக்கு அருள் செய்த ஊர் எனபர். தி.தொ.பு.V சு.உரை 1950, ப.1436)*

*(விழுப்புரம் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 17 கி.மீ. இல் உள்ளது.)*

**புன்கூர்: (திருப்புன்கூர்)**

*சோழ நாட்டில் உள்ள ஊர்.*

*திருநாளைப்போவார் நாயனார் இத்தலத்திற்குச் சென்று வெளியே நின்று இசை பாடிச் சிவலோகநாதராம் இறைவனை நேரே கும்பிட நினைந்தவர்க்கு இறைவன் அது நேர்ந்து நந்தியை விலங்க அருள் புரிந்து தம்மைத் திருநாளைப்போவார்க்குப் புலப்படுத்தினார் (1057).*

*அவ்வடியார் கோயிலுக்குப் பின்புறமுள்ள இடம் பள்ள மாக இருப்பதைக் கண்டு விருப்புடன் தோண்டினார் (1058).*

*திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கினார். இவ்வூர்க்கு அருகில் நீடூர் உள்ளதால் இவ்விரு தலங்களையும் வைப்புமுறைப் படுத்திப் 'பிறவாதே தோன்றிய' என்ற பதிகம் பாடினார் (1454).*

*திருஞானசம்பந்தர் 'முந்தி நின்ற' என்ற பதிகம் பாடி இவ்வூர் இறைவனை வணங்கினார் (2185).*

*சுந்தரரின் நண்பராம் ஏயர்கோன்கலிக்காமநாயனார் இவ்வூர்க்கு மேலான பல திருப்பணிகள் செய்து இறைவன் அடியே செல்வம் எனக் கொண்டின்புற்றார் (3161).*

வண்டுகள் பாடும் மலர்ச் சோலை சூழ்ந்த இவ்வூர் இறைவன் மீது பதிகம் பாடிச் சுந்தரர் வணங்கினார் (261). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது). மற்றொரு சமயம் நீடூர்ப் பணிந்த பின் இவ்வூரை அடைந்து வணங்கினார் (3307). (இப்போதும் பாடிய பதிகம் கிடைத்திலது). ஏயர்கோன்கலிக்காமரும் சுந்தரரும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு இடைவிடா நட்பினால் ஒப்பற்ற மகிழ்ச்சி பொங்க இத்திருத்தலத்தின் இறைவன் அடியை வணங்கினர். சுந்தரர் 'அந்தணாளன்' என்ற பதிகம் பாடி ஏயர்கோன் பிணி தவிர்த்தருளி நட்புச் செய்த அருளை வணங்கிச் (3560) சிலநாள் இங்குக் கழித்தார் (3561).

/வைத்தீசுவரன்கோயில் நிலையத்திலிருந்து மேற்கே 5 கி. மீ. இல் உள்ளது./

**புனவாயில்**[1] **(திருப்புனவாயில்)**

பாண்டி நாட்டில் உள்ள ஊர்.

உலகம் உய்யச் சிவஞானம் உண்டருளிய திருஞான சம்பந்தர் ஒப்பற்ற இவ்வூரைத் துதித்து வணங்கினார் (2789). இங்கு 'மின்னியல் செஞ்சடை' என்ற பதிகம் பாடினார்.

இவ்வூரைச் சுந்தரர் சென்றடைந்தார் (3864). இறைவன் கோயிலுள் புகுந்து மன ஆர்வமுறச் 'சித்த நீநினையென்னொடு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3865).

(இவ்வூர்க்குப் பழம்பதி என்ற பெயர் உள்ளது. மூவர் தேவாரம், 1968 ப. 1110. புனவாசல் என்பர் த. ஊ. பே. 1976, ப. 226).

/காரைக்குடி நிலையத்திலிருந்து தென்கிழக்கே 40 கி. மீ. இல் உள்ளது./

# பூ

**பூந்தராய்:**

*காண்க:* கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சிரபுரம், தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், வெங்குரு, வேணுபுரம்.

காழிக்குரிய பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று (1912).

திருஞானசம்பந்தர் பிறந்த ஊர். அம்மையும் அப்பனு மாய் உமையும் சிவனும் விடைமீது வந்து பொன்வள்ளத்தில் அளித்த ஞானஅமுதுண்ட ஞானசம்பந்தரின் திறம் கேட்டு அவரை இறைஞ்சுதற்காக அந்தணர் சிறந்து வாழும் இப் பூந்தராய்க்குத் திருநாவுக்கரசர் வந்தார் (2166). பொன் மாடங்கள் நிறைந்தது என்றும் (2905) பழைமையான வளம் பொருந்தியது என்றும் (3044) நிலைபெற்ற பூந்தராய் என் றும் (2950) போற்றப் பெற்றது. இப்பெயரடியாக ஞானசம் பந்தரைப் பூந்தராய் மன்னர் (2092), வள்ளலார் (2304) எனப் போற்றுவர்.

(சங்கநிதி, பதுமநிதி எனும் இரு நிதிகளின் தெய்வங் களும் பூசித்து வரம் பெறப் பூந்தாராய் (பூமாலை) இருந்து பூசித்ததாலும், வராக அவதாரத்தில் பூமியைக் கொம்பிலே கொண்டு வருந்திய பழிபோகத் திருமால் பூசித்ததாலும் (பூ – பூமி, தாராய் - கொம்பிலே தரித்தவன்) இப்பெயர் வந்தது என்பர். தி. தொ. பு. IV சு. உரை. 1949, ப. 23.)

[சிதம்பரம் நிலையத்திலிருந்து தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது.]

**பூந்துருத்தி : (திருப்பூந்துருத்தி)**

காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

ஏழுதலங்களுள் ஒன்று.

திருநாவுக்கரசர் இவ்வூரை அடைந்தார் (1651). விருப் புடன் சென்று திருநடமாளிகை முன் சார்ந்து வலம் வந்து

வணங்கி இறைவன் முன் பரிவொடு தாழ்ந்து அன்பு பொங்கக் கண்ணீர் மழை பொழியத் தம் வசமிழந்தார் (1652). 'திருப்பூந்துருத்தியமர்ந்த ... பொய்யிலியைக் கண் டேன்' என்று தாண்டகமும், குறுந்தொகையும் பாடினார் (1653). பின அங்குத் தங்கும் தன்மை வேண்டி 'நாமடி போற்றுவ' தென்று விருத்தம் பாடித் திருத்தொண்டு செய் தார். இறைவனருளால் திருமடம் ஒன்று செய்தார் (1654). திருஞானசம்பந்தர் அமணரை வாதில் வென்று பாண்டியன் கூனை நிமிர்த்துச் சைவந் தழைப்ப வந்தவர். திருநாவுக் கரசர் இங்கு இருந்தமை கேட்டு விரைந்தவரிடம் செல்லப் பூந்துருத்தியின் புறம்புள்ள வயல் சூழ்ந்த இடத்தை வந்த டைந்தார் (1657). அவர் வரக்கேட்டு மனமகிழ்ந்த அப்பர் சம்பந்தரைக் காணும் விருப்பால் எதிர்சென்றார் (1658). சம்பந்தர் வருமிடத்துத் திருக்கூட்டத்தில் கூடிச்சேர்ந்தார். நெருங்கிய கூட்டத்தின் நெருக்கத்தில் தம்மைச் சம்பந்தர் காணாமல் அவரைத் தொழுது அவரைத் தாங்கிய முத்துச் சிவிகையைத் தாங்குவாருடன் தாமும் ஒருவராகத் தாங்கி வந்தார் (1660). பூந்துருத்திக்கு அருகில் வந்ததும் 'அப்பர் எங்குற்றார்?' எனச் சம்பந்தர் வினவினார். அதுகேட்டு, 'உம்மடியேன் உம்மடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு கிடைக்கப் பெற்று உயர்ந்தேன்' என அப்பர் கூறினார் (1661). சம்பந்தர் சிவிகையிலிருந்து, உடன் இறங்கிப் பதைத் துத் திருநாவுக்கரசினை வணங்கினார். அப்பரும் அவர் வணங்கு முன் வணங்கத் தொண்டர்கள் ஆர்த்தனர் (1662). இருவரும் கலந்தருளி மதி தவழ் சோலைப் பூந்துருத்தி இறை வனைத் தொழுது இன்புற்றுடனிருந்தனர் (1663).

பாண்டி நாட்டில் நடந்தவற்றைச் சம்பந்தர் கூறக் கேட்டு உவந்த (1664) அப்பர் தாமும் பாண்டி நாட்டைக் காண மனம் கொண்டார் (1665). தொண்டை நாட்டுத் தலங்களுக்குச் சம்பந்தர் சென்று பாடி அருள அப்பர் சொல்லியருள அவரும் பூந்துருத்தியைத் தொழுது சென்றார் (1666).

திருஞானசம்பந்தர் காவிரிக் கரையிலுள்ள பூந்துருத்தி இறைவனாம் பொய்யிலியை வணங்கினார். பல திசையி

லிருந்து திருத்தொண்டர்கள் வந்து எதிர்கொள்ள அவர்களுடன் பல பதிகளும் சென்று வணங்கினார் (2249). பூந்துருத்தியில் அப்பரும் சம்பந்தரும் கண்டு மகிழ்ந்த செய்தி சம்பந்தர் புராணத்திலும் விரிவாகக் காணப்பெறுகிறது (2826-2846).

சுந்தரர் இவ்வூர் இறைவனடி தொழுது இறைஞ்சினார் (3225).

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 14 கி. மீ இல் உள்ளது.]

**பூவணம்:** **(திருப்பூவணம்)**

பாண்டி நாட்டில் வையை ஆற்றின் தென்கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூரை அடைந்தார் (1671). கொடிகள் கட்டிய மாடம் நிறைந்த இவ்வூர்த் திருக்கோயிலுள் திருமாலுக்குரிய இறைவன் நேர்தோன்றக் கண்டு வணங்கி 'வடிவேறு திருசூலம்' என்ற தாண்டகம் பாடித் துதித்தார் (1672).

திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்து இறைவனைப் புகழ்ந்து 'அறையார் புனலும்' என்ற பதிகம் பாடினார் (2784). தமிழ் மன்னர் சேர, சோழ, பாண்டியர் மூவரும் வணங்கிய செவ்விய பதியாக இதைத் தம் பதிக முதற் பாடலில் பாடியுள்ளார். (மூவர் தேவாரம், 1968, ப. 1123).

சுந்தரர் தமிழ் மன்னர் மூவருடன் பதிகம் பாடித் தொழ இவ்வூர்க்குச் சென்றார் (3844). இவ்வூர்க்கருகில் நேரே செல்லும் போது தொண்டர்கள் நிலைபெற்ற இவ்வூரைக் காட்டினர். உடனே 'திருவுடையார்' என்ற பதிகம் பாடிப் பணிந்து சென்றார் (3845). சென்று திருக்கோயில் முன்றில் வலம் கொண்டு இறைவன் முன் வீழ்ந்து

பதிகம் பாடி வணங்கினார். (இப்பதிகம் கிடைத்திலது.) வெற்றி பெற்ற மூவேந்தருடன் கூடிச் சென்று இவ்வூரில் தங்கினார் (3846).

[மதுரைச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 22 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**பூவனூர்:** (திருப்பூவனூர்)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இறைவனின் பல கோயில்களை வணங்கி முறைமையில் வழுவாத புகழ் மிக்க இவ்வூரை வணங்கி வந்தடைந்து (2273) பொங்கிய அன்புடன் போற்றிப் பதிகம் அருளினார்.

(இங்குப் பாடிய பதிகம் கிடைக்கவில்லை.)

[நீடாமங்கலம் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 3 கி. மீ இல் உள்ளது.]

# பெ

**பெண்ணாகடம்:** (திருப்பெண்ணாகடம்)

நடுநாட்டில் உள்ள ஊர். கடந்தை என்ற பெயர் தேவாரப் பதிகங்களில் காணப் பெறுகிறது. (மூவர் தேவாரம், பக். 1166-69).

திருநாவுக்கரசர் வளமான தமிழ்ப் பாடி மிகுந்த விருப்பமுடன் பெண்ணாகடம் சென்றார் (1413). மேகம் தங்கும் உயர்ந்த மாடங்களில், வேத ஒலி வளர்க்கும் சீருள்ள அந்தணர் வாழும் செழும் பதியாம் இவ்வூரினகத் தடைந்து இறைவன் தங்கிய தூங்கானை மாடத்தை

அப்பர் போற்றினார் (1414). புல்லிய சமண சமயத்தில் போந்த உடலில் உயிர் தரிக்க விரும்பாமல் இறைவனின் சூல இலச்சினை இட்டருளுமாறு செந்தமிழ் மாலையைப் (1415) 'பொன்னார்ந்த திருவடிக்கொன்றுண்டு விண்ணப் பம்' என்ற விருத்தம் பாடினார் (1416). அப்போது இறை வனருளால் ஒரு சிவபூதம் யாருமறியாமல் வந்து அப்பர் திருத்தோளில் மூவிலைச் சூலக் குறியை விடைக்குறியோடு சாத்தியது (1417). அப்பர் தம் தோளில் திரு இலச்சினை யைக் கண்டு மனமகிழ்ந்து இறைவன் அருள் நினைந்து கண்ணீர் பொழிந்தார். தொழுது விழுந்து ஆசையால் எழுந்த சிந்தையராகித் தாம் உய்ந்ததாகக் கூறினார் (1418). தூங்கானை மாடத்து இறைவனாம் சுடர்க் கொழுந்தின அடிபரவித் திருத்தொண்டு செய்துவந்தார (1419).

திருஞானசம்பந்தர் இவ்வூரணைந்து ஓசை ஓங்கும் தூங்கானை மாடத்திலுள்ள இறைவன் முன் வலம்வந்து பணிந்து 'ஒடுங்கும் பிணி பிறவி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2082). உரிமையாம் நல்லொழுக்கம் தலை நின்ற உயர்ந்த தொன்மையான மரபில், நீண்ட நாள் இல்லற நெறியில் வாழும் குடிகள் செழித்து வளரும் தன்மையுடைய ஊர் பெண்ணாகடம். மேகம் தங்கும் சோலை சூழ்ந்த வளமிக்க முல்லை நிலப் பெருமையை உலகிற்கு விளங்கும் வகையில் நடுநாட்டின் மேற்குத் திசை யில் உள்ள ஊராகும் (4012). இவ்வூர் வணிகர் குடியில் உதித்த கலிக்கம்ப நாயனார் தூங்கானை மாடத்து இறை வன் பணி செய்து வந்தார் (4013).

(பெண் - தேவகன்னியர்; ஆ - காமதேனு; கடம்- வெள்ளையானை; இவர்கள் பூசித்துப் பேறு பெற்றதால் பெண்ணாகடம் எனப் பெற்றது என்பர். தி. தொ. பு. III சு. உரை 1943, ப. 211).

/விருத்தாசலம் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 19 கி. மீ. இல் உள்ளது./

**பெருந்துறை:** *காண்க:* **பேணுபெருந்துறை**

**பெரும்பற்றப் புலியூர்:** *காண்க:* **புலியூர்**

**பெரும்புலியூர்:** *(திருப்பெரும்புலியூர்):*

*சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர்.*

*திருஞானசம்பந்தர் அடியாருடன் இவ்வூர்க்குச் சென்று இறைவன் மீது 'மண்ணுமோர்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2202).*

*(புலிக்கால் முனிவர் பூசித்ததால் இப்பெயர் வந்தது என்பர். தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 371).*

*[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 15 கி. மீ. இல் உள்ளது.]*

**பெருமங்கலம்:** *(திருப்பெருமங்கலம்)*

*சோழநாட்டில் உள்ள ஊர்.*

*ஏயர்கோன்கலிக்காம நாயனார் பிறந்த இடம். பெரு வண்மை யுடைய சோழர்களின் நீர் வள நாட்டில் நிலவிய இடங்களில் பொன் கொழிக்கும் காவிரியின் வடகரையில் கிழக்குப் பக்கம், ஆடும் பூங்கொடிகளுடைய மாடங்களுள் அழகிய நகர், பெருமை நிலை பெற்ற திருப் பெருமங்கலம் என்னும் பெயருடையது (3155). மதில்கள் சூழ்ந்துள்ளன. மதில் ஞாயில்கள் எந்திர வரிசைகள் சூழப்பெற்றுள்ளன. மேகம் தங்கிய மலை என உயர்ந்த மணிமாடங்கள் உள்ளன. ஆண்களும், பெண்டிரும் மகிழ்ச்சியாக இங்கு வாழ்ந்தனர் (3156). அழகிய வீதிகளில் விழாக்கள் நீங்காதிருந்தன. அழகிய முற்றங்கள் சிறுவர்களை நீங்கா திருந்தன. உழவர் குடிகள் உழவுத் தொழிலின் நீங்காத நல்ல வளப்பம் கொண்டிருந்தன (3157). சிவபெருமானிடம் பேரன்புடையவர்கள் கூடி உலகில் மிக்க பெருமையால் சிவனடி பரவும் சிறப்பிலே மிகுந்தது. அச்சிறப்பால் இவ்வூர் சிவபுரி எனப் புகழத் தக்க தகுதியுடையது (3158).*

/வைத்தீசுவரன்கோயில் நிலையத்திலிருந்து வடமேற்கே 6 கி. மீ. இல் உள்ளது./

**பெருமிழலை:**

மிழலை நாட்டைச் சார்ந்த ஊர். வெள்ளாற்றுக்குத் தென்கரையில் உள்ளது.

மாவும், தென்னையும், பலாவும், கமுகும் சூழ்ந்திருக்கும். வீதிகள் தோறும் திருநீற்றின் ஒளிபெருக விளங்கும் ஊர். நீதிவழுவாத நன்னெறியில் ஒழுகும் குடிகளால் விளங்கும் பழைமையான ஊராகும் (1706).

இவ்வூரில் குறுநில மன்னராம் மிழலைக் குறும்ப நாயனார் பிறந்தார் (1707).

/புதுக்கோட்டை நிலையத்திலிருந்து மேற்கே 12 கி.மீ. இல் உள்ளது./

**பெருவேளூர்:** (திருப்பெருவேளூர்)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். மிகுந்த மணமுள்ள பூஞ்சோலைகளுள்ள இவ்வூரைத் திருநாவுக்கரசர் பணிந்து வணங்கினார் (1482). 'மறையணி நாவினானை' என்ற பதிகம் பாடினார்.

திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவனைப் பணிந்து 'அண்ணாவும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2471).

(ஐயன்பேட்டை என்று இன்று வழங்கப் பெறுகிறது.)

/தஞ்சாவூர்ச் சந்திப்பிற்கு வடகிழக்கில் 17 கி. மீ. இல் உள்ளது./

# பே

**பேணுபெருந்துறை:** (திருப்பேணுபெருந்துறை, பெருந்துறை)

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று 'பைம்மா நாகம்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கினார் (2447).

(இப்போது திருப்பந்துறை என வழங்கப்பெறும். தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 666).

[கும்பகோண நிலையத்திற்குத் தென்கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**பேரூர்:** (திருப்பேரூர்)

கொங்கு நாட்டில் காஞ்சியாற்றின் (நொய்யலாற்றின்) கரைமீதுள்ள ஊர். சுந்தரர், குளிர்ந்த மலர்கள் நிறைந்த நிலங்கள் மிகுந்த கொங்கு நாட்டின் காஞ்சி ஆற்றின் கரையிலுள்ள இவ்வூரினை மேலெழும் பேரன்பால் அடைந்தார் (3242). தம்மை ஆண்ட இறைவன் கோயிலில் புகுந்து அடியவர் சூழ வலம் வந்து சுந்தரர் வணங்கினார். அவர் எதிரே இறைவன் தில்லை மன்றில் நின்றாடிய கோலத்தை நேராகக் காட்டினார். அக்கோலம் கண்டு கைகுவித்துக் கண்கள் ஆனந்தக் கண்ணீர் பொழியச் சுந்தரர் (3243) தொழுது வீழ்ந்தெழுந்தார். எல்லையற்ற அன்பு எலும்பை உருக்க ஐம்புலனில் புலப்படா இன்பம் பெற்று மெய்யுணர்வில், இறைவனை நேரிற் பெற்ற நிலையைச் சுந்தரர் பெற்றார் (3244). இன்ப வெள்ளத்தில் நிலைத்த பாடலை மகிழ்ந்து பாடினார். (அப்பதிகம் கிடைக்கவில்லை.) இவ்வூரில் தங்கியருளினார் (3245).

பின்னர்த் தில்லையில் இறைவன் நடம் கண்டு 'மடித்தாடும் அடிமைக் கண்' என்ற பதிகம் பாடும்போதுஅதில் 'மீகொங்கிலணி காஞ்சிவாய்ப் பேரூரர் பெருமானை'க் கண்ட நிலையைச் சிறப்பித்துப் பாடினார் (3269).

[கோயமுத்தூர்ச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

# பை

**பைஞ்ஞீலி:** (திருப்பைஞ்ஞீலி, ஞீலி)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர். ஞீலி ஒரு வகை வாழை. இது தல மரம் ஆதலால் இப் பெயர் பெற்றது. ஞீலி என்ற பெயராலும் சுட்டப்படும். (மூவர் தேவாரம், 1968, ப. 446).

திருநாவுக்கரசர் பலபதிகளை வணங்கிக் காவிரியாற்றைக் கடந்து ஏறிச் சென்று பைஞ்ஞீலிக்குப் புறப்பட்டார் (1568). வழியில் நீர் வேட்கையும், பசியும் வந்தும் மனம் அலையாமல் முன்னே செல்ல, மணமிக்க சோலைப் பைஞ்ஞீலியிலுள்ள இறைவன் தம் தொண்டர் வருத்தம் தீர நினைத்தார் (1569). அவர் ஒரு சோலையும் குளமும் உண்டாக்கினார். வழிகாட்டுதற்கு ஓர் அந்தணராகிப் பொதிசோற்றையும் உடன்கொண்டு திருநாவுக்கரசர் வரும் வழியில் எதிர்நின்றார். அப்பர் வரவும் அவரை நோக்கி அந்தணர் 'வழி வந்து மிகவும் இளைத்தீர். என்னிடம் பொதிசோறுண்டு. இதை உண்டு இக்குளத்து நீர் குடித்து இளைப்பாறிச் செல்க' என்றார். அப்பரும் அது இறைவன் அருள் எனக் கொண்டு முன்பு அறிந்தார் போல அந்தணரளித்த சோற்றை அளித்தவுடன் ஏதும் நினையாமல் ஏற்று அமுதுண்டு, நீரையும் அருந்தித் தளர்வு நீங்கினார் (1572). அந்தணர் அவரிடம் 'அப்பால் நீர் எங்குப் போவது?' எனக் கேட்டார். அப்பரும் பைஞ்ஞீலிக்குப் போவதைக் கூற 'யானும் அங்குப் போகிறேன்' என உடன் சென்றார் (1573). பைஞ்ஞீலிக்கு அருகே வர அந்தணர் மறைந்தருளினார். ஆடல் புரிந்த இறைவன் தன்னையும் ஒரு பொருளாக அளித்த கருணையை எண்ணி அப்பர், 'பாடிக்

கண்ணீர் மழை பொழிந்தார் (1574). (இப்பதிகம் கிடைத்திலது.) பைஞ்ஞீலியில் அமர்ந்த இறைவன் கோயிலில் வணங்கி 'உடையர்' என்ற திருக்குறுந்தொகை பாடி உழைவாரப்பணி செய்தார் (1575).

அறிவிற் சிறந்தவர் வாழும் திருப்பைஞ்ஞீலியை வணங்கத திருஞானசம்பந்தர் சென்றார் (2219). வண்டுகள் பாடும் சோலைப் பைஞ்ஞீலி இறைவன் மீது 'ஆரிடம்' என்ற பதிகம் பாடி வணங்கி மகிழ்ந்தார் (2220).

சுந்தரர், காவிரியின் இரு கரையிலுமுள்ள பதிகளை வணங்கிப் பைஞ்ஞீலியை அடைந்து அழகுமிக்க கோபுரத்தை இறைஞ்சி வலம் வந்து கங்காள வேடங் கொண்ட இறைவனை வணங்கினார் (3237). கண்ணீர் பெருகக் கை குவித்துக் 'காருலவிய' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3238).

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

# பொ

**பொற்புலியூர்:** *காண்க:* தில்லை

# போ

**போதிமங்கை:**

சோழநாட்டில் காவிரிக்குத் தென் கரையில் உள்ள ஊர்.

இங்குச் சாக்கியர்கள் தங்கியிருந்தனர். இவ்வூரினருகில் திருஞானசம்பந்தர் வரும் செய்தி அறிந்து திருத்தொண்டர்

சிவ ஒலி முழக்கினர். சின்னம், எக்காளம் எனும் கருவிகள் முழங்கின. இவ்வொலிகளாலும் தம்மனப்பொறாமையா லும் மருட்சியடைந்து தங்கள் சமயக் கல்வியில் உயர்ந்த புத்தநந்தி முதலிய புத்தர்களுக்கு அச்செய்தியைக் கூறினர் (2803). புத்தநந்தி புத்தர் கூட்டம் சூழ்ந்து வரச் சம்பந்தர் கூட்டத்திடையே போய் 'எம்மை வாதில் வென்ற பின் னன்றோ வெற்றிச் சின்னம் பிடித்தல் வேண்டும்' என்று கடும் கோபத்துடன் சொன்னார் (2804). இவ்வாறு புத்தர் கள் வெற்றிச் சின்னங்களை விலக்கும் போது இத்தகைய செயலுக்கு இவரைத் தண்டிக்காமல் பொறுத்துச் சென் றால் மேலும் எழுவர் எனத் தொண்டர்கள் எண்ணி, முத்துச் சிவிகையில் வந்த சம்பந்தரிடம் முறையாகப் பணிந்து இதனைக் கூறினர் (2805). 'வருமிடத்தில், இது மாறுகோளாவது அன்றி, நமக்கு அழகேயாம். மாறுபட்ட இவர் பொருளினைப் பொய்க்கொள்கை என நாம் காட்டு வோம்' எனச் சம்பந்தர் சொல்லித் திருவாக்கின் ஆணை யால் 'புத்தநந்தி தலை, இடி வீழ உருளக் கடவது' எனப் பொறுக்க முடியாத சொல்லை முன்னே சொல்லி விட்டார் (2806). சம்பந்தர் வாக்கால் புத்தநந்தி மீது இடி வீழ்ந்து தலை வேறு உடல் வேறு ஆனது. புத்தர் கூட்டம் அஞ்சி ஓடியது (2807). அது கண்ட திருத்தொண்டர்கள் அதனைச் சம்பந்தரிடம் விண்ணப்பித்தனர். எதிர்ப்பட்ட இடையூறு நீங்க இறைவனின் அருள் விதி அது ஆகும். ஆதலால் 'அர அர' என எல்லோரும் ஓதுமாறு கூற அவ்வாணைப்படி 'அர' ஒலி வானத்தை எட்டியது (2808).

பின்னொரு சத்திரத்தில் தங்கித் தம்மைக் காணவந்த புத்தர்களை வருமாறு அழைத்தார் (2810). புத்தருடன் வாதம் செய்து அவர்களை வென்றார். சாரிபுத்தன் முதலா னோர் தம் சமயத் தன்மை அழியச் சம்பந்தர் அடி வீழ்ந்து வணங்கினர் (2822). 'சைவமல்லாது மற்றொன்று மில்லை' எனத் தெளிந்த அப்புத்தர்கள் சம்பந்தர் முன் விழுந்து சைவரானார்கள். பின் சம்பந்தர், இறைவனின் பல பதி களையும் வணங்கப் புறப்பட்டார் (2824).

[காரைக்கால் நிலையத்திலிருந்து வடக்கே 2 கி. மீ. இல் உள்ளது.]

# ம

**மகோதை:** (அஞ்சைக்களம், கொடுங்கோளூர்)

சேரமன்னர்களின் தலைநகர்.

உலகில் கோதை எனப் புகழப் பெறும் சேர மன்னர் களும் ஆளும் தலை நகராம் மகோதை தன்னிடத்து வேத நெறியின் முறையில் பிறழாத நல்லொழுக்கத்தில் சிறந்த் நான்கு சாதிகளும் நிலைத்து ஓங்கும் தன்மை உடையன வாகக் கொண்டுள்ளது. தன்னைச் சுற்றிப் பெரிய மதில் சூழ்ந்திருக்குமாறுள்ளது. மா, மகிழ் சரளம் முதலிய மரங் களின் வரிசை நெருங்கும் சோலை சூழ்ந்த வளப்பம் உடைய நகரம் இது (3751). மணம் வீசும் மலர்ச்சோலை சூழ்ந்த பழைய நகரமாகும் (3752).

சுந்தரருடன் உயிரால் ஒன்றான சேரமான் பெருமாள் நாயனார் அவரை நினைந்த வண்ணம் வண்டுகள் ஒலிக் கும் மலர்ச்சோலை மகோதையிலிருந்து மலைநாட்டைத் தமக்கே உரிமையுடையதாகக் கொண்டு அரசுபுரிந்தார் (3920).

பல தலங்களுக்கும் சென்று இறைவனைப் பணிந்த சுந் தரர் பொன்புனைந்த நீண்ட பெரும் மதில் சூழ்ந்த மகோதை நகருள் புகுந்தருளினார் (4255).

சிவபெருமான் அருளிப்பாட்டைக் கேட்ட தேவர்களும் அரி, அயன் முதலானோரும் வணங்கி விடைபெற்றுச் சுந்த ரருக்காக வெள்ளானையையும் உடன் கொண்டு தேன் துளிக்கும் சோலை சூழ்ந்த மகோதை நகரத்தில் திருவஞ்

சைக்களத்தை அடைந்தனர் (4260). அங்கிருந்து அவரைக் கைலைக்கு அழைத்துச் சென்றனர்.

(சேரநாட்டில் சிறந்திருந்த முசிறி என்னும் பட்டினமும் இருபாகங்களாகவே அமைந்திருந்தது. அவற்றுள் ஊர் என்னும் பெயருடைய பாகம் கொடுங்கோளூர் எனவும், மற்றொரு பாகம் மகோதைப் பட்டினம் எனவும் வழங்கலாயின. த. ஊ. பே. 1976, ப. 35).

/கேரளாவில் சாலக்குடி நிலையத்திலிருந்து தென் மேற்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**மங்கலக்குடி:** (திருமங்கலக்குடி)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ளது.

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவன் மீது 'தங்கலப்பிய தக்கன்' என்ற பதிகம் பாடி வணங்கினார்.

திருஞானசம்பந்தர் இங்குச் சென்ற போது அன்பர்கள் எதிர்கொள்ள இறைவன் நிலைபெற்றுள்ள இவ்வூரைச் சேர்ந்தார் (2191). 'சீரினார் மணியும்' என்ற பதிகம் பாடி வணங்கினார்.

/ஆடுதுறை நிலையத்திலிருந்து வடமேற்கே 3 கி. மீ. இல் உள்ளது./

**மங்கலம்:** (திருமங்கலம்)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர். ஆனாய நாயனார் பிறந்த ஊர் ஆகும். வண்டுகள் அலைக்கும் சோலைகளில் ஞாயிற்றின் கொடிய கதிர்கள் தங்கு விளங்கும் நாடு மேன்மழநாடு. உலகில் அரிய அணியாக வாழ்வு தரும் மங்கலம் என்ற பெரிய பழைய ஊர், அந்த

நாட்டிற்கு ஒப்பற்ற மங்கலமாகியது (932). ஒப்பற்ற பெருங் குடிகள் நீண்ட காலம் நீடி வரும் தன்மையால் தப்பாத வளமுள்ளது; அறம் புரியும் சால்புடையது; சிறப்பில் மிகுந்தது (933).

(இரயிக்குவ முனி தம் மூதாதை நற்கதியடைய இறைவனை வேண்டி உத்திரகயா பற்குனி ஆற்றைக் கொண்டு வந்தார். அவர் சாபத்தால் சுந்தரன் எனும் அரசன் மன்மதனாகப் பிறந்து சிவன் கோபத்தால் சாம்பரானான். அவன் மனைவி இரதி இங்குத் தவம் செய்து மீளவும் அவனை அடைந்தாள். சியவனர், உதங்கர் எனும் முனிவர்களின் சாபம் நீங்க இந்திரன் இங்கு இறைவனைப் பூசித்தான். தி. தொ. பு. II சு. உரை 1940, பக். 1239-40).

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 18 கி. மீ. இல் உள்ளது.]

**மண்ணிவளம்படிக்கரை:** (திருப்பழமண்ணிப்படிக்கரை, திருமண்ணிப் படிக்கரை)

சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையிலுள்ள ஊர்.

சுந்தரர், கயல்கள் பாயும் இவ்வூரை அடைந்து 'முன்னவன் எங்கள் பிரான்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3272).

(இலுப்பைப்பட்டு என்று இன்று வழங்கப்பெறுகிறது. பழமண்ணி என்பது மண்ணி ஆறு முன் ஓடிய வழியாகும்.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**மணஞ்சேரி:** (திருமணஞ்சேரி)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர் திருஞானசம்பந்தர், சொல்லற்கரிய சிறப்புடைய திருத்

தொண்டருடன் இவ்வூர் சென்று இறைவனை வணங்கி 'அயிலாரு மம்பதனால்' என்ற பதிகம் பாடி வணங்கினார (2188).

(கீழைத் திருமணஞ்சேரி என்று வழங்கப் பெறும். மன்மதன் வணங்கிப் பேறு பெற்ற தலம். இரு வணிகப் பெண்கள் தம் முன் கொண்டும் கொடுத்தும் மணமுடிக்க உடன்பட்டனர். ஒருத்தி வயிற்றில் ஆமை பிறந்தது. அதனால் மற்றவள் பெண் கொடுக்க மறுத்தாள். ஆமை இவ்வூர் இறைவனை வணங்கி அப்பெண்ணை மணக்கும் பேறு பெற்றது. தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 352.)

(செம்பியன் மாதேவி இங்குக் கற்றளி அமைத்தாள். த. ஊ. பே. 1976, ப. 150)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 6 கி. மீ. இல் உள்ளது.]

**மணமேற்குடி:** (திருமணமேற்குடி)

பாண்டி நாட்டில் உள்ள ஊர். செந்நெல்லும், கரும்பும் விளையும் வயல்களும், கமுகந் தோட்டங்களும் சூழ்ந்துள்ள வளமிக்க ஊர் மணமேற்குடியாகும் (1695). குலச்சிறை நாயனார் பிறந்த ஊர் இது (1696). திருஞானசம்பந்தர் திருத்தொண்டர் பலரும் சூழவும், பாண்டிய மன்னன் போற்றி உடன்வரவும் அமைச்சர் குலச்சிறையாரின் ஊராம் இவ்வூரை அடைந்தார் (2790). இந்நகரில் இனிதாகத் தங்கியிருந்து அருகிலுள்ள ஊர்களின் கோயில்களைச் சென்று வணங்கி மீண்டு வந்தார். பாண்டி மன்னன், அவன் மனைவி மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் ஆகியோர் சம்பந்தரின் திருவடிகளைப் போற்றி வணங்கினர் (2791). சம்பந்தர் மீண்டும் சோழ நாடு செல்லத் திருவுள்ளம் கொண்டார். அவரைப் பிரிய விரும்பாத பாண்டி மன்னரும், மங்கையர்க்கரசியும், குலச்சிறையாரும் உடன்

போக எண்ணினர். அவர்களைச் சிவநெறி போற்றியிருக்கக் கூறினார் சம்பந்தர் (2792). அவர் கூறிய பணியை மறுக்க அஞ்சி அவர் அடியில் வீழ்ந்து வணங்கச் சம்பந்தர் இறைவனடி வணங்கிச் சென்றார் (2793).

[காரைக்குடி நிலையத்திலிருந்து கிழக்கே 48 கி. மீ. இல் உள்ளது.]

**மணலி:** (திருமணலி)

சோழநாட்டில் திருவாரூர்க்கு அருகில் உள்ள ஊர். இவ்வூர்க்குத் திருவாரூரிலிருந்து இறைவன் எழுச்சி பெற்று எழுந்தருளும் வழக்கு இருந்தது. அவ்வாறு இறைவன் மணலிக்கு ஒரு நாள் எழுந்தருளினார். எல்லா மக்களும் ஒன்றாகக் கலந்து வந்து சேர்ந்தனர். நமிநந்தி அடிகள் நாயனாரும் அவர்களுடன் சேர இறைவன் திருவோலக்கம் கண்டு மகிழ்ந்தார் (1887). எல்லோரும் மணலியில் விரவியதால் இழிவு தொடங்குதற்கு ஏது என எண்ணி அதைத் தூய்மை செய்ய வேண்டும் என நூல்கள் கூறும் (1890). ஆயின் அவ்விதி, திருவாரூர்ப் பிறந்தார்களிடத்துச் செல்லாது (1892) என்பதை நமிநந்தியடிகள் இவ்வூர்க்குச் சென்றதால் அறிந்தார்.

[திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**மதுராபுரி:** காண்க: மதுரை

**மதுரை:** (கூடல், திருமதுரை, மதுராபுரி)

பாண்டி நாட்டில் வையையாற்றின் கரையில் உள்ள ஊர். பாண்டிய மன்னர்களின் தலைநகர். இங்குள்ள இறைவன் கோயிலின் பெயர் திரு ஆலவாய். இவ்வூர் தாமரை மலர் போன்றது. திருமகள் வாழப் பெறுவது.

பெண்டிர் மொழியிலும் கூந்தலிலும் முறையே இசையும் வண்டும் வாழ்கின்ற நகரம் மதுரையாகும் (971). அரங் கேறும் சங்கங்களில் முத்தமிழ் நிலைபெற்றுத் தங்கிய பழைய ஊர். நூல் கற்கும் இடங்கள் உள்ளன. எருமைகள் மடியிலிருந்து பால், தாமரை மலரில் பாயச் சேல் மீன்கள் தடாகங்களில் பாயச் சங்குகள் வயல்களில் ஏறும் (972). தென்றல் வந்தசையும். மாட முற்றங்களில் பந்தாடிய மகளிரின் மார்பில் முத்து மாலை தங்கும். முத் துப் போன்ற வியர்வை, பந்தாடும் பெண்கள் முகமாம் தாமரையின் மேல் உள்ளது (973). உண்மைப் பொருள் கண்ட தமிழ் நூல்களுள் மெய்ம்மைப் பொருளாம் இறைவன் எழுந்தருளிய திருவாலவாய் இங்குள்ளது. அவ் விறைவன் தாமே தலைவனாய்ச் சங்கம் வீற்றிருந்த செய்தி நிகழ்தற்கிடம் (974) இது ஆகும்.

இவ்வூரில் வணிகர் குடியில் மூர்த்தி நாயனார் பிறந் தார் (975). இந்நாயனார் சிவபெருமானுக்குச் சந்தனக் காப்பினைத் தவிராது செய்து வந்தார் (977). அப்போது வடுகக் கருநாடர் மன்னன், பாண்டியனை வென்று மணம் சூழ் சோலைகள் மிக்க மதுரையைக் காவல் செய்வானாயி னான் (979).

திருநாவுக்கரசர் பாண்டி நாட்டை அடைந்து கதிரும் மதியமும் தீண்டும் கொடி மதில் மதுரை ஆலவாயினை அடைந்தார் (1667). தமிழாராய்ந்த இறைவன் கோயில் மூன்றிலை வலம் வந்து முன் இறைஞ்சி உள்ளே சென்று வணங்கி மகிழ்ச்சியில் திளைத்தார் (1668). 'முளைத் தானை' என்ற தாண்டகம் பாடி மகிழ்ந்தார் (1669). 'வேதியா' என்ற திருநேரிசை பாடித் திருப்பணி செய்தார் (1671).

சிவபெருமான் தொண்டரெல்லாம் பாண்டியன் மதுரையில் விரவிடக் கனவு கண்டார்கள் சமணர்கள் (2537). அமைச்சர் குலச்சிறையார் பொன் திகழ் மாடவீதி

மதுரைப் புறத்துப் போய்த் திருஞானசம்பந்தரை எதிர் கொள்ளச் சென்றார் (2544). தம்மடி பணிந்த அமைச்சர் மீது திருஞானசம்பந்தர் அளவற்ற அருள் புரிந்தார். அப் போது ஓங்கிய மதில் சூழ்ந்த மதுரை தோன்றுதலும் திருத் தொண்டரிடம் இறைவன் திரு ஆலவாய் எப்பக்கம் உள்ளது எனக் கேட்டார் (2559). அடியவர் ஆலவாய்க் கோபுரத் தைக் காட்டினர் (2560). கைகுவித்து 'மங்கையர்க்கரசி' என்ற பதிகத்தில் பாண்டி அரசி, அமைச்சர் ஆகிய இருவர் பணியும் உலகம் போற்றப் பாடினார் (2561). கோயி லுட் சென்று பலமுறை பணிந்தெழுந்தார் (2563). மெய்ம் மயிர்ப் புளகமும் கண்ணீரும் திகழும் மேனியராகி இறை வனைப் புகழ்ந்தார் (2564). 'நீலமாமிடற்றாலவாயிலான்' என்ற திருவிருக்குக்குறள் பாடினார் (2565). மங்கையர்க் கரசியாரும், மற்றும் மதுரையில் தங்கிய அடியார்களும் சம்பந்தரை வணங்கி அமணிருள் நீங்க அவர் வந்ததற்குத் தாங்கள் பெரும் தவம் செய்ததாகக் கூறினர் (2573). பின் மதுரைத் திருமடத்தில் சம்பந்தர் தங்கினார் (2574). அவர் வரவு கேட்ட சமணர் கலங்கினர் (2576). பாண்டிய அரச னிடம் அவர்கள் சென்று மதுரையில் சைவ வேதியர் வந்த தால் 'இன்று கண்டு முட்டு' ஆனதாகக் கூறினர் (2581). அரசனிடம் தங்களைச் சம்பந்தர் வாதில் வெல்ல வந்த தாகக் கூறி (2583) அவர் தங்கிய மடத்திற்கு மந்திரத் தால் தீயிட்டால் அவர் திரும்பிச் செல்வர் என்றனர் (2586). அரசனும் அதனை ஏற்றனன். சம்பந்தர் தங்கிய மடத்தில் மந்திரத்தால் தீயிட இயலாமல் தளர்ந்தனர் (2596). எப்படியாயினும் சம்பந்தரை அழிக்க அவர் தங்கிய மடத் தில் தீயிட்டனர் (2598). அதனை அறிந்த சம்பந்தர் 'செய்யனே திருவாலவாய்' என்ற பதிகம் பாடி அமண ரிட்ட தீ பையவே சென்று பாண்டியர்க்காகுமாறு பணித் தார் (2602). அதனால் வெப்பு நோயினால் பாண்டியன் துன்புற்றான். அவன் மருங்கு மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் வந்தனர் (2608). சமணரும் மன்ன னிடம் வந்தனர் (2612). தம் பீலியால் தடவப் பீலி தீய்ந் தது (2613). ஒரு செயலும் பயன்படாமற் போகவே அரசி யும் அமைச்சரும் மதுரை வந்த சம்பந்தர்க்குச் சமணர்

செய்த தீங்கே இதற்குக் காரணம். வெப்பினை அவரே தீர்ப்பர் எனக் கூறினர் (2617). பின்னர் அவர் சம்பந்தரை வேண்ட, ஆலவாயிலுள் சென்று 'காட்டுமா', 'வேத வேள்வியை' என்ற பதிகங்கள் பாடிச் சம்பந்தர் வணங்கி னார். இறையருள் பெற்று அரசனிடம் சென்றார். அவ ரைக் கண்ட மதுரை மக்கள் புண்ணிய வடிவினரானவர் மதுரையிற் புகுவதற்கு முன்னே செய்த தவம் எவை என வியந்தனர் (2642). அரசனிடம் சென்றதும் அவன் அவர் தம் ஊர் யாதென்று கேட்கப் 'பிரமனூர் வேணுபுரம்' என்ற திருச்சக்கர மாற்றுப் பாடி அறிவித்தார் (2652). அரசன் சமணரையும் சம்பந்தரையும் நோக்கி முதலில் வெப்பொழித்துப் பின் உண்மையைத் தெரிவிக்கும்படி சொன்னான் (2657). சம்பந்தர் 'மானினேர் விழி மாத ராய்' என்ற பதிகம் பாடிச் சமணர்க்கஞ்சிய மங்கையர்க் கரசியாரைத் தேற்றினார் (2658). அரசன் கூறியபடி சம்பந்தர் அவனது வலப்பாக வெப்பை 'மந்திரமாவது நீறு' என்ற பதிகம் பாடிப் போக்கினர். சமணர் தம் முயற்சியில் தோற்றனர் (2664). சம்பந்தரை அரசன் வேண்ட வெப்பை முழுதும் நீக்கினார் (2668). பின்னர் அனல் வாதம் புனல் வாதம் செய்யச் சமணர் முன் வந்த னர். 'தளிரிள வளரொளி' என்ற பதிகத்தைச் சம்பந்தர் தீயிலிட அது வேகவில்லை (2684). சமணர் தீயிலிட்ட ஏடு வெந்தது (2686).

வெப்பு நோயிலிருந்து மன்னன் நீங்குமாறு செய்து வென்ற சம்பந்தர் மதுரை மூதூர்த் தெருவில் வந்த போது பெண்டிரும் மைந்தரும் தொழுது பலவாறு போற்றினர் (2699). சம்பந்தர் வையை ஆற்றின் கரைக்குத் தம் அடி யாருடன் சென்றார் (2709). சமணரிட்ட ஏடு நீர் செல் வழிச் செல்லச் சம்பந்தர் 'வாழ்க அந்தணர்' என்றிட்ட பதிகம் நீரெதிர் ஏறியது (2744). 'அற்றன்றி' எனும் திருப் பாட்டில் மதுரையில் சங்கம் வைத்த பாண்டியர் தேற அன்பு வென்றது (2742). தோற்ற சமணர் கழுவேறினர் (2753). பாண்டியனுக்குச் சம்பந்தர் திருநீறீந்தார்.

மன்னன் நீறணிந்தது கண்டு மற்றவன் மதுரை வாழ்வார் நீறணிந்து சைவராயினர் (2755). ஆலவாயமர்ந்த அண்ண லைப் பணியச் சம்பந்தர் சென்றார். அவர் பின் மன்ன னும், மங்கையர்க்கரசியாரும் சென்றனர் (2759). கோயி லுட் சென்று கைகள் தலைமீதேறக் கண்ணீர் பொழிய இறைவனை 'விடலால வாயினாய்' என்று பதிகம் பாடிச் சம்பந்தர் வணங்கினார் (2763). திருநீலகண்டயாழ்ப் பாணர், சம்பந்தர் பாடிய திருவியமகத்தை யாழில் வைத் துப் பாடினார் (2768). மதுரையிலுள்ளவரும், மதுரை யின் புறத்துள்ள பல மாந்தரும் சமணப் பாழிகளையும் பள்ளிகளையும் அகழ்ந்து போக்கி மங்கலம் பொலியச் செய்தனர் (2769).

சம்பந்தரின் தந்தையாம், மறையவராம் சிவபாத இருதயர், தேன் பொருந்திய மணமிக்க பசிய வேப்பமாலை அணிந்த பாண்டியனின் திருமதுரையை அடைந்து திரு ஆலவாய் இறைவனைப் பணிந்தார் (2774). சம்பந்தர் தங்கிய மடத்தைச் சார்ந்தார். அவரைக் கண்ட சம்பந் தர், காழி, இறைவன் பதம் நினைவுற்றார் (2777). புகலி மீது 'மண்ணினல்ல' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2778). மேலும் பல பதிகளைக் கண்டு வணங்க மதுரைப் புறத்துச் சென்று பாண்டியனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோரிடம் இறைவனைப் பணியுமாறு கூறி விடை கொண்டார் (2782).

மதுரைத் திருஆலவாய் இறைவர் பாணனார் பத்திர னார்க்குச் செல்வம் நல்க அருள் புரிந்து சேரமான் பெரு மாள் கனவில் அதனைக் கூறிப் பத்திரனாரிடம் 'மதிமலி புரிசை' என்ற வாசகம் வரைந்த திருமுகம் கொடுத்தார் (3775). சேரமானிடம சென்று வேண்டும் பொருள் கொடுத்து விடுக்கத் திண்ணிய பொன் மதில் திரு மதுரைக் குப் பாணனார் திரும்பினார் (3785).

சுந்தரர் இறைவனின் பல தலங்களை வணங்கிப் பாண்டி நாட்டுத் திருமாமதுரை முதலான மூதூர்களை வணங்க எண்ணினார் (3828). சேரமான் பெருமாளும்

மதுரை ஆலவாய் இறைவனளித்த திருமுகத்தால் அன்பின் வணங்குதற்கு எழுந்த குறிப்பால் தாமும் சுந்தரருடன் செல்லத் துணிந்தார் (3829). பல தலங்களை இருவரும் கண்டு வணங்கிய பின் வானில் விளங்கும் முகில்கள் தவழும் மணிமாட மதுரை மூதூர் வந்து சேர்ந்தனர் (3837). அவர்க ளிருவரையும் எதிரேற்கப் பாண்டிய மன்னன், மாநகரை அலங்கரித்து வரவேற்றான் (3838). பாண்டியன் மகளை மணந்து முன்னரே மதுரையில் இருந்த சோழனாரும் சேரவே அவர்களனைவரும் ஆலவாய்க் கோயிலுக்குச் சென் றனர் (3839). இறைவன் கோயிலைச் சுந்தரர் போற்றி வணங்கினார் (3840) (இப்பதிகம் கிடைத்திலது). மூவேந் தரும் பணிந்த பின் சேரருடன் சுந்தரர் புறத்தணைந்தார். பாண்டியனார் அவ்விருவரையும் பொன்மாளிகைக்கு அழைத்துச் சென்று வேண்டும் வகையில் உபசரித்தார் (3842). மூவருடனும் அளவளாவிச் சுந்தரர் மதுரையில் அமர்ந்து கலந்தினிதிருந்தார் (3843).

மதுரை நகர்ப் பக்கத்திலுள்ள இறைவன் பதிகளுக்கு மூவேந்தரும் வரச் சுந்தரரும் சென்று பதிகம் பாடித் தொழுதார் (3844). பின்னர் மூவேந்தருடன் மதுரை நகர் எய்தித் திருவாலவாயுடையார் அடிபணிந்தேத்தி இன் புற்றார் (3847). திருவாப்பனூர், திருவேடகம் முதலான பதிகள் சென்று வணங்கி மீண்டும் முகில் தோயும் மதில் மதுரை மாநகர்க்கு வந்து மகிழ்ந்திருந்தார் (3848).

திருநீலகண்ட யாழ்ப்பாணர் மதுரை ஆலவாயை அடைந்து கோயில் முன் இறைவன் புகழை யாழிலிட்டு வாசித்தார் (4216). அது கேட்டு மகிழ்ந்த இறைவன் அடி யார்கள் கனவில் தோன்றிப் பாணனாரைத் தம் திரு முன்பு கொண்டு வர ஆணையிட்டார். பாணனாரை அவ் வாறே திருமுன்பு கொண்டு சென்றனர் (4217). இறைவன் புகழை யாழில் பாடினார். தரையில் சீதம் தாக்குமென இவருக்கும் பலகையிடும்படி இறைவன் அசரீரியால் ஆணை யிடத் தொண்டர்கள் அவ்வாறேயிட்டனர். பாணனார் பின் அதன் மேல் ஏறியிருந்து யாழில் பாடித் திருவருள் பெற்றார் (4221).

(இங்குள்ள அம்பலம் வெள்ளியம்பலம் த. ஊ. பே. 1976, ப. 204)

/திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 155 கி.மீ. இல் உள்ள சந்திப்பு./

**மயானம்[1]:** (கடவூர் மயானம்)

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். அண்மையிலுள்ள **திருக்கடவூர்** என்ற ஊர்ப் பெயருடன் சேர்த்தறியுமாறு **திருக்கடவூர்த் திருமயானம்** எனக்குறிப் பிடப் பெறும் (1513). இங்குச் சென்ற திருநாவுக்கரசர் இறைவனை வணங்கிக் 'குழைகொள் காதினர்' என்ற பாடல் பாடித் தொழுது இனிதாக எழுந்தருளியிருந்தார் (1513).

ஒரு சமயம் திருநாவுக்கரசருடன் திருஞானசம்பந்தர் குங்குலியக்கலயநாயனாரின் மனையில் தங்கி விருந்துண் டிருந்து திருமயானமும் பணிந்து 'வரிய மறையார்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2433).

சுந்தரர் இவ்வூர்க்குச் சென்று 'மருவார் கொன்றை மதிசூடி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3299).

(ஒரு காலத்தில் பிரமனை எரித்த இறைவன் மீளவும் அவனுக்கு உயிரீந்து உயிர்களைப் படைக்குமாறு அருளிய தலம். ஆதலால் **மயானம்** என்ற பெயர் வந்தது என்பர். தி.தொ.பு. III சு.உரை 1943, ப.419).

/மயிலாடுதுறைச் சந்திப்பிற்குக் கிழக்கே 24 கி. மீ. இல் உள்ளது./

**மயானம்[2]:** (திருமயானம்)

தொண்டை நாட்டில் கச்சிக்கு அருகில் இருப்பதால் இத்தலம் **திருக்கச்சி மயானம்** எனப்படும். திருநாவுக்கரசர் இங்குச் சென்று வலம் வந்து உண்மை ஆர்வமுறத் தொழுது விருப்பத்துடன் தங்கினார் (1590).

(காஞ்சிபுரம் ஏகம்பர் கோயில் கொடிமரத்தின் முன்

புறம் தென்கிழக்கே உள்ள தனிக்கோயில் தி. தொ. பு. III சு. உரை. 1943, ப. 549.)

[செங்கல்பட்டுச் சந்திப்பிற்கு வடமேற்கே 35 கி. மீ. இல் உள்ள காஞ்சிபுரத்தின் ஒரு பகுதி.]

**மயிலாடுதுறை:** (திருமயிலாடுதுறை)

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர், சோலை உயரும் இவ்வூர் இறைவன் மீது 'கொள்ளும் காதன்மை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (1455).

திருஞானசம்பந்தர், மலர்த்தடங்கள் சூழ்ந்த இவ்வூரினில் வந்தருளினார் (2335). உள்ளம் இன்புற உணர்வு மிக்க பரிவு கொண்டுருகி இறைவன் மீது 'ஏனவெயிறாடரவொடு', 'கரவின்றி' என்ற பதிகங்கள் பாடி வணங்கினார் (2336).

சுந்தரர், பூந்தடங்கள் சூழ்ந்த காவிரியின் கரையை அடைந்தார் (261); மலரும், மணியும் கொண்டு வழியிலே இருகரைகளிலும் பொன்னைப் பரப்பும் காவிரியின் தீர்த்தத்தில் படிந்தாடினார்; பின்னர் இறைவனை வணங்கினார் (262).

(உமையம்மை மயில் வடிவில் இறைவனைப் பூசித்ததால் இப்பெயர் பெற்றது. தி. தொ. பு. I சு. உரை .1960, ப. 313: மாயவரம், மாயூரம் எனவும் வழங்கப் பெறும்).

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 120 கி. மீ. இல் உள்ள சந்திப்பு.]

**மயிலாப்பூர்:** (திருமயிலாப்பூர், மயிலாபுரி, மயிலை)

தொண்டை நாட்டில் உள்ள ஊர். உண்மையை நிலை நாட்டித்தரும் புகழ் உடைய ஊராகும் (1117). இங்குள்ள கோயிலின் பெயர் கபாலீச்சரம்.

திருநாவுக்கரசர் மணம் நிறைந்த மலர்ச்சோலை மயி லாப்பூர் வந்தடைந்தார் (1596). மலை மேல் வளரும் மாமயில் போல மாடங்கள் மீது மேகம் தவழுகின்ற, உலகில் என்றும் வளரும் சிறப்புடைய இவ்வூரின் இறைவன் மீது உரைவளர் மாலைகள் பாடி வணங்கினார் (1597). (இங் குப் பாடியவை கிடைத்தில.)

புகழ்ந்து பேசப்பட்ட பழம் புகழுடைய இவ்வூரில் நிலைபெற்ற சிறப்புள்ள பெருவணிகர் குடியில் பிறந்த சிவநேசர் கடல்வணிகம் செய்து செல்வ வளம் உடைய வராயிருந்தார் (2932). சிவபெருமானுக்கு அடிமை செய்து வந்தார் (2933). சமண், சாக்கியம் அழித்த திருஞான சம்பந்தரின் புகழை அடியவர் கூறக் கேட்டு மகிழ்ந்தார் (2935). தமக்கு மகவொன்று பிறக்க வேதியர்க்கு வேண்டியன அளித்து மகிழ்ந்தார் (2940). தமக்குப் பிறந்த மகளுக்குப் பூம்பாவை எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார் (2942). பாண்டி நாட்டில் அமணரை வாதில் வென்று பாண்டியன் நோய் தீர்த்தது முதல் அமணர் கழுவேறியது வரை யாவும் கேட்டதனால் சம்பந்தர்க்குத் தம் பூம்பாவையையும், செல் வத்தையும், தன்னையும் கொடுத்ததாக மொழிந்தார் (2951). ஒரு நாள் பூம்பாவை மலர் கொய்யும் போது பாம்பு தீண்ட இறந்தார் (2953–2957). பூம்பாவை உடலை எரித்த சாம்பலைச் சிவநேசர் கும்பத்தில் பெய்து சம்பந்தர் வரும் அளவும் வைத்திருந்தார் (2964).

திருஞானசம்பந்தர் திருவொற்றியூரில் தங்கியிருந்ததை அப்பதியுள்ளோர் சிவநேசர்க்கு உரைத்தனர் (2967). அது கேட்டு மகிழ்ந்த அவர் திருவொற்றியூர் அளவும் நீண்ட நடைக்காவணமிட்டு அலங்கரித்தார் (2969). சம்பந்தர் திருவடியை வணங்க மயிலாப்பூர் வணிகருடன் திருவொற்றி யூர் சென்றார் (2970). அப்போது மயிலாப்பூரை நோக்கிச் சம்பந்தர் தொண்டருடன் எதிர்வந்து தோன் றினார் (2971). சிவநேசர் அவரடி வீழ்ந்திறைஞ்சக் கடல் சூழ்ந்த மயிலாப்பூரை அடைந்தார் (2973). இவ்வூரிலுள்ள கபாலீச்சரத்தை அடைந்து பெரியநீண்ட கோபுரத்தைத் தொழுது சென்றார். இறைவன் கோயிலை வலம்வந்து

கை தலை மேல் குவிந்திடத் திருமுன் சேர்ந்தார் (2975). இறைவனைப் பரிவால் பரவி அன்பால் விரும்பிய விரைவால் விழுந்து வாய்மையால் போற்றினார் (2976). கோயிலின் புறத்தே வந்து சிவநேசரிடம் பூம்பாவை என்பு நிறைந்த குடத்தை இறைவன் கோயிலின் மதிற்புறத்துக் கொண்டு வரக்கூறினார் (2978). அவரும் அவ்வாறே செய்தார்.

மாடம் ஓங்கிய மயிலை நகருள்ளவரும் அந்நாட்டிலுள்ள வரும் பரசமயத்திலுள்ளவரும் இங்கு நடப்பதைக் காண வந்தனர் (2982). திருஞானசம்பந்தர் 'மட்டிட்ட' என்ற பதிகத்தைப் பூம்பாவை பேர் சொல்லி (2984) மக்கள் பிறந்த பயன் சிவனடியாரை அமுது செய்வித்தல், அடியார் விழாக்காணல் உண்மை எனில் உயிர் பெற்று வருமாறு பாடினார் (2986). உயிரும், உருவும் பெற்றுப் பூம்பாவை எழுந்தார் (2988). இறைவன் கருணையை எண்ணி எல்லா மக்களும் இறைஞ்சி வீழ்ந்தனர் (2991). உயிர் பெற்ற தம்மகளை மணம் செய்தருளுமாறு சிவநேசர் சம் பந்தரை வேண்ட (3011) அவர் அது தகாது என்று பல நியாயங்கள் கூறித் தேற்றினார் (3013). பூம்பாவையைக் கன்னி மாடத்தில் வைக்க அவரும் சிவத்தை மேவி னார் (3015). சம்பந்தர் கபாலீச்சர இறைவனின் கருணை யைப்பாடி வணங்கினார் (3016). (இப்பதிகம் கிடைத் திலது.) தொழுது புறம் போந்து தொண்டருடன் சில நாள் தங்கிச் (3017) சிவநேசர் வருத்தமகல இனிய மொழி கூறி விடை கொடுத்தார் (3018).

சொல் விளங்கும் தொண்டை நாட்டில் செல்வச் செழிப்பு மிக்கது. ஒழுக்க மேம்பாடுள்ள பல பெருங்குடி மக்கள் பரம்பரையும் வாழ்வது (4079). பெரிய கடல் தன் னிடமுள்ள மணி முதலிய செல்வத்தைத் தேடிப்பெற்ற சேம வைப்பு எனக் கொடிகளாடும் இப்பதியின் பக்கம் மரக் கலங்களாம் சிமிழினால் தள்ளும் (4080). கடற்கானல் நில முழுவதும் மரக்கலங்கள் இறக்கிய யானைக் கன்றுகளும், முத்துக்கொழித்தொதுக்கும் மேகங்களும், செழித்த எருமைக் கன்றுகளும் நிறஒப்புமையால் வேறுபிரித்தறிய முடியாது

விளங்கும் (4081). வெண்மாளிகையுடைய சாலைகளின் பக்கத்தில் கொடிகளில் நுழையும் வெண்மதி, பெண்கள் முகம் பார்த்து அஞ்சி மறைவிடம் சேர்ந்து ஒதுங்குவது போலும் (4082). வீதி எங்கும் திருவிழாவின் அலங்காரம் நிறைந்திருக்கும். இளைஞர்களின் தூதென வண்டுகள் பெண்களின் கூந்தலெங்கும் தங்கும். சாந்து பூசிய மாடமெங்கும் அழகிய செல்வமும் அணிகளும் நீங்காதிருக்கும் (4083). நிலைபெற்ற சிறப்புடைய மயிலைத் திருமாநகரில் வாயிலார் நாயனார் பிறந்தார் (4084).

(உமைஅம்மை மயிலுரு எடுத்து இறைவனைப் பூசித்த பதி ஆனதால் மயிலை என்ற பெயர் பெற்றது. தி. தொ. பு. V சு. உரை 1950, ப. 1384).

[சென்னைச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 8 கி. மீ. இல் உள்ளது. இது சென்னை நகரின் ஒரு பகுதி]

**மயிலாபுரி:** காண்க: **மயிலாப்பூர்**

**மயிலை:** காண்க: **மயிலாப்பூர்**

**மயேந்திரப்பள்ளி:** **(திருமயேந்திரப்பள்ளி)**

சோழநாட்டில் கொள்ளிட நதி கடலில் கலக்கும் இடத்திற்கு அருகில் உள்ளது.

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்று 'திரைதரு பவளமும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2027).

(இது இப்போது கோயிலடிப்பாளையம் என்று வழங்கப் பெறும். மயேந்திரன் எனும் இந்திரன் வழிபட்டதால் இப்பெயர் பெற்றது. தி. தொ. பு. IV சு. உரை 1949, பக். 161-162).

[சிதம்பரம் நிலையத்திற்குத் தென்கிழக்கே 14 கி. மீ. இல் உள்ளது.]

**மருகல்:** *(திருமருகல்)*

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். இங்குள்ள கோயில் மாடக் கோயில். இவ்வூர்க்குத் திருநாவுக்கரசர் சிறப்பு மிக்க அன்பால் சென்று 'பெருக லாம் தவம்' என்ற பதிகம் பாடி வணங்கி இன்புற்றார் (1505).

திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவனாம் மாணிக்க வண்ணரை வணங்கிப் போற்றி உருகிய அன்புறு காதல் மனத்துள் அலைப்ப இசையுடன் கூடிய பதிகம் பாடித் தங்கியிருந்தார் (2370). (இப்பதிகம் கிடைத்திலது.)

இவ்வூர்க்குத் தான் மணம் செய்தற்குரிய கன்னியை அழைத்து வந்த வணிகன் ஒரு மடத்தில் இரவு தங்கினான். அப்போது பாம்பு தீண்ட அவன் இறந்தான் (2371). அது கண்டு கன்னி துன்பம் தாளாது அழுது இறைவனை வேண்டினாள் (2374, 2375). அப்போது அவ்வழியில் சென்ற திருஞானசம்பந்தர் அவ்வழுகை ஓசை கேட்டு அம் மடத்திற்குச் சென்று அவள் வரலாற்றைக் கேட்டு அவள் துன்பம் தீர்க்குமாறு 'சடையாய் எனுமால்' என்ற பதிகம் பாடி இறைவனை வேண்டினார் (2380). அவ்வணிகன் விடம் தீர்ந்து எழ அவர்களிருவர்க்கும் மணம் செய்வித்து விடைதந்து விடுத்தார் (2381).

சம்பந்தரை இவ்வூரில் வந்து சிறுத்தொண்ட நாயனார் அழைத்துச் செல்ல, அடியாரோடும் இறைவனடி தொழ இவ் வூர்க் கோயிலுள் சென்றார் (2382). மருகற் கோயிலில் விளங்கும் நிலையை மனத்தில் கொண்டு வணங்கும்போது செங்காட்டங்குடியிலுள்ள கணபதீச்சரத்தில் மேவும் காட்சி கொடுக்கக் கண்டு 'அங்கமும் வேதமும்' என்ற பதிகம் பாடி, விடை கொடுத்த குறிப்பைப் போற்றினார் (2384). (சோழநாட்டில் மருகல் நாடு என்ற நாடும் உள்ளது (4120).)

(மருகல் என்பது ஒருவகை வாழை. தல மரம் இது

வாகலின் இப்பெயர் பெற்றது. தி. தொ. பு. III சு. உரை 1943, ப. 408).

[நன்னிலம் நிலையத்திலிருந்து கிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**மழபாடி:** (திருமழபாடி)

சோழநாட்டில் கொள்ளிட ஆற்றின் வடகரையில் உள்ளது.

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவனாம் மழபாடியாரை வணங்கி 'நீறேறு திருமேனி' என்ற பதிகம் பாடினார் (1651).

திருஞானசம்பந்தர் கரும்பினொடு கமுகுகள் நெருங்கி யுள்ள இவ்வூரினைப் போற்றச் சென்றார் (2203). இவ்வூ ரில் அழகிய வயிரத்தூண் நாதர் மகிழ்ந்தருளும் கோயிலை வலம் வந்தருளி அடிக்கீழ் தாழ்ந்தெழுந்து நின்று தொழுது 'களையும் வல்வினை' என்ற பதிகம் பாடிச் சிலநாள் தங்கி னார் (2205).

சுந்தரர் திருஆலம்பொழிலில் சேர்ந்து இரவு உறங்கி னார். அவர் கனவில் (3225) 'மழபாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ?' என இறைவன் தம் கோலம் எதிர் காட்டி அருளினார். அதனை உணர்ந்து நிழலார் சோலைக் கரையுடைய பொன்னியின் வடப்பக்கம் சென்றேறித் தெரு மாடங்கள் நிறைந்த அழகிய வீதிகளுள்ள மழபாடி அடைந் தார் (3226). சென்று திருக்கோபுரம் வணங்கி அன்பர் சூழ உடன்சென்று இறைவன் முன் பணிந்து வீழ்ந்தார். இறைவனின் அருளின் திறம் போற்றிப் 'பொன்னார் மேனியனே' என்ற பதிகம் பாடிச் சில நாள் தொண்டருடன் மகிழ்ந்து தங்கினார் (3227, 3228).

(மழவர்பாடி மழபாடி என மருவியது. 'மழவரோட்டிய முருகன்'. (அகநானூறு. 1) இறைவனின் மழுவாடிய இடம்

ஆதலின் மழுவாடி என்ற பெயர் ஏற்பட்டுப் பின் மழபாடி ஆயிற்று என்பர். தி. தொ. பு. III சு. உரை 1943, ப. 649)

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**மறைக்காடு:** (திருமறைக்காடு, வேதவனம்)

சோழநாட்டின் கிழக்குக்கடற்கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் செல்வத் திருமறைக்காட்டின் எல்லையைச் சேர்ந்தார் (1528). மணமிக்க மலர்ப் புன்னைச் சோலை உப்பளத்தின் முன்றில் தோறும் சிறுபெண்கள் முத்துக் கொழிக்கும் இவ்வூர் இறைவன் கோயில் புகுந்து வலம் வந்து திருஞானசம்பந்தர் சென்று சேர்ந்தார் (1529).

கடற்கரையின் நீர் கொண்ட கழிக்கானலின் பக்கத்தில் நெருங்கியுள்ள இவ்வூரில் இறைவனை எல்லா வேதங்களும் அர்ச்சனை செய்து வலிய கதவைத் திருக்காப்பிட்ட அந்த நாள் முதல் இது வரை அடைக்கப்பட்ட மணிநீள் வாயிலை இருவரும் வணங்கினர் (1531). அதனை அறிந்த சம்பந்தர் 'அப்பரே! வேதங்கள் அருச்சித்த இறைவன் கோயிலுள் புகுந்து தடையில்லாமல் நாம் இருவரும் நேர்வாயிலில் வணங்கத் திருமுன் கதவின் திருக்காப்பு நீங்கப் பாடியருள்க' என்றார் (1532). அப்பரும் 'பண்ணினேர் மொழி' என்ற பதிகம் பாடத் திருக்காப்பு நீக்க இறைவன் காலம் தாழ்த்தினார். ஆயின் திருக்கடைக் காப்புப் பாடியதும் (1533) இறைவனருளால் அடியார் முன் திருக்காப்பு நீங்கியது. இருவரும் வீழ்ந்து வணங்கினர் (1534). கோயிலுள் சென்று சம்பந்தர் எனபுருகப் பல பதிகங்கள் பாடினார் (2483). (அவை கிடைத்தில.) வணங்கிப் புறத்தே வந்த பின் இறைவனருளால் திருக்கதவு திறந்துமடைத்தும் செல்லச் சம்பந்தரிடம் கதவடைக்கப் பாடி அருள வேண்டினார் (1536). சம்பந்தர் 'சதுரம் மறை' என்ற பதிகம் பாடும் அவ்வளவில் இறையருளால் திருக்காப்புச் செய்தது (1537). இருவரும் இறைவன் அருள் பெற்றதற்கு மகிழ்ந்து பதிகம் நிரம்பச் சம்பந்தர் பாடினார் (1538).

இச்செயல் கண்டு அடியார்கள் அதிசயத்து இருவர் திருவடி யில் வீழ்ந்து வணங்கினர். அப்பரும், சம்பந்தரும் தங்கு தற்குத் திருமடத்தை அடைந்தனர் (1539). அங்கொருபால் துயில் கொள்ளுமுன் அப்பர் தாம் கதவு திறக்க மிக அரி தின் முயன்று பாடவும், சம்பந்தர் அடைக்கப் பாடிய எளி மையும் கருதி, இறைவன் உள்ளம் அறியாது அயர்ந்ததற் குக் கவலைப்பட்டார் (1540). இவ்வூரிறைவன் அடியை மனத்தில் எண்ணித் துயின்ற அப்பர் கனவில் வெண்ணீறு புனைந்த கோலமொடு இறைவன் தோன்றி 'வாய்மூரில் இருப்போம் தொடர வா' என்றருளினார் (1541). அதை உணர்ந்து இவ்வூரைவிட்டுச் செல்ல இறைவன் முன்காட் டிய வேடத்துடன் முன்னே சென்றார் (1542). பொன்மய மான கோயிலைத்தோற்றுவிக்க அதனுள் அப்பரும் சென் றார். அது கேட்டுச் சம்பந்தரும் அங்கு வந்தார் (1544). அப்பர் இறைவன் மறைந்தது கண்டு வருந்திச் செவ்வி அறியாது திறப்பித்த தனக்கல்லது தொண்டுறைக்கப் பாடி அடைப்பித்த சம்பந்தர்க்கும் மறைவது ஏன் என்று, 'எங்கே என்னை' என்ற பதிகம் பாடினார் (1545). இறை வன் இருவர்க்கும் நேரே காட்சியருளப் 'பாடவடியார் பரவக் கண்டேன்' என்ற பதிகம் பாடினார் அப்பர் (1546). பின்னர் இருவரும் வாய்மூரடிகள் அடிபோற்றித் திருமறைக் காடெய்தி இறைவனடி பணிந்தனர் (1548). இங்கு இறை வனைப் பணிந்து திருப்பணி செய்திருக்கும் நாளில் பாண்டி மாதேவி மங்கையர்க்கரசியாலும், அமைச்சர் குலச்சிறையா ராலும் விடுத்த சிலர் சம்பந்தரைக் காண இவ்வூர்க்கு வந்த னர். சம்பந்தர் அடி வணங்கிச் சமண் சமய நெறி நீக்கிச் சைவம் வளர்க்க வேண்டினர். சம்பந்தர் சைவநெறி விளக்க எழுந்தார் (1551). அப்பர் சமணர்களின் மாயை கூறிச் சம்பந்தர் செல்லுதற்கு இசையவில்லை (1552). ஆயின், சம்பந்தர் அமண் தீங்கு அழிவித்துச் சைவநெறி வளர்த் தன்றி ஒன்றும் செய்யேன் என அப்பர் மீது ஆணையிட்டு மொழிந்தார் (1553). அப்பர் தாமே செல்வதாகக் கூறியும், அவரைத் தடுத்துக் கோளறு பதிகமாம் 'வேயுறு தோளிபங்கன்' என்ற பதிகம் பாடிச் (2514) சம் பந்தர் தாமே பாண்டி நாட்டிற்குச் சென்றார் (1554).

சம்பந்தர் சென்ற பின் அப்பர் மேற்கொண்ட பேரன் பினால் இவ்வூரில் வீற்றிருக்கும் இறைவனைப் போற்றித் துதித்து 'இந்திரனோடு', 'தேரையும்', 'தூண்டு சுட ரனைய' என்னும் பதிகங்கள் பாடித் துதித்துத் தங்கியிருந் தார் (1555). சோலை மறைக்காட்டிலமர்ந்த இறைவனின் அருள்பெற்றுச் சென்றார் (1556).

இச்செய்திகள் திருஞானசம்பந்தர் புராணத்திலும் கூறப்பெறும் (2473-2516) இவ்வூரில் சம்பந்தர் 'சிலை தனை', 'பொங்குவெண் மணற் காவல்', 'கற்பொலி' எனும் பதிகங்கள் பாடி வணங்கினார் (2496).

இவ்வூர்க்குச் சுந்தரரும் சேரமான் பெருமாள் நாய னாரும் சென்றனர் (3832). கடல் வலம் கொள்ளும் இவ் வூர் இறைவன் கோயில் சென்று அப்பர் திறக்கவும், சம்பந்தர் அடைக்கவும் பாடிய திருவாயில் அடைந்து, கணணீர் பொழிய அந்நாயன்மார் இருவரையும் இறைஞ்சி னர் (3833). வேதங்கள் அருச்சித்த இவ்வூர் இறைவனை இறைஞ்சி வீழ்ந்து பணிந்து போற்றி 'யாழைப் பழித் தன்ன' என்று பதிகம் பாடினார் சுந்தரர். சேரமான் தாம் பாடிய 'பொன்வண்ணத்தந்தாதி'யில் இறைவனைச் சிறப் பித்துப் பாடியவற்றை இங்கு ஓதித் திளைத்தார் (3834). இருவரும் சிலநாள் செழிப்பான குளிர்ந்த வயல் சூழ்ந்த இவ்வூரில் விரும்பியமர்ந்திருந்தனர் (3835).

(வேதங்கள் பூசித்ததால் திருமறைக்காடு என்ற பெயர் பெற்றது த. ஊ. பே. 1976, ப. 158. வேதாரணியம் என வழங்கப் பெறும். இங்கு மாவலி முற்பிறப்பில் எலியா யிருந்து திருவிளக்கில் நெய்யுண்ணப் போய் மூக்கைச் சுடர் சுட்டிடக் கனன்று தூண்ட விளக்கெரிந்தது. நினை யாமற் செய்தாலும் சிவ புண்ணியத்தால் மறுபிறவியில் மாவலிச் சக்கரவர்த்தியாய்ப் பிறந்தார். அப்பர் திருக் குறுக்கை வீரட்டப்பதிகம் 'நிறைமறைக்காடு' - 8 (மூவர் தேவாரம் - தலமுறை. 1968, ப. 256.).

உமை மணத்தின்போது வடதிசை தாழத் தென் திசை

உயர்ந்தது. அதனைச் சமன்படுத்த அகத்தியர் தெற்கே வந்து சிவன் திருமணக் காட்சியைக் கண்ட தலம் இது. ஆதி இராமன் பூசித்துப் பழி நீங்கிய எனப்படும் பிரமன், விசுவாமித்திரர் போன்றவர் பூசித்த தலம், முசுகுந்தர் நிலைநாட்டிய ஏழுவிடங்கத் தலங்களில் இதுவும் ஒன்று. தி. தொ. பு. III சு. உரை 1943, பக். 487 - 488).

[திருத்துறைப் பூண்டிச் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 35 கி. மீ. இல் உள்ளது.]

# மா

**மாகறல்: (திருமாகறல்)**

தொண்டை நாட்டில் உள்ள ஊர்.

சேயாற்றின் வடகரையில் உள்ளது. திருஞானசம்பந்தர் இறைவன் வீற்றிருக்கும், வயல்கள் சூழ்ந்த இவ்வூரை வணங்கி, 'விங்கு விளை கழனி' என்ற பதிகம் பாடிச் சென்றார் (2882).

(இங்குள்ள சிவலிங்கத் திருமேனி உடும்பின வண்ணமாகிய சுயம்பு வடிவம். இராசேந்திர சோழனுக்கு இறைவன் பொன்னுடும்பாகத் தெரிந்தார். அவன் துரத்தப் புற்றில் ஒளிந்து வெளிப்பட்டார் என்பர். தி. தொ. பு. V சு. உரை, 1950, ப. 1249).

[காஞ்சிபுரம் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 16 கி. மீ. இல் உள்ளது.]

**மாணிக்கவெற்பு: (திருவாட்போக்கி, இரத்தினகிரி)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள தலம்.

திருஞானசம்பந்தர் கொங்குநாடகன்று மாணிக்க வெற்பை வணங்கினார் (2237).

(இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 32 கி. மீ. இல் உள்ளது.]

**மாணிகுழி: (திருமாணிகுழி)**

நடுநாட்டில் கெடில நதியின் தென்கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர் சென்று இறைவனை வணங்கினார் (1401). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர், நிலைபெற்ற தொண்டர்களுடன் இவ்வூர் இறைவன் மீது 'பொன்னியல் பொருப்பரையன்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2860).

மாவலிச் சக்கரவர்த்தியிடம் வாமன உருவுடன் சென்று மூன்றடி மண் கேட்ட திருமால் வழிபட்ட இவ்வூரைச் சுந்தரர் சென்று சேர்ந்தார் (236). இவ்வூர் இறைவனைப் பணிந்து அவரடி நினைந்து சென்றார் (237). (சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 126).

[கடலூர்ச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**மாதோட்டம்:**

கடல் நான்கு பக்கமும் சூழ்ந்து ஒலிக்கும் ஈழ நாட்டில் உயர்ந்த மாடங்கள் உள்ள ஊர் மாதோட்டம். இவ்வூரில் உள்ள கோயிலின் பெயர் கேதீச்சரம். இதிலுள்ள இறைவனடியைத் தமிழகத்திலுள்ள சேதுக்கரையிலிருந்த வண்ணம் திருஞானசம்பந்தர் 'விருதுகுன்ற மேருவினார்' என்ற பதிகம் பாடி நினைந்து மிகப் பணிந்தேத்தி வணங்கினார் (2788).

இராமேச்சரம் சென்று தங்கிய சுந்தரர் அங்கிருந்த வண்ணமே மாதோட்டத் திருக்கேதீச்சரம் சார்ந்த

இறைவன் மீது 'நத்தார்படை' என்ற பதிகம் பாடிக் கடல் இடைப்பட்ட தூரத்தே நின்றபடி தொழுதார் (3856).

(ஆதிசேடன் மேருமலையிலிருந்து பறித்த சிகரங்களுள் ஒன்றை நிலை நாட்டினான். இங்கு வந்து துவட்டா எனும் முனிவர் தவம் செய்து நற்பேறு பெற்றார். அதனால் இவ்வூர் மகாதுவட்டாபுரம் எனப் பெயர் பெற்று மாதோட்டம் என மருவியது என்பர். தி. தொ. பு. V சு. உரை, 1950 ப. 1128)

/ஈழம் தலைமன்னார்க்கு 32 கி. மீ. தென்கிழக்கே உள்ளது./

**மாந்துறை:**[1] (திருமாந்துறை)

சோழநாட்டில் கஞ்சனூர்க்கும் திருமங்கலக்குடிக்கும் இடையிலுள்ள ஊர்.

மேகம் தவழும் மதில் சூழ்ந்த இவ்வூர் இறைவனைச் சம்பந்தர் வணங்கிப் பதிகம் பாடிச் சென்றார் (2191). (இங்குப் பாடிய பதிகம் கிடைத்திலது.)

/ஆடுதுறை நிலையத்திற்கு வடமேற்கே 4 கி. மீ. இல் உள்ளது./

**மாந்துறை:**[2] (திருவடகரை மாந்துறை)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர். இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்று இறைவனின் திருமுன்றில் பணிந்து அழகிய நீண்ட திருமாளிகையை வலம்வந்து உட்சென்று திருமுன் வணங்கினார். சூரியன், சந்திரன், மருத்துக்கள் தொழுது வழிபாடு செய்ததைச் சிறப்பித்துச் 'செம்பொனார்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2207).

/லால்குடி நிலையத்திலிருந்து வடமேற்கே 5 கி. மீ. இல் உள்ளது./

**மாமல்லை:** **(மல்லை, மகாபலிபுரம், மாமல்லபுரம்.)**

தொண்டை நாட்டிலுள்ள கடற்கரைப் பட்டினம். சங்குகளைக் கொண்டு மேல் எழும் அலைகளை உடைய கடலில் படரும் பவளக்கொழுந்துகளின் பக்கத்தில் சந்தன மரங்களின் கிளைகளில் வளர்வதற்கிடமாகிய நெய்தல் நிலமும், குறிஞ்சி நிலமும் மயங்கிய நிலங்களும் ஆடும் நீண்ட கொடிகள் உடைய மாடங்களும் உள்ளது மாமல்லை நகரம்.

(**மகாபலிபுரம்** எனத் திரிந்து மகாபலி மன்னரோடு தொடர்புறுவதாயிற்று. த. ஊ. பே. 1976, ப. 292.)

/சென்னையிலிருந்து தெற்கே 56 கி. மீ. இல் உள்ளது.

**மாற்பேறு:** (திருமாற்பேறு)

தொண்டை நாட்டில் உள்ள ஊர். அருவிகள் அளித்த செம்மணிகளும், முல்லைநிலத்திலிருந்து வாரிக் கொண்டு வரும் மலர்களும் கலந்து ஓடைகளில் நிறைந்து ஓடி வரும் பாலாற்றங் கரையில் சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருக்கும் **திருமாற்பேறு** என்ற ஊர் ஆகும் (1108).

இவ்வூர்க்கு வந்த திருநாவுக்கரசர் 'மாணிக்குயிர்', 'பொருமாற்றின் படை', 'ஏதுமொன்று மறிவிலார்', 'பாரானை' என்ற பதிகங்கள் பாடி இறைவனை வணங்கி னார் (1592).

திருஞானசம்பந்தர், பாலாற்றின் தென்கரை வழியாக இவ்வூர் இறைவனை வணங்கி 'ஊறியார் தரு', 'குருந்தவன்' என்ற பதிகங்கள் பாடி வணங்கி (2900) இறைவன் திருவருள் பெற்றுச் சென்றார் (2901).

சுந்தரர், நிலைபெற்ற இவ்வூரை அடைந்து இறைவனை வணங்கிச் சென்றார் (3349). (இங்குப் பாடிய பதிகங்கள் கிடைக்கவில்லை.)

/அரக்கோணம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 14 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**மாறன்பாடி:**

நடுநாட்டில் உள்ள ஊர்.

பெண்ணாகடத்திலிருந்து அரத்துறை செல்லும் வழியில் திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்தார். வழிநடந்த வருத்தத்தின் சோர்வால் சூழ வரும் பரிசனங்கள் முதலி யோர் களைப்படைந்தனர். சம்பந்தர் உயர்ந்த ஐந்தெ ழுத்தை ஓதிய வண்ணம் தங்கி இருந்தார் (2089). அரத்துறை இறைவன் அளித்தருளிய முத்துச்சிவிகை, மணிக்குடை, சின்னம் ஆகியவற்றைச் சிவனடியார்கள் கொண்டு வந்து இங்குச் சம்பந்தர்க்கு அளித்தனர் (2109). இவ்வாறு நிகழ்ந்தது அம்பலத்துள் ஆடும் கூத்தன் அருள் என்று வணங்கினார். 'எந்தை யீசன்' என்ற பதிகம் பாடி இறைவனைப் போற்றினார் (2112). உலகெலாம் உய்ய ஐந்தெழுத்தோதி முத்துச்சிவிகையில் சம்பந்தர் ஏறி அருளினார். இங்கிருந்து அரத்துறைக்குப் புறப்பட்டார் (2122).

/பெண்ணாடம் நிலையத்திலிருந்து தென்மேற்கே 4 கி. மீ. இல் உள்ளது./

# மி

**மிழலை:**[1] காண்க: வீழிமிழலை

**மிழலை:**[2] இது ஒரு நாட்டின் பெயர்.

இன்றைய புதுக்கோட்டைப் பகுதியில் உள்ளது. வெள் ளாற்றை ஒட்டி அமைந்துள்ளது. இதன் தலைநகரம் பெரு மிழலை என்ற ஊராகும். இந்நாட்டில் பிறந்தவர் மிழலைக் குறும்ப நாயனார் ஆவர் (1707).

# மீ

**மீயச்சூர்:** (திருமீயச்சூர்)

காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

தூங்கானை மாடக் கோயில் உள்ளது.

இறைவன் கோயில்கள் பலவற்றைத் தொழுது சென்ற திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவனை வணங்கிக் 'காயச் செவ்வி' என்ற பதிகம் பாடியருளினார் (2435).

(இவ்வூர்க்குச் சென்ற திருநாவுக்கரசர் இளங்கோயிலில மர்ந்த இறைவன் மீது 'தோற்றுங் கோயிலும்' என்ற குறுந் தொகை பாடி வணங்கினார். மூவர் தேவாரம், 1968, ப. 707.)

[பேரளம் நிலையத்திலிருந்து மேற்கே 2 கி. மீ. இல் உள்ளது.]

# மு

**முதுகுன்றம்:** *காண்க:* முதுகுன்று

**முதுகுன்று:** **திருமுதுகுன்றம், திருமுதுகுன்று, முதுகுன்றம்.**

நடுநாட்டில் உள்ள ஊர். இங்கு மணிமுத்தாறு ஓடு கிறது. தேன்மிக்க சோலைகளில் முகில் தங்கும் திருமுது குன்றத்திற்குத் திருநாவுக்கரசர் வந்து இறைவனைப் பணிந்து (1419) 'கருமணியை' என்ற திருத்தாண்டகம் பாடி வணங்கினார் (1420).

திருமுதுகுன்றைத் தொழுது சென்று திருஞானசம்பந்தர் சேர்வாராகி (2078) 'மத்தாவரை' என்ற பதிகம் பாடி முனி வரும், தேவரும் நெருங்கிச் சென்று இறைவன் அடி பணியும் மலையிடத்து மிகுந்த அன்புடன் சென்றார் (2079). அதனை வழிபட வலங்கொண்டு 'நின்று மலர் தூவி' எனும் திரு விருக்குக்குறள் பாடிக் கோயிலை அடைந்து உள் புகுந்து இறைவனடியில் அன்பொடு வணங்கினார் (2080). எழுந்து 'முரசதிர்ந்தெழுதரு' என்ற பதிகம் பாடி வெளிப்போந்து வளமுள்ள இவ்வூரில் தங்கினார். மணிமுத்தாறு சூழ்நத

இவ்வூர் இறைவன் மீது 'தேவராயும்', 'மெய்த்தாறு', 'தேவா சிறியோம்', 'வண்ணமாமலர்' என்ற பல பதிகங்களைப் பல முறை கூறிச் சில நாள் தங்கினார் (2081).

சுந்தரர் திருமுதுகுன்றை நோக்கிச் சென்றார். அவ் வழியில் இறைவன் சுந்தரர் முன்பு வேதியராகி நின்றார் (3255). அவரிடம் முதுகுன்றூர்க்கு வழி கேட்டார். அவரோ கூடலையாற்றூர்க்குச் செல்லும் வழி எனக் கூற அவ்வூர் சென்று வணங்கி (3257) முதுகுன்றூர்ச் சேர்ந்தார்.

பெரிய நிலைகளையுடைய கோபுரத்தை வணங்கிக் கோயில் வலம்கொண்டு தொழுது வீழ்ந்து இறைவன் மீது 'நஞ்சிடை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3259). இறை வனிடம் பொருள் வேண்டிய குறிப்பொடு வணங்கி 'மெய்யை முற்ற' என்ற பதிகம் பாட (3261) இறைவன் பன்னீராயிரம் பொன் அருளினார். மகிழ்ச்சியால் அது பெற்ற சுந்தரர் இறைவனிடம் 'எனக்களித்த பொன் எல் லாம் ஆரூர் மக்கள் வியக்க அங்கே வர வேண்டும்' என வேண்டினார். இறைவனும் 'பொருளினை மணிமுத்தாற்றி விட்டு ஆரூர்க்குளத்திற் போய்க் கொள்க' என்றார் (3262). இவ்வாறு அருள் பெற்ற பின் சுந்தரர் பொன்னை மச்சம் வெட்டி எடுத்துக்கொண்டு, 'அன்று என்னை ஆட்கொண்ட அருளை இதில் அறிவேன்' என்று (3263) இறைவனை வணங்கிப் புறப்பட்டார் (3264).

பின்னர் ஆரூர்க் குளத்தில் பொன்னைத் தேடிய போது பரவை நகை செய்ய (3285) முதுகுன்றூர் இறை வன் மீது 'பொன்செய்த மேனியினீர்' எனப் பதிகம் பாடி வேண்டினார் (3286). தேவர்களறியத் திருமுதுகுன்றில் தந்த பொன்னைத் தருமாறு பலவாறு வருந்திப் பாட ஆரூர்க் குளத்தில் யாவரும் அதிசயிப்பப் பொன் திரளை எடுத்துச் சுந்தரர் கரையேறினார் (3289).

(உலகில் பிற மலைகளைப் படைப்பதற்கு முன் சிவன் இதனைப் படைத்ததால் பழமலை எனப் பெயர் பெற்றது என்பர். இன்று இது காணப்படவில்லை. த. ஊ. பே. 1976, ப. 168 - இத்தலத்தில் இறப்பவர்க்கு இறைவன் முத்தி

கொடுப்பதால் 'விருத்தகாசி' என்றும் கூறுவர். தி. தொ. பு. III சு. உரை. 1943, ப. 217.)

(இவ்வூர்க்கு வேறு பெயர்கள் பழமலை, விருத்தகிரி, விருத்தாசலம்.)

விழுப்புரம் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 55 கி. மீ. இல் உள்ள சந்திப்பு.|

**முருகன்பூண்டி: (திருமுருகன்பூண்டி)**

கொங்கு நாட்டில் உள்ள ஊர்.

சுந்தரர் சேரநாட்டில் சேரமான் பெருமாள் நாயனாரிடம் பொன் முதலிய பெற்றுச் சீருரும் திருமுருகன் பூண்டி வழிச் சென்றார் (3911). இவ்வூர் அயலே செல்லும் போது சிவபூதங்கள் வேடர் வடிவில் சென்று சுந்தரர் பொருளைக் கவர இறைவன் அருள் புரிந்தார். அவ்வாறு பூதகணம் வேடர் வடிவில் சென்று சுந்தரரின் அடியவரிடம் பொருள்களைப் பறித்தன. அடியவர்கள் சுந்தரரிடம் சென்று வேடர் பொருள் கவர்ந்ததைக் கூறினர் (3914). திருமுருகன்பூண்டியில் இறைவன் கோயிலை அடைந்தார் (3915). 'கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர்' என்ற பதிகத்தைச் சுந்தரர் பாடினார் (3917). பாடிப் பரவ இறைவனருளால் வேடுவர் பறித்த பொருள் வந்து சேர எடுத்துக் கொண்டார் (3918).

திருமுருகன்பூண்டியில் சுந்தரர் பொருளைச் சிவகணங்கள் கவர்ந்து பின் இறைவனருளால் பெற்ற அருட்செயல் பெரியபுராண நூலினகத்துப் பல இடங்களில் போற்றப் பெறுகிறது (4095, 4170).

|திருப்பூர் நிலையத்திலிருந்து வடமேற்கே 8 கி. மீ. இல் உள்ளது.|

**முல்லை:** காண்க: முல்லைவாயில்

**முல்லைவாயில்**[1]: (திருமுல்லைவாயில், முல்லை)

தொண்டை நாட்டில் உள்ள ஊர்.

முல்லை நிலமெங்கும் இடைச்சியரின் வாள் போலும் இருவிழிகளுக்குத் தோற்ற மான் கூட்டம் உள்ளன. அப் பெண்களின் இடைக்குத் தோற்ற முல்லைக் கொடிகள் எங்கும் உள்ளன. முல்லை நிலத் தெய்வம் என அருந்தமிழிலக்கணம் கூறும் திருமால் தொழும் சிவன் மகிழ்ந்து வீற்றிருக்கும் ஊர் திருமுல்லைவாயிலாகும் (1095).

கண் மறைப்புண்ட சுந்தரர் பிறர் வழி காட்ட இவ்வூர் இறைவன் மீது 'திருவு மெய்ப் பொருளும்' என்ற பதிகம் பாடும் போது 'சங்கிலிக்காக என் கண்ணை மறைத்தீர்' என்று பாடி வணங்கினார் (3431). தொண்டைமானுக்கருள் கொடுத்த இறைவன் தமக்குமருள் கொடுக்க வேண்டினார் (3431). இவ்வூர் வடமுல்லைவாயில் எனவும் வழங்கப் பெறும்.

[சென்னைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 20 கி. மீ. இல் உள்ளது.]

**முல்லைவாயில்**[2]: சோழ நாட்டில் உள்ளது இவ்வூர்.

இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'துளி மண்டியுண்டு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2025). மீண்டுமொரு முறை சென்று சம்பந்தர் இவ்வூர் இறைவனைப் பாடினார் (2027).

இவ்வூர் தென்முல்லைவாயில் எனவும் வழங்கப் பெறும்.

[சீர்காழி நிலையத்திலிருந்து கிழக்கே 12 கி. மீ. இல் உள்ளது.]

**முள்ளிவாய்க்கரை**: (திருமுள்ளிவாய்க்கரை)

சோழ நாட்டில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் ஓடம் போக்கி ஆற்றின் கரையி

லுள்ள இவ்வூரை அடைந்ததும் ஆறு பெருகி ஓடியது (2794). ஓடங்களை ஓடக்காரர்களும் கரையிலேயே நிறுத்தியிருந்தனர். அப்போது சம்பந்தர் தம் நாவலமே கோலாகக் கொண்டு 'கொட்ட மேகம்' என்ற ஈரடிமேல்வைப்புப் பாடி (2796) எதிர்கரைக்கு அடியார்களுடன் ஓடத்தில் சென்றார் (2797).

(முள்ளியாறு என்னும் இந்த ஆறு இப்போது ஓடம் போக்கியாறு என்று வழங்கப் பெறுகிறது. இதன் பெயர் இதன் கரையிலுள்ள ஊருக்கு அமைந்தது.)

[கொரடாச்சேரி நிலையத்திலிருந்து வடக்கே 4 கி.மீ. இல் உள்ளது.]

# மூ

**மூக்கீச்சரம்:** (திருமூக்கீச்சரம், உறையூர்)

சோழநாட்டில் காவிரியின் தென் கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று இறைவன் மீது 'சாந்தம் வெண்ணீறு' என்ற பதிகம் பாடிச் சென்றார் (2241).

(கோழி என்ற பெயர் இலக்கிய வழக்கில் உள்ளது. புறம். 67,8)

[திருச்சிராப்பள்ளிச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 4 கி. மீ. இல் உள்ளது.]

**மூவலூர்:** (திருமூவலூர்)

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது இவ்வூர்.

காவிரியின் கரையிலுள்ள இவ்வூர்க்குத் திருஞான

சம்பந்தர் சென்று இறைவனைப் பணிந்தார் (2334). இங்கு இறைவனைப் பரவிய மொழியால் பொருந்திய காதலி னால் போற்றிச் சென்றார் (2335).

(இப்பதிகம் கிடைக்கவில்லை.)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 4 கி.மீ. இல் உள்ளது.]

# மே

**மேலைக்காட்டுப்பள்ளி:** (மேலைத்திருக்காட்டுப்பள்ளி)

காண்க: காட்டுப்பள்ளி.

# வ

**வக்கரை:** (திருவக்கரை)

தொண்டை நாட்டில் உள்ள ஊர். திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்தார் (2861). இவ்வூர் இறைவன் மீது 'கறையணி மாமிடற்றான்' என்ற பதிகம் பாடி வணங் கினார். பின்னர் இறைவனின் இரும்பை மாகாளத்தைப் போய் வணங்கி உடனே மீண்டும் இவ்வூர்க்குத் திரும் பினார் (2862).

(வக்கிராசுரன் வணங்கிய ஊர் என்பதால் இப்பெயர் வந்தது. வக்கிரனை அழித்த பாவம் தீரக் காளி இறைவனை இங்கு வணங்கியதாகவும் கூறுவர். தி. தொ. பு. V சு. உரை. 1950, ப. 1220.)

[புதுச்சேரி நிலையத்திலிருந்து வடமேற்கே 21 கி. மீ. இல் உள்ளது.]

**வஞ்சி:**

காண்க: அஞ்சைக் களம். கொடுங்கோளூர்

மகோதை சேரநாட்டுத் தலைநகரம்.

(கொச்சி நாட்டில் - இன்றைய கேரளத்தில் ஒரு பகுதி - உள்ள திருவஞ்சைக்களமே வஞ்சிமாநகரம் என்பார் சிலர். திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த கருவூரையே வஞ்சி என்பார் வேறு சிலர். த. ஊ. பே. 1976, ப. 52).

**வடகரை மாந்துறை:** *காண்க:* **மாந்துறை²**

**வடகுரங்காடுதுறை: (திருவடகுரங்காடுதுறை)**

*காண்க:* **குரங்காடுதுறை**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஊர். திருஞானசம்பந்தர் இவ்வூரில் புகுந்தார் (2195). இவ்வூரில் வாலியார் வழிபட்ட வரலாற்றைக் 'கோங்கமே குரவமே' என்ற பதிகத்தில் உலகம் அறியும்படி சிறப்பித்துப் பாடினார். கோயிலை வலம்வந்து இறைஞ்சிப் புறப்பட்டார் (2196).

/திருவையாற்றிற்குக் கிழக்கே 11 கி. மீ. இல் உள்ளது./

**வடுகூர்: (திருவடுகூர்)**

நடுநாட்டில் உள்ள ஊர்.

நீண்ட சோலைகள் உள்ள இவ்வூரினைத் திருஞான சம்பந்தர் வந்தடைந்தார். இவ்வூர் இறைவன் மீது 'சுடு கூரெரி மாலை' என்ற பதிகம் பாடி வணங்கிச் சென்றார் (2661).

(வடு என்னும் வைரவர் இறைவனை வணங்கியதால் இப்பெயர் வந்தது. தி. தொ. பு. V சு. உரை. 1950, ப. 1218).

/புதுச்சேரி நிலையத்திற்கு மேற்கே 20 கி. மீ. இல் உள்ளது./

**வரிஞ்சையூர்:**

சோழநாட்டில் உள்ள ஊர்.

மள்ளர்கள், களையெனப் பறித்த தாமரை மலர் பொழியும் தேன், குளத்தை நிறைக்கும்; தம் செங்கோலால் எட்டுத் திக்குகளிலும் ஆட்சியின் வெற்றித் தூண்களை நாட்டிய சோழர்களின் காவிரி பாயும் நாட்டில் உள்ளது இவ்வூர் (4039). இதில் சத்தி நாயனார் வேளாண் குலத்தில் பிறந்து சிவனடிக்குத் தொண்டு செய்து வந்தார் (4040).

/திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தென்கிழக்கே 21 கி. மீ. இல் உள்ளது./

**வல்லம்:** (திருவல்லம்)

தொண்டை நாட்டில் தென்பாலாற்றின் வடகரையில் உள்ள ஊர்.

இவ்வூர் தீக்காலி என்ற அவுணனுக்குத் திருமாலின் சக்கரத்தால் வரும் தீமை நீங்க அருள்புரிதற்குரிய இடம், நல்வினையின் பயனைச் செய்யும் பெண்டிர் தோன்றிய மரபுடைய மறையவர் வாழுகின்ற ஊர் ஆகும்; திருநீற்றையும் சிவசாதனமாம் உருத்திராக்கத்தையும் போற்றிய அழகினால் விளங்கும் (1107).

கரியமால் பன்றி வடிவெடுத்துக் காண முடியாத திருவடிகளைச் சுமந்து வரும் ஆற்றல் மிக்க இளமை மிக்க விடை உடைய இறைவனின் இவ்வூரைத் திருஞானசம்பந்தர் வணங்கினார் (2901). 'எரித்தவன் முப்புரம்' என்ற பதிகம் பாடினார்.

சுந்தரர் இவ்வூருள் சென்று இறைவனை வணங்கிப் பதிகம் பாடினார் (3349). (அப்பதிகம் கிடைத்திலது.) (இவ்வூர் **திருவலம்** என வழங்கப் பெறும்.)

/காட்பாடிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 12 கி. மீ. இல் உள்ள நிலையம்./

**வலஞ்சுழி: (திருவலஞ்சுழி)**

சோழ நாட்டில் காவிரிக்குத் தென் கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர்க்கு வந்து இறைவன் மீது 'ஓதமார் கடலின் விடம்' என்ற திருக்குறுந்தொகையும், 'அலையார் புனற்கங்கை' என்ற திருத்தாண்டகமும் பாடி வணங்கினார் (1480).

திருஞானசம்பந்தர் இறைவனின் அருள் பெற்று உய்யத் தேன் மிக்க மென்மலர்களில் வண்டுகள் ஒலிக்கும் நறுமண மிக்க பொழில்கள் சூழ்ந்த திருவலஞ்சுழியை வந்தடைந்தார் (2276). அவ்வூரில் வாழும் பெருந்தவம் செய்த அன்பர்கள் சம்பந்தர் சிவிகையிலிருந்து இறங்கி அவர்கள் எதிரில் செல்ல வெண்மதியை ஒளியுள்ள வெண் முகிற் கூட்டம் சுற்றிச் சூழ்ந்தது போல் கலந்தனர் (2277). கூடிய அன்பர் தொழுதெழச் சம்பந்தர் செந்தாமரை போன்ற கைகூப்பி வந்தணைந்தார். வலஞ்சுழி இறைவன் கோயிலை அடைந்து பொன்னொளி வீசும் நீண்ட கோபுரத்தைத் தொழுது உள்ளே புகுந்தார் (2278). திரு முன்றில் வலம் வந்து உச்சி மேல் அஞ்சலி குவித்து வலஞ்சுழி இறைவன் அடியில் பெருகும் ஆதரவுடன் பணிந்தார் (2279). இறைவரை முன்னிலைப்படுத்தி 'விண்டெலா மலரவ்விரை' என்ற பதிகம்பாடி வணங்கினார் (2280). இன்னிசைபாடித் துதித்தவராய்க் கோயில் புறத்தணைந்து காவிரி சூழும் அவ்வூரில் தங்கி இறைவனை நாள் தோறும் வணங்கி 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே', 'பள்ளமதாய' எனும் பதிகங்கள் பாடி வணங்கினார் (2281). மகிழ்ந்து அப்பதியில் தங்கிய நாளில் வானத்தில் ஞாயிறு, மிதுன ஓரையில் சேர்ந்ததால் ஏழ்கடலும் தந்நீர்மை குன்றும்படி வெங்கதிர்பரப்ப வேனில் முதிர்ந்தது (2282). வெப்பத்தால் எல்லா உயிர்களும் துன்புற்றன (2284). இத்தகைய வேனிலில் சம்பந்தர் இறைவனின் வலஞ்சுழியை எண்ணத்திற் பெருகுமாறு தொழுது சென்றார் (2287).

சுந்தரர் இவ்வூர்க்குச் சென்று பெருகுமன்பால் உருகி மிகுந்த காதலுடன் இறைவனை வணங்கித் தமிழால் போற்றிப் பணிந்தார் (3222). (இப்பதிகம் கிடைத்திலது.)

(ஆதிசேடன் சிவராத்திரியில் பிலத்தின் வழியே வந்து பூசித்த தலங்களில் இதுவும் ஒன்று. அப்பிலத்தில் காவிரி இறங்கியது. மறுபடியும் காவிரி வெளிவர வேண்டி இறைவனைச் சோழன் வேண்டப் பிலத்தில் சடைத்தலையோ முடித்தலையோ பலியிட்டால் காவிரி வெளிப்படும் என அசரீரியாக இறைவன் அறிவித்தான். கொட்டையூரில் தவஞ் செய்த ஏரண்ட முனிவர் பிலத்தில் இறங்கக் காவிரி வலஞ் சுழித்துப் பெருகிற்று என்பர். இதற்குத் திரிணாவர்த்தம் என்றும் தட்சிணாவர்த்தம் என்றும் பெயருள. தி. தொ. பு. III சு. உரை 1943, ப. 342.)

/கும்பகோண நிலையத்திலிருந்து மேற்கே 7 கி. மீ. இல் உள்ளது./

**வலம்புரம்:** (**திருவலம்புரம்**)

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர்.

இங்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'கொடியுடை' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கிச் சென்றார் (2018).

சுந்தரர் மிகுந்த ஆர்வத்துடன் இவ்வூர்க்குச் சென்றார் (3300). மலை போன்ற மதிலுள்ள இவ்வூரின் இறைவனின் அடி வணங்கிச் சொல்லும், பொருளும் ஒத்தியைந்த 'எனக்கினி' என்ற பதிகம் பாடி வணங்கிச் சென்றார் (3301).

மேலப்பெரும்பள்ளம் என்பது பாடல் பெற்ற திருவலம்புரத்துக்கு இப்பொழுது வழங்கும் பெயர் த. ஊ. பே. 1976, ப. 86)

/சீர்காழி நிலையத்திலிருந்து தென்கிழக்கில் 14 கி. மீ. இல் உள்ளது./

**வலிதாயம்:** (**திருவலிதாயம்**)

தொண்டை நாட்டிலுள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்து இறைவனை வணங்கிப் 'பத்தரோடு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2928).

(இன்று, பாடி என வழங்கப் பெறும் த. ஊ. பே. 1976, ப. 13.)

/சென்னைச் சந்திப்பிலிருந்து தென்மேற்கே 15 கி. மீ. இல் உள்ளது./

**வலிவலம்:** (திருவலிவலம்)

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர். இங்கு மாடக்கோயில் அமைந்துள்ளது.

திருநாவுக்கரசர் இவ்வூரை நினைந்து சென்று இறைவன் அடிகளை மகிழ்ந்து 'நல்லான் காண்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (1493).

செழிப்பு மிக்க இவ்வூர்க்குச் சென்ற திருஞானசம்பந்தர் 'பூவியல்', 'ஒல்லையாறி' என்ற பதிகங்கள் பாடி வணங்கிச் சென்றார் (2413).

அளவில்லாத அன்பினால் உள்ளம் மகிழ இறைவர் மேவும் இவ்வூரைச் சுந்தரர் அடைந்து 'ஊனங்கத்து' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3197).

(வலியான் என்ற கரிக்குருவி இறைவனை இங்கு வணங்கியதால் இவ்வூர்க்கு இப்பெயர் வந்ததென்பர். தி. தொ. பு. IV சு. உரை. 1949, ப. 620).

/திருவாரூர்ச் சந்திப்பிற்குத் தென்கிழக்கே 14 கி. மீ. இல் உள்ளது./

**வன்பார்த்தான் பனங்காட்டூர்:** (திருவன்பார்த்தான் பனங்காட்டூர்).

காண்க: பனங்காட்டூர்

# வா

**வாஞ்சியம்:** **(திருவாஞ்சியம்)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

சேல்மீன்கள் உலாவும் குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த இவ்வூரைத் திருநாவுக்கரசர் சேர்ந்தார் (1481). இங்கு அவர் 'படையும் பூதமும்' என்ற பதிகம் பாடி வணங்கினார். மீண்டும் ஒரு முறை அழகிய குளிர்ந்த நீர் சூழ்ந்த இவ்வூர்க்கு வந்து இறைவனைத் துதித்துச் சென்றார் (1528).

திருஞானசம்பந்தர், அழகிய இப்பழம்பதியைச் சென்றடைந்தார் (2470). நிலைபெற்ற இவ்வூரிலமர்ந்த இறைவனை 'வன்னி' என்ற பதிகம் பாடி வணங்கிப் போற்றினார் (2471).

சுந்தரர் இவ்வூர்க்குச் சென்று 'பொருவனார்' என்ற பதிகம் பாடி இறைவனை வணங்கி இங்குத் தங்கியருளினார் (3214).

/நன்னிலம் நிலையத்திற்கு மேற்கே 10 கி. மீ. இல் உள்ளது./

**வாதாவி:**

தமிழகத்துக்கு வடக்கே உள்ள ஊர். பரஞ்சோதி என்னும் சிறுத்தொண்ட நாயனார் பல்லவ மன்னனுக்குப் படையெடுத்து வடபுலத்திலே உள்ள இந்தப் பழைய நகரத்தைத் தூளாகும்படி யானைப் படைகளைக் கொண்டு அழித்து இங்கிருந்து பல மணிகளும், நிதிக் குவியலும், யானைகளும், குதிரைகளும் இன்னும் இவை போன்ற எண்ணற்றவற்றையும் இவ்வூரிலிருந்து கைக்கொண்டார் (3665).

(முன்னைய சாளுக்கிய நாட்டின் தலை நகர்)

/ கூப்ளி சந்திப்பிற்கு வடமேற்கே 96 கி. மீ. இல் உள்ளது. /

**வாய்மூர்:** *(திருவாய்மூர்)*

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். 'தென்திருவாய்மூர்' என வழங்கவும் பெறும். முசுகுந்தர் நிலை நாட்டிய ஏழு விடங்கத்தலங்களில் ஒன்று.

திருநாவுக்கரசர் மறைக்கதவு அரிதிற் திறந்த நிகழ்ச்சியை எண்ணி வருந்தித் திருமறைக்காட்டிறைவனை மனத்தில் நினைந்து துயிலும்போது இறைவன் தன் வெண்ணீறு புனைந்த கோலத்தில் தோன்றி 'வாய்மூரில் இருப்போம் தொடரவா' என அருளினார் (1541). துயிலிலிருந்து நினைவு வர, இறைவன் 'தன்னை அங்கே வா என்று போனார் அது என் கொலோ' என 'எங்கே யென்னை' என்ற பதிகம் பாடினார்.

'இது இறைவன் அருள் எனில் யானும் போவேன்' எனத் திருமறைக்காட்டை விட்டு விரைந்து போனார். அவர் முன் இறைவன் முன்காட்டிய வேடத்தால் எழுந்தருளினார் (1542). அமுது கிடைத்தும் உண்ண முடியாதது போல அவரைத் தொடர்ந்து சென்றும் அடைய முடியவில்லை (1543). அணித்தே காட்சி கொடுப்பார் போலப் பொன்னின் கோயில் ஒன்று எதிரே காட்டி அதனுட் புகுந்தார். அவரைத் தொடர்ந்த செய்தி கேட்டுச் சம்பந்தரும் அங்கு வந்து சேர்ந்தார் (1544).

திருநாவுக்கரசர் அண்மையில் வருவார் போல இறைவன் மறைந்தது கண்டு வருந்தினார். செவ்வி அறியாது மறைக்கதவம் திறப்பித்த எனக்கு ஒளித்தல் அல்லாமல் தொண்டின் உறைப்பித்த சம்பந்தர் உப்பால் உள்ளார். இனி மறைவது எவ்வாறு என்றார் (1545). திருஞான சம்பந்தர்க்கு இறைவன் காட்சி தரப் பணிந்து அதைத் திருநாவுக்கரசரும் காணக் காட்டியருள அவர் 'பாட அடியார்' என்ற பதிகம் பாடி வணங்கினர் (1546). தமிழ் மாலையை ஏற்றுக் கொண்ட இறைவன் மறைய அப்பர் திருவாய்மூர் அடைந்து திருக்கோயிலை வலம்வந்து தொழுது போற்றி அன்பு பெருக அந்நகரில் உடனுறைந்தார் (1547).

திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் உடனங்கிருந் தனர். அன்பு பெருக வாய்மூர் இறைவன் அடிபோற்றி மூண்ட அன்பால் மொழி சாத்தினர். பின் அவ்வூரிலிருந்து திரும்பினர் (1548).

இச் செய்திகள் மீண்டும் திருஞானசம்பந்த நாயனார் புராணத்திலும் கூறப் பெறும். அப்பர் திருவாய்மூருக்குப் புறப்பட்ட செய்தியை அறிந்து, அவர் அங்குச் சென்ற காரணம் அறியாது ஐயப்பட்டுத் திருஞானசம்பந்தரும் செல்ல அவரிடத்தை அடைந்ததும் இறைவன் அம்மையுடன் கூடப் பொருந்திய ஆடல் காட்டினார். 'தளிரிள வள ரென'ப் பதிகம் பாடித் தலையால் வணங்கினார். பின் வாய்மூருக்குத் திருநாவுக்கரசரொடு சென்று இன்னியல் போடு போற்றினார் (2494). அவ்விருவரும் திருவாய்மூர் இறைவனைப் பாடிப் பரவித் தங்கினார்கள் (2495).

/திருத்துறைப்பூண்டிச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 12 கி.மீ. இல் உள்ளது./

**வாரணாசி: (அவிமுத்தம், காசி)**

வடநாட்டில் கங்கைக் கரையில் உள்ள ஊர்.

கைலாயம் காணச் சென்ற திருநாவுக்கரசர் கங்கையை அடைந்து இறைவன் வீற்றிருக்கும் வாரணாசியை விருப்பத் துடன் பணிந்து சென்றார் (1618).

(காசி என்று வழங்கப் பெற்றது. வரணை, அசி எனும் இரு ஆறுகள் இவ்வூரினைத் தெற்கும் வடக்குமாகச் சூழ்ந் திருப்பதால் இப்பெயர் பெற்றது என்பர். தி. தொ. பு. III சு. உரை 1943, ப. 593).

/வட இந்தியாவில் அலகாபாத்திற்கு கிழக்கே 120 கி.மீ. உள்ள நிலையம்./

**வாழ்கொளிபுத்தூர்: (திருவாழ்கொளிபுத்தூர்)**

சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர்.

மதில் சூழ்ந்த அழகிய ஊராம் இவ்வூர்க்குத் திருஞான சம்பந்தர் சென்றார் (2149). சீர் வளரும் இவ்வூர்க் கோயிலை அடைந்து கருங்குவளை மலர் போல் கரு நிறம் வளரும் கண்டத்தை உடைய இறையவர் அடிகளைப் பணிந்து காண்பவராகிப் பார் புகழும் பதிகமாம் 'பொடி யுடை மார்பினர்' என்ற பதிகம் பாடினார் (2150).

சுந்தரர் இவ்வூருக்குப் போகாமல் செல்லும்போது மறுபடியும் நினைந்து 'தலைக்கலன்' என்ற பதிகம் பாடி (3272) இங்குச் சென்றார். கோயில் வாயிலில் சென்ற போது மயிர்ப் புளகம் உண்டாக வணங்கி உட்சென்று அன்பால் போற்றினார். பின்னர் அழகிய கரும்பு வயல் சூழ்ந்த இவ்வூரை விட்டுச் சென்றார் (3273).

(இன்று **'வாளொளிபுத்தூர்'** எனவும், **'வாளப்புற்றூர்'** எனவும் மருவி வழங்குவர். **'அரதனபுரம்'** என்னும் மற்றொரு பெயரும் உள்ளது.)

[வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து மேற்கே 8 கி. மீ. இல் உள்ளது.]

**வான்மியூர்: (திருவான்மியூர்)**

தொண்டை நாட்டில் உள்ள இவ்வூர் மணமிக்க மலர்கள் விளங்கும் குளிர் சோலைகள் சூழ்ந்தது (1117).

பக்கத்தில் பெருங்கடல் சூழ்ந்த இவ்வூர்க்குத் திருநாவுக்கரசர் வந்து சேர்ந்தார் (1595). இவ்வூர்க் கோயிலிலுள்ள இறைவனை அடைந்து பணிந்து அன்புடன் 'விண்டமா மலர்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (1596).

திருஞானசம்பந்தர் இவ்வூரை அடைந்தார் (3018). இவ்வூர்த் திருத்தொண்டர் சிறப்பாக எதிர்கொள்பவராகி மங்கல அணிகளைத் தெருக்களில் வரிசையாக வைத்து எதிர்கொண்டனர். சிவிகையிலிருந்து இறங்கிய சம்பந்தர் அவர்களை வணங்கினார். அன்பு தந்து அருளும் இறைவனின் மணிநெடுங்கோபுரமும் சேர்ந்தார் (3019). அதை

வணங்கித் திருமுன்றில் புகுந்து கோயிலை வலம் வந்து உள்ளே சென்றார். இறைவன் அடி பணிந்தார் (3020). தாழ்ந்து பல முறைபணிந்து இறைவன் முன் 'கரையுலாம்' என்ற பதிகத்தை வினாவுரையால் சாத்தி மிக இன்புற்றார் (3021). பரவும் இன்பம் நிறைந்து கண்ணீர் துளிப்ப மயிர்ப்புளகம் விளங்க வெளியே வந்து கடல் சூழ்ந்த இவ் வூரில் சிலநாட்கள் தங்கினார். 'விரையார் கொன்றையி னாய்' எனும் பதிகம் பாடிப் பல தலங்களை வணங்க இவ்வூரைவிட்டுச் சென்றார் (3023).

(இன்று சென்னையின் தென்பகுதியாக உள்ளது இவ் வூர். வான்மீக முனிவர்க்கு அருள் செய்ததால் இப்பெயர் பெற்றது என்பர். தி. தொ. பு. III சு. உரை 1943, ப. 561.)

[சென்னைச் சந்திப்பிலிருந்து தெற்கே 13 கி. மீ. இல் உள்ள பகுதி.]

# வி

**விசயமங்கை:** (திருவிசயமங்கை)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர்.

இறைவன் மேவிய பெருமை மிக்க திருவிசயமங்கைக் குத் திருஞானசம்பந்தர் சென்றார் (2136). அந்தணர்கள் வாழும் அவ்வூரில் இறைவனின் தனி ஆலயத்தை அடைந்து தாழ்ந்து வந்தனை செய்தார். 'மருவமர்' என்ற பதிகத்தில் கோதனத்தைச் (பசுக்கள் வழிபட்ட) சிறப்பித்துப் பாடி னார் (2137). பின்னர் இவ்வூரை விட்டகன்றார் (2138).

(பஞ்ச பாண்டவரில் அருச்சுனனாம் விசயன் வழிபட்டு வரம் பெற்றதால் இப்பெயர் பெற்றது என்பர். தி. தொ. பு. IV சு. உரை. 1949, ப. 268).

[கும்பகோண நிலையத்திற்கு வடமேற்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**வியலூர்: (திருவியலூர்)**

சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூரிலுள்ள இறைவனைப் போற்றி இனியஇசை பொருந்திய 'குரவங்கமழ்' எனும் பதிகம் சாத்தினார். அப்போது இறைவன் அருள்வேடம் காட்டித் தொழுதார் (2192).

(இப்போது திருவிசநல்லூர் என்ற பெயரில் வழங்கப் பெறுகிறது.)

[கும்பகோண நிலையத்திற்கு வடகிழக்கே 6 கி. மீ. இல் உள்ளது.]

**விளநகர்: (திருவிளநகர்)**

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று மெய்யான காதலில் இவ்வூர் இறைவன் அடியை அடியாருடன் பணிந்து 'ஒளிரிளம் பிறை' என்ற பதிகம் பாடிப் பணிந்து சென்றார் (2338).

(விளநகர் என வழங்கும் விளைநகரில் அமைந்த கோயில் திருஞாழற் கோயிலாகும். த. ஊ. பே. 1976, பக். 218-219)

[மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து வடகிழக்கே 7 கி. மீ. இல் உள்ளது.]

**விளமர்: (திருவிளமர்)**

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர், செல்வம் நிறைந்த இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கிப் பதிகம் பாடிச் சென்றார் (1482). (அப்பதிகம் கிடைத்திலது.)

திருஞானசம்பந்தர் இங்குச் சென்று இறைவனைப் போற்றி 'மத்தக மணி பெற' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2471).

[திருவாரூர்ச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 3 கி. மீ. இல் உள்ளது.]

**விற்குடி: (திருவிற்குடி)**

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். சிவபெருமானின் வீரச் செயல் நிகழ்ந்த எட்டுத் தலங்களில் இதுவும் ஒன்று.

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்று இறைவனைப் பணிந்து போற்றி 'வடிகொண் மேனியர்' என்ற பதிகம் பாடி வணங்கினார். பின்னர்ப் பற்பல ஆயிரம் தொண்டரோடும் திருவாரூர் இறைவனை எண்ணிப் 'பாடல வான் மறை' என்ற பதிகம் பாடிக் கொண்டே சென்றார் (2395).

(சலந்தரனை அழித்த ஊர். எனவே இது விற்குடி வீரட்டம் எனப் பெறும். சிவப்பதிகள் வரலாறு, கழகம், சென்னை, 1977, ப. 72)

[திருவாரூர்ச் சந்திப்பிற்கு வடகிழக்கே 10 கி. மீ. இல் உள்ளது.]

**விற்கோலம்: (திருவிற்கோலம்)**

தொண்டை நாட்டில் உள்ள ஊர்.

கூகம் என்னும் ஊரிலுள்ள இக்கோயிலின் பெயராக இது உள்ளது.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குத் தொண்டர் சூழச் சென்று பணிந்தார். திரிபுரம் எரித்த செயலினை 'உருவினாருமையோடு' என்ற பதிகம் பாடினார் (2903).

(இங்கு இறைவன் வில்லேந்திய கோலத்துடன் வீற்றி

ருந்ததால் இது இப்பெயர் பெற்றது. புரமெரித்த வரலாறு இப்பதிகத்தின் 2,6,7,9 ஆகிய பாடல்களில் உள்ளன. (மூவர் தேவாரம், 1968, பக். 1337-38)

கூகம் என்பது இப்போது கூவம் என வழங்கப் பெறுகிறது. (த. ஊ. பே. 1976, ப. 267)

[சென்னைக்குத் தென்மேற்கே 48 கி. மீ. இல் உள்ளது.]

# வீ

**வீழிமிழலை:** (திருவீழிமிழலை, மிழலை)

சோழ நாட்டில் உள்ள ஊர்.

இவ்வூர்க்கு முதலில் திருநாவுக்கரசரும் பின்னர்த் திருஞானசம்பந்தரும் வந்தனர் (2437). இருவரையும் சிவனடியாரும், மறையோர்களும் நகர்ப்புறத்தே வந்து எதிரே தொழுதனர். இருவரும் ஊரினுள் புகுந்தனர் (1515).

மக்கள் மாட வீதியை அலங்கரித்திருந்தனர்; வாயில்களில் மணிவிளக்கும், வாழை கமுகும், பொற்குடமும் எடுத்திருந்தனர். வந்த இருவரும் அடியார்களுடன் விண்ணிழிந்த கோயில் வாயிலை அடைந்தனர் (1516). இறைவன் கோயிலை வலம்வந்து திருமுன்றில் வணங்கி இறைவனடிக் கீழ் விழுந்து எழுந்து விம்மினர் (1517). திருநாவுக்கரசர் 'போரானை' என்ற திருத்தாண்டகம் பாடி வணங்கினார் (1518). அழகிய நீர் வளமுள்ள இவ்வூரில் இறைவனைப் பிரிய இயலாமல் பல நாள் பயிலக் கும்பிட்டு இருவரும் இருந்தனர் (1519).

அப்போது சம்பந்தர் 'அரையர்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2440). திருநாவுக்கரசருடன், கோயிலுள் சென்று 'சடையார்' என்ற பதிகம் பாடி ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார் (2443). திருநாவுக்கரசர் ஒரு மடத்தில்

தங்கியிருக்கக் கோயிலின் வடபுறத்திலுள்ள மடத்தில் சம்பந்தர் தங்கினார் (2445).

இறைவன் மீது பெருவிருப்பங் கொண்டு காலம் தப்பாமல் திருநாவுக்கரசுடன் கூடச் சென்று சம்பந்தர் வழிபட்டு இன்புற்றிருந்தார் (2446). அருகிலுள்ள ஊர் களுக்குச் சென்று இருவரும் இறைவனை வணங்கி இவ் வூர்க்கே மீண்டும் வந்தனர் (2447). காழி அந்தணர் இவ்வூர்க்கு வந்து சம்பந்தரை அழைத்தனர். அவர்க்கு இறைவன் வீழிமிழலை விமானத்தில் தோணியிலிருந்த வண்ணம் காட்டுவதாகக் கூறினார் (2453). அவ்வாறே சம்பந்தர் கண்டு 'மைம்மரு' என்ற பதிகம் பாடி வணங்கி னார் (2455). பின்னர் அவர் வேண்டக் காழி அந்தணர் செல்லத் திருநாவுக்கரசருடன் நண்பு மிக மேவியிருந்தார் (2459).

சிலநாள் சென்ற பின் மழை சுருங்கப் பொன்னி நதியும் பருவம் மாற, உயிர்கள் எல்லாம் வறுமையால் துன்புற்றன (1520). உலகில் பஞ்சம் வர உலக மக்கள் வருந்திநைந்த னர். அடியார் இருவர் கனவிலும் இறைவன் தோன்றி 'வருந்தற்க' எனக் கூறி உலகம் அறியப் படிக்காசு வைத்தார் (1522). கோயிலின் கிழக்கேயுள்ள அபிமுக பீடத்தில் சம்பந் தர்க்கும், மேற்கே உள்ள பீடத்தில் திருநாவுக்கரசருக்கும் நாள் தோறும் படிக்காசு வைத்தருளினார் (1523).

படிக்காசினால் வளம் பெருகப் பரமன் அடியார்கள் எல்லாம் எய்தி உண்க என இருபொழுதும் பறைசாற்றிச் சோறிட்டனர்.

திருநாவுக்கரசர் திருமடத்தில் தொண்டர் உச்சிக்கு முன் திருவமுது செய்யக் கண்டு சம்பந்தர், தம் மடத்தில் உணவளிக்கக் காலம் தாழ்த்தும் காரணத்தைக் கேட்டார் (2465). இறைவன் சம்பந்தர்க்கு அளித்த காசினை ஆவணக் காரர் வாசிபட வேண்டும் என்பதும் திருநாவுக்கரசர்க்களித்த காசை விரும்பிக் கொள்வதையும் கூறினர் (2466). அதற்குரிய காரணம் திருநாவுக்கரசர் தொண்டாற் பெறும் காசென

அறிந்து, 'வாசி தீரவே காசு நல்குவீர்' எனப் பதிகம் பாடி இறைவனிடம் சம்பந்தர் வேண்டி நின்றார். அன்று கிடைத்த காசினை ஆவண வீதியார் நன்றென வாங்கிப் பொருள் அளிக்க உச்சிக்கு முன் அடியவர்க்கு அமுதளித்தனர் (2468).

காலம் மாறி மழை பொழிந்து, உலகம் குளிர்ந்து, உணவு பெருகி, நலம் சிறந்தது. திருநாவுக்கரசர் 'பூதத்தின் படையர்' என்ற திருநேரிசையும், 'வான் சொட்ட' எனும் திருவிருத்தமும், 'என்பொனே' எனும் திருக்குறுந்தொகையும், 'கயிலாய மலை', 'கண்ணவன்', 'மானேறு' முதலிய திருத் தாண்டகமும் பாடி வணங்கினார்.

இவ்வூர்க்குச் சுந்தரர் வந்த போது, மறையில் மேம் பட்ட அந்தணர்கள், தெருக்களை நன்கு அலங்கரித்து (3211) எதிரேற்றனர். சுந்தரர் வணங்கி விண்ணிலிருந்து இழிந்து வந்த ஒளிமிக்க கோயிலை வணங்கி இறைவன் அடி வணங்கி 'நம்பினார்க்கு' என்ற பதிகம் பாடி வணங்கினார் (3213). 'வாசியறிந்து காசளிக்க' வல்ல வீழிமிழலை இறைவனிடம் திருவருள் பெற்றுப்புறப்பட்டார் (3214).

[கும்பகோண நிலையத்திலிருந்து தென்கிழக்கே 14 கி. மீ. இல் உள்ளது.]

# வெ

**வெங்குரு:** *காண்க:* **கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சிர புரம், சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வேணுபுரம்.**

சோழ நாட்டில் திருஞானசம்பந்தர் பிறந்த ஊரின் பன்னிரு பெயர்களில் இதுவும் ஒன்று (1912).

இப்பெயருடன் வேந்தன் (2042, 2078) வேந்தனார் (2437) எனச் சேர்த்துச் சம்பந்தரைத் திருத்தொண்டர் புராணம் போற்றும்.

(பிரமன் இகழ அசுரகுருவாம் சுக்கிரன் இங்கு வந்து

இறைவனைப் பூசித்துத் தேவகுருவுக்கு இணையான நிலை எய்தினான். தன்னை நாகர் இகழ்ந்த பழி நீங்க இயமன் இறைவனை வணங்கி முன்னுணர்வு பெற்றான. இதனால் இப்பெயர் இவ்வூர்க்கு வந்தது என்பர். தி. தொ. பு. IV சு. உரை. 1949, பக். 23.)

[சிதம்பரம் நிலையத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது.]

**வெஞ்சமாக்கூடல்:** (திருவெஞ்சமாக்கூடல்)

கொங்கு நாட்டில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர், ஒளி வீசும் மாளிகைகள் உள்ள இவ்வூரை அடைந்து இறைவனை வணங்கினார் (2236).

இங்குச் சுந்தரர் சென்று இறைவனை வணங்கி 'எறிக்கும் கதிர்வேய்' என்ற பதிகம் பாடினார் (3246).

(வெஞ்சன் என்ற அரசனின் தலைநகர். குடகனாறும் மற்ற சிற்றாறுகளும் கூடுகின்றமையால் கூடல் என்ற பெயர் பெற்றுள்ளது.)

[கரூர் நிலையத்திலிருந்து தென்மேற்கே 20 கி. மீ. இல் உள்ளது.]

**வெண்காடு:** (திருவெண்காடு)

சோழ நாட்டில் உள்ள ஊர்.

திருநாவுக்கரசர் இவ்வூர் இறைவன் மீது 'பண்காட்டி' என்ற திருக்குறுந்தொகையும், 'தூண்டு சுடர்' என்ற திருத்தாண்டகமும் பாடி வணங்கினார். (மூவர் தேவாரம், திருப்பனந்தாள் பதிப்பு, 1968, பக். 69-73).

திருஞானசம்பந்தர் இறைவன் எழுந்தருளியுள்ள **வெண்காட்டின்** மீது நிறைந்த மெய்யன்போடு பணிவதற்குச் சென்றார் (2021). அவ்வூரிலுள்ள அடியவர்கள் சம்பந்தரை

எதிரே சென்று இன்ன தன்மையாரானார் எனக் கூற முடியாத வண்ணம் மகிழ்ச்சி பொங்க அவரை அழைத்துக் கொண்டு சென்றனர் (**2022**). சம்பந்தர் கோயில் கோபுரம் முன்பு மனத்தில் பொங்கிய மகிழ்ச்சியுடன் சென்று தாழ்ந்து எழுந்தார். அடியவர்கள் சூழக் கோயிலை வலம் வந்து இறைவன் முன் சென்று தொழுது வீழ்ந்தார் (2023). உண்மைப் பொருளாய் உள்ள இறைவன் மீது 'கண்காட்டு நுதலானும்', 'உண்டாய் நஞ்சை', 'மந்திர மறையவை' என்ற பதிகம் பாடி வணங்கினார். 'கண்காட்டு நுதலார்' என்ற பதிகத்தில் இறைவனடி சேர்க்கும் முக்குளம் பற்றிப் பாடினார் (**2024**).

சுந்தரர் இங்குச் சென்று இறைவனைப் பணிந்து 'படங்கொணாகம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (**3302**).

(சுவேதகேது என்னும் மறையவன் ஈசனை வழிபட்டுக் காலனைக் கடிந்த இடம் திருவெண்காடு என்பர் த. ஊ. பே. 1976, ப. 160).

[சீர்காழி நிலையத்திலிருந்து தென்கிழக்கில் 11 கி. மீ. இல் உள்ளது.]

**வெண்டுறை: (திருவெண்டுறை)**

சோழ நாட்டில் காவிரித் தென்கரையில் உள்ள ஊர்.

செல்வம் மலிந்த இவ்வூரினைத் திருஞானசம்பந்தர் சென்று சேர்ந்தார் (2472). இவ்வூர் இறைவன் மீது 'ஆதியன் ஆதிரையன்' என்ற பதிகம் பாடி வணங்கித் தொண்டர் குழாத்தொடும் சென்றார் (2473).

(**திருவண்டுறை** எனவும் வழங்குவர். பிருங்கி முனிவர் வண்டுருவாய் இறைவனுக்கும் அவரிடப் பக்கத்திலுள்ள அம்மைக்கும் இடையே ஊடுருவிச் சென்று தம் முறைப்படி இறைவனை மட்டும் வணங்கிய தலம் என்பர். தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 709).

[நீடாமங்கலம் சந்திப்பிலிருந்து தென்கிழக்கே 20 கி.மீ. இல் உள்ளது.]

**வெண்ணி: (திருவெண்ணியூர்)**

சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர்.

திருஞானசம்பந்தர், சோலைகள் சூழ்ந்த குற்றமில்லாத புகழ் படைத்த இவ்வூரை அடைந்தார் (2256). இறைவன் கோயிலை அடைந்து விரும்பி அன்பினால் இறையடிப் போற்றிச் 'சடையானை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2257).

(கோயில் வெண்ணி என்றும், இட்சுபுரி எனவும் வழங்குவர். தி. தொ. பு. IV சு. உரை 1949, ப. 440).

[தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து கிழக்கே 25 கி. மீ. இல் உள்ள நிலையம்.]

**வெண்ணெய்நல்லூர்: (திருவெண்ணெய்நல்லூர்)**

நடுநாட்டில் உள்ள ஊர். பெண்ணையாற்றிற்குத் தெற்கே உள்ளது,

திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவனைப் பதிகம் பாடி வணங்கினார். (அது கிடைத்திலது.)

இங்குச் சுந்தரரைத் தடுத்தாட் கொள்ள முதிய மறையவன் வடிவில் வந்த இறைவனை நோக்கிச் சுற்றிலுமிருந்த மக்கள், 'நீர் எங்குள்ளீர்? சொல்லும்' என்றனர். அதற்கு இறைவன் 'என் இருப்பிடம் வெண்ணெய்நல்லூர்' என்றான் (193). பின் நல்ல அந்தணர்கள் வாழும் அவ்வூர்க்குச் சென்று (196) சுந்தரர் தம் அடிமை, வெண்ணெய்நல்லூர்ப் பித்தனுக்குத் தம் வழி முறையும் அடிமை என ஆதிசைவன் ஆரூரன் எழுதிய ஓலை காட்டித் தடுத்தாண்டான் (205).

இறைவன் அருளியவாறு சுந்தரர், 'பித்தா பிறை சூடி' என்ற பதிகம் பாடினார் (220). 'இன்னும் உலகில் நம் புகழ் பாடு' என்று கூறி வெண்ணெய்நல்லூர்க் கோயிலாம் அருட்டுறை மேவிய இறைவன் அருள் செய்தான் (222). சுந்தரர் இறைவன் அடிமை ஆனார்.

வெண்ணெய்நல்லூரில் வேதியனாய் வந்து ஓலை காட்டிச் சுந்தரரை ஆட்கொண்ட செயலை திருப்புறம்பயம் (3251) காஞ்சி (3338) ஆகிய ஊரில் வாழ் மக்கள் எண்ணிச் சுந்தரரை வரவேற்றனர்.

சுந்தரரும் சங்கிலியை மணக்க இறைவன் துணைநின்ற போது ஓலை காட்டி ஆண்ட செய்தியைக் கூறிப் புகழ்வார் (3390). சங்கிலியிடமும் இறைவன் வெண்ணெய்நல்லூரில் தன்னை ஆளாகக் கொள்ளும் உரிமை உடையவன் எனக் கூறி மகிழ்வார் (3393). (உமையம்மை பசு வெண்ணெயால் கோட்டை அமைத்து அதில் தவம் செய்து இறைவன் அருள் பெற்றதால் இப்பெயர் வந்தது. தி. தொ. பு. I சு. உரை 1960, ப. 253).

/பண்ருட்டி நிலையத்திலிருந்து வடமேற்கே 24 கி. மீ. இல் உள்ளது./

**வெண்பாக்கம்:**

தொண்டை நாட்டிலிருந்த ஊர்.

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று இறைவன் மீது பதிகம் பாடி வணங்கினார் (2911). (அப்பதிகம் கிடைத்திலது.)

வண்டுகள் சூழும் மலர்ச் சோலைகளும் மாட மாளிகையும் அமைந்துள்ள இவ்வூர்க்குச் சுந்தரர் செல்ல அவரை இவ்வூர்த் தொண்டர்கள் எதிர்கொண்டு வணங்கினர். சுந்தரர் அவர்களுடன் இறைவன் கோயிலை அடைந்தார் (3432). கோயிலை வலம்வந்து இறைவன் கோயில்முன்

சென்று இறைக்குணங்களைப் புகழ்ந்து அஞ்சலிசெய்து தலைமேல் கைகுவித்து வணங்கிப் 'பிழையுள்ள பொறுத்திடுவர்' என்ற பதிகம் பாடி வணங்க அவர்க்கு இறைவன் ஊன்றுகோல் கொடுத்து இணக்கமிலாத மொழியால் 'யாம் உளோம் போகீர்' என்றருளினார் (3433). (இவ்வூர் இப்போது பூண்டி நீர்த்தேக்கத்துள் மூழ்கிவிட்டது.)

/சென்னைச் சந்திப்பிலிருந்து வடமேற்கே 40 கி. மீ. இல் உள்ளது./

# வே

**வேட்களம்:** (திருவேட்களம்)

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர். திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவனை வணங்கி 'நன்று நாடொறும்' என்ற திருக்குறுந்தொகை பாடி வணங்கினார் (1437).

திருஞானசம்பந்தர் இவ்வூரில் தங்கித் தில்லை இறைவன் திருக்கூத்தைக் கும்பிட்டு வந்து இறை தங்கியிருந்தார். இவ்வூர் இறைவன் மீது 'அந்தமுமாதியும்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2064). இவ்வூரிலிருந்து அருகிலுள்ள பலவூர்களுக்குச் சென்று பின் தேன்கமழும் சோலைகளை உடைய இவ்வூரைக் கடந்து புலியூர் சென்றார் (2067). (திருப்போர்க்களம், மூங்கில் வனம் எனவும் இவ்வூர் வழங்கப் பெறும். இப்போது அண்ணாமலைநகர் என்பர். ஈசனாரிடம் பாசுபதாஸ்திரம் பெறக் கருதிய அருச்சுனன் அவர் அருளைப் பெறுதற்கு நெடுங்காலம் வேட்டகளம் திருவேட்களம் என்று பெயர் பெற்றதென்பர். த. ஊ. பே. 1976, ப. 71)

/சிதம்பரம் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 2.கி.மீ இல் உள்ளது./

**வேட்டக்குடி:** (திருவேட்டக்குடி)

*சோழ நாட்டில் காவிரித் தென்கரையில் உள்ள ஊர். திருஞானசம்பந்தர் அடியவர்களுடன் இவ்வூர்க்குச் சென்று இறைவனைப் பணிந்து 'வண்டிரைக்கும்' என்ற பதிகம் பாடிச் சென்றார் (2341).*

*[காரைக்கால் நிலையத்திற்கு வடமேற்கே 10 கி.மீ. இல் உள்ளது.]*

**வேணுபுரம்:** *காண்க:* **கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சிரபுரம், சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு.**

**காழி** *எனும் திருஞானசம்பந்தர் பிறந்த ஊரிற்குரிய பன்னிரு பெயர்களுள் இதுவும் ஒன்று (1912). திருஞானசம்பந்தரை 'வேணுபுரக்கோன்' (1555) என்பதால் இவ்வூரின் சிறப்பை அறிய முடியும். 'வண்டார் குழலரிவை' என்ற பதிகத்தில் திருஞானசம்பந்தர் 'விண்டாங்குவ போல் வேணுபுரம்' என்று இப்பெயரினைக் கூறி இதன் சிறப்பைப் புலப்படுத்தியுள்ளார் (3045). (சூரபதுமனுக்கஞ்சிய தேவர் தலைவர் இந்திரன் இங்கு வந்து பூசித்த போது இறைவன் மூங்கில் (வேணு) வடிவில் தோன்றினார். தி. தொ பு. IV சு. உரை 1949, ப. 23)*

*[சிதம்பரம் நிலையத்திற்குத் தெற்கே 17 கி. மீ. இல் உள்ளது.]*

**வேணுபுரி:** *காண்க:* **வேணுபுரம்**

**வேதவனம்:** *காண்க:* **மறைக்காடு**

**வேதிகுடி:** (திருவேதிகுடி)

*சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஊர். ஏழு தலங்களுள் இதுவும் ஒன்று. திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று இறைவன் மீது 'கையது' என்ற திருவிருத்தம்*

பாடி வணங்கினார். வேத வேதியர் வாழும் இவ்வூரில் அடியார்களுடன் திருஞானசம்பந்தர் சென்று இறைவன் கோயிலை அடைந்து 'நீறுவரி' என்ற பதிகம் பாடிப் போற்றினார் (2255).

(வேதங்கள் பூசித்ததால் இப்பெயர் பெற்றது).

/ தஞ்சாவூர்ச் சந்திப்பிலிருந்து வடக்கே 10 கி.மீ. இல் உள்ளது. /

**வேள்விக்குடி: (திருவேள்விக்குடி, வேள்விகுடி)**

சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ளது. இதனையும் இதற்கு எதிர் கரையிலுள்ள **துருத்தியையும்** சேர்த்தே அடியார்கள் பாடியுள்ளனர். திருநாவுக்கரசர் இவ்வூர்க்குச் சென்று (**திருத்துருத்தி**, வேள்விக்குடிக்குச் சென்று) இறைவனை வணங்கினார் (1455). **பகலில் துருத்தியிலும்**, இரவில் இங்கும் இறைவன் இருப்பதாகத் திருஞானசம்பந்தர் 'ஓங்கி மேல்' என்ற பதிகத்தில் குறிப்பிட்டு இறைவனைப் பாடிப் பணிந்துள்ளார் (2189). இவ்வூர்க்குச் சுந்தரர் சென்று 'மூப்பது மில்லை' என்ற பதிகத்தில் **திருத்துருத்தியினையும்** கூட்டிப் பாடிப் பணிந்தார் (3275).

/ மயிலாடுதுறைச் சந்திப்பிலிருந்து மேற்கே 6 கி. மீ. இல் உள்ளது. /

**வேள்விகுடி:** காண்க: **வேள்விக்குடி**

**வேற்காட்டூர்:** காண்க: **வேற்காடு**

**வேற்காடு: (திருவேற்காடு, வேற்காட்டூர்)**

தொண்டை நாட்டிலுள்ள ஊர்.

பல மணிகளும், பொன்னும், அகிலும், சந்தனமும் அடித்துக் கொண்டு செல்லும் பாலியாற்றின் வடகரையி

லுள்ள இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்றார் (2927). கோயிலுள் சென்று 'ஒள்ளிதுள்ளக் கதி' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2928).

தொண்டை வள நாட்டில் வயல்களில் முத்துக்களைப் பரப்பும் பாலி நதியின் வடபக்கம் உள்ள நலம்கொள் பதி திருவேற்காடு. இவ்வூர்க்குளத்தில் பெண் அன்னங்கள் தாமரைப் பூக்களின் இடையே நின்றாடும். ஆடரங்குகளில் மின்கொடி போன்ற பெண்கள் ஆடுவர். துணிக் கொடிகள் விழாக்களின் போது ஆடும் (3618). செம்பொன் மதில் சூழ்ந்த இவ்வூர் மூர்க்க நாயனார் பிறந்த ஊராகும் (3619).

/சென்னைச் சந்திப்பிற்கு மேற்கே 21 கி. மீ. இல் உள்ளது./

**வைகல்: (திருவைகல்)**

சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊர். இங்குள்ள கோயில் மாடக் கோயில். (கோச்செங்கணான் கட்டியது. த. ஊ. பே. 1976, ப. 216.)

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்குச் சென்று மாடக் கோயிலினைச் சென்றடைந்தார் (2330). இக்கோயிலுள்ள இறைவனைக் கையால் தொழுது கண்ணீர் பொழிந்து 'துளமதியுடை' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2331).

/மயிலாடுதுறைச் சந்திப்பிற்குத் தென்மேற்கே 16 கி. மீ. இல் உள்ளது./

**வைகாவில்: (திருவைகாவூர்)**

சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள ஊர்.

இவ்வூர்க்குத் திருஞானசம்பந்தர் சென்று 'கோழை மிடறாக' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2138).

(புலிக்குப் பயந்த வேடன் வில்வ மரத்தின் மீதில் ஏறி இரவு முழுதும் தூங்காமல் வில்வ இலைகளைப் பறித்துக் கீழேயிருந்த சிவலிங்கத்தின் மீது போட்டுக் கொண்டிருந்த தால் முத்தி அடைந்தனன் என்பர். தி. தொ. பு. IV சு. உரை. 1949, ப. 271.)

[கும்பகோண நிலையத்திற்கு வடமேற்கே 15 கி. மீ. இல் உள்ளது.]

**வைப்பூர்:**

சோழநாட்டில் உள்ள ஊர் (2378).

வளமான பொழில்கள் சூழ்ந்தது. (இவ்வூரின் வணிகர் தலைவனான தாமன் என்பவன், தன் மருமகனுக்குத் தன் ஏழு பெண்களில் மூத்தாளைத் திருமணம் செய்வதாகக் கூறிப் பின் மணம் செய்விக்கவில்லை. தன் ஆறு பெண் களையும் பிறர்க்கு மணம் முடித்து அவனை ஏமாற்றினான் கடைசிப் பெண் அது கண்டு தன் தந்தையால் ஏமாற்றப் பட்டவனிடம் அன்பு பூண்டு தன் பெற்றோரை விட்டு அவனுடன் திருமருகல் வந்து தங்கினாள். இரவில் அவனைப் பாம்பு தீண்டிவிட இறந்தான். அதனால் வருந்திய பெண் இறைவனை நோக்கி அழுதாள். அப்போது அங்கு வந்த திருஞானசம்பந்தர் அது கேட்டு அவள் நிலையை அறிந்து வருந்தி இறைவனருள் பெறப் பதிகம் பாடிப் பாம்பின் விடத்தை நீக்கி இறந்தவனைப் பிழைக்கச் செய்து இருவரும் மணம் பூணச் செய்தார்.)

[திருமருகலுக்குத் தென்மேற்கே 24 கி.மீ. இல் உள்ளது.]

# சொல்லடைவு

## அ



## ஆ

## இ



## ஈ



## உ



## ஊ

## கா



## கீ



## கு

## சா



## சி



## சீ



## சு



## செ

## தீ



## து



## தெ

## தே



## தோ



## ந



## நா



## நி



## நீ



## நெ

## ப

## பை



## பொ



## போ



## ம



## மா

## வா



## வி



## வீ



## வெ



## வே

## வை

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| viii | 7 | திரு முறையாகும் | திருமுறையாகும். |
| | 21 | ஒள | ஒன் |
| ix | 32 | Otherthan | Other than |
| x | 3 | இலக்கியம். | இலக்கியம் |
| xv | 16 | செல்வர் | செல்வர். |
| xxiii | 10 | தண்டிநாயனார் | தண்டிநாயனார், |
| xxvi | 12 | மயானம | மயானம் |
| xxxvi | 10 | புராணழ் | புராணம், |
| | 25 | பேரும | பேரும் |
| xxxviii | 4 | சுவாமிகள் | சுவாமிகள், |
| | 6 | முதலியார் | முதலியார், |
| | 26 | சென்னை | சென்னை, |
| 2 | 25 | அரசா | அரசர் |
| 5 | 23 | அறியாத | 'அறியாத' |
| 6 | 26 | வணங்கியப்பின் திருப்புறவா | வணங்கிய பின் திருப்புறவார் |
| 10 | 28 | நிறைந்திருத்த | நிறைந்திருந்த |
| 14 | 10 | வாசநீர்; | வாசநீர் |
| | 11 | ஏந்தினர் | ஏந்தினர்; |
| 17 | 28 | தீயநெறி, | தீயநெறி; |
| 18 | 6 | ஒப்பற்றப்பதி | ஒப்பற்ற பதி |
| 19 | 24 | விரைப்பணி | விரைப்பனி |
| 22 | 23 | தூவித்' | தூவித் |
| 28 | 26 | செய்திக்கூறும் | செய்தி கூறும் |
| 29 | 5 | ஊர். | ஊர்.) |
| 31 | 9 | தேரொடு | தேரோடு |
| 36 | 11 | 'அலைவலர்' | 'அலைவளர்' |
| | 12 | 2786) | (2786) |
| | 25 | இருக்குவேளுர் | இருக்குவேளூர் |
| 37 | 3 | உளளது. | உள்ளது. |
| | 13 | சீரார் 'கழலே | 'சீரார் கழலே' |
| 38 | 4 | 'தென்னிலங்கை | 'தென்னிலங்கை' |
| 41 | 6 | கருவிகளில் | கருவிகளின் |
| | 30 | சிந்தாமணி, | சிந்தாமணி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 42 | 6 | கள், | கள் |
| 43 | 25 | பக் 11 12 | பக். 11, 12 |
| 45 | 20 | எடுத்ததலால் | எடுத்ததால் |
| 46 | 3 | வயல்களுமு | வயல்களும் |
| 47 | 9 | மாதர் | மாதர்ப் |
| 51 | 25 | ஒன்றும் | என்றும் |
| 52 | 22 | போகபீடம், | போகபீடம் |
| 53 | 32 | கண்ணமும் | சுண்ணமும் |
| 36 | 36 | (2896). | (2896) |
| 54 | 19 | திருகாமக்கோட்டத்தில் | திருக்காமக்கோட்டத்தில் |
| | 32 | (3638) | (3638). |
| 55 | 15 | பரிசி | பரிச |
| 56 | 16 | (866), | (866). |
| 57 | 6 | உள்ளது. | உள்ளது.\| |
| 60 | 26 | கரும்பு | சுரும்பு |
| 60 | 27 | கரம்பு | கரும்பு |
| 63 | 8 | பூசித்தார். | பூசித்தான். |
| 64 | 13 | (3955). | (3955), |
| | 14 | பாசரையும் | பாகரையும் |
| 67 | 14 | தோணிபுரம், | தோணிபுரம், பிரமபுரம், |
| | 14 | வேணுபுறம் | வேணுபுரம் |
| | 29 | 2064). கழுமலத்தலைவர் | 2064), 'கழுமலத் தலைவர்' |
| 68 | 6 | வாழத்தி | வாழ்த்தி |
| | 15 | (2652), | (2652). |
| 70 | 6 | கொடிமுடி | கொடுமுடி |
| 72 | 8 | அரக்கோணம் | அரக்கோணம் - |
| 73 | 28 | குவியல் | குவியல்; |
| 74 | 22 | நின்றது; | நின்றது |
| 78 | 18 | 'கற்றார்கள் | கற்றார்கள் |
| 82 | 12 | (பேருழி | (பேருழி |
| 83 | 2 | 489.) | 489. |
| 86 | 25 | என்பர் | என்பர். |
| | 26 | சந்திப்பிலிருத்து | சந்திப்பிலிருந்து |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 87 | 14 | இறைவன் | இறைவன்முன் |
| | 19 | கூடும், | கூடும் |
| | 27 | (3257), | (3257). |
| 90 | 17 | திருமுகத்தை | திருமுகத்தைத் |
| 91 | 5 | அமைந்திருந்தது | அமைந்திருந்தது. |
| 91 | 22 | பாண்டி | கொங்கு |
| 92 | 3 | மற்றும் 'பற்றை | மற்றுப் பற்றை |
| 93 | 15 | துளவ | துளுவ |
| 94 | 6 | பாதையால் | பாதையில் |
| | 9 | உள்ளது. | உள்ளது |
| | 21 | இங்குப்பாடிய | (இங்குப்பாடிய |
| 95 | 12 | சோ | சேர் |
| 96 | 20 | வாளைகள் | வாளை |
| 97 | 29 | (1413) | (1413). |
| 100 | 8 | வெங்குரு' | வெங்குரு, |
| 104 | 14 | நினைத்து | நினைத்துச் |
| 106 | 11 | மு.நூ.ப. | (மு.நூ.ப. |
| | 27 | சண்பை, | சண்பை, சிரபுரம், |
| 107 | 8 | 'சீர்திகழ் காழி | 'சீர்திகழ் காழி' |
| 109 | 23 | 'வாதாபி கணபதி | 'வாதாபி கணபதி' |
| 113 | 14 | 1263.) | 1263). |
| 115 | 8 | 'அழனீரொழிகி | 'அழனீரொழுகி |
| | 18 | சத்திப்பிலிருந்து | சந்திப்பிலிருந்து |
| 119 | 10 | உத்திர | உருத்திர |
| 120 | 17 | போலும்( | போலும். |
| 122 | 25 | அம்பலத்தாரும் | அம்பலத்தாடும் |
| 123 | 24 | சார்ந | சார்ந் |
| 126 | 21 | யாழ்ஒலி | யாழ்ஒலி, |
| 127 | 11 | முழக்கம் | முழக்கம், |
| | 27 | கள் | கன் |
| | 29 | (252.) | (252). |
| 128 | 14 | (3267), | (3267). |
| 128 | 25 | பெருமான் | பெருமாள் |
| 130 | 28 | வணங்கி | வணங்கிச் |
| 132 | 14 | சூரம்பை' | குரம்பை' |
| 135 | 16 | சண்பை, | சண்பை, சிரபுரம், |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 135 | 17 | தோணிபுரம், | தோணிபுரம், பிரமபுரம், |
| 139 | 17 | சேர்ந்தார், | சேர்ந்தார் |
| 142 | 13 | இவலூரின் | இவ்வூரின் |
| 147 | 19 | பெறுவர் | பெறும் |
| 151 | 27 | 'ஏந்தை | 'எந்தை |
| 152 | 15 | நல்வேலி | நெல்வேலி |
| | 27 | திருநெல்வேளத்தில் | திருநெல்வேலிப் |
| 153 | 10 | கீழ் | கீழ்க் |
| 160 | 4 | மறைந்ததை | மறந்ததை |
| 161 | 9 | இறைவர்க் | இறைவர்க்கு |
| 165 | 31 | தலம், | தலம். |
| 168 | 24 | பால | பால் |
| 170 | 11 | சிறுவன் | சிறுவர் |
| | 15 | இதனை | இதனைக் |
| | 20 | பெற்றோர் | பெற்றோர்க் |
| 173 | 14 | சிறுதொண்ட | சிறுத்தொண்ட |
| | 21 | பூம்புனலூர் | பூம்புகலூர் |
| | 23 | (1675), | (1675). |
| 177 | 11 | இறைவணை | இறைவனை |
| 178 | 29 | பெருமான் | பெருமாள் |
| 182 | 11 | உள்ளது.) | உள்ளது.\| |
| 188 | 6 | விருத்தம் | விருத்தமாகப் |
| 193 | 5 | உழைவாரப்பணி | உழவாரப்பணி |
| 197 | 27 | ஊர் | ஊர். |
| 198 | 3 | வணங்கினாா | வணங்கினார் |
| | 7 | தம்முன் | தம்முள் |
| 203 | 7 | 'விடலால வாயினாய்' | 'வீடலால வாயிலாய்' |
| 215 | 4 | நீங்கிய எனப்படும் | நீக்கியது எனப்படும். |
| 281 | 9 | நகரம். | நகரம் (1118). |
| 221 | 34 | ப. 168- | ப. 168. |
| 224 | 5 | 'கொட்டமேகம்' | 'கொட்டமேகமழும்' |
| 237 | 14 | 'பாடலவான் | 'பாடலனான் |
| 243 | 9 | இறையடிப் | இறையடி |
| 248 | 19 | இக்கோயிலுள்ள | இக்கோயிலிலுள்ள |
| 249 | 15 | ஏமாற்றினான் | ஏமாற்றினான். |